யின் பொருளான பரதுக்க துக்கித்வமென்பது மிகச் சிறந்த குணங்களில் முதன்மையாகக் கணக்கிடக்கூடியதேயன்றித் நிர்குணமாக ஒருவராலும் கூற வொண்ணாதது. எம்பெருமானிடத்தில் இக்குணமொன்றை மறந்துவிட்டு மற்றும் பலபல குணங்களை யிசைந்தாலும் பலனில்லை.

13. ஆனால் இங்கு ஒன்று சொல்லலாம்; பிறர்படும் துயரத்தைப் பரிஹரிக்கக்கூடிய சக்தி நமக்கில்லாமையாலே நாம் பிறர் துயரைக்கண்டு துயருறுவது ஸஹஜம்; ப்ரணதார்த்திஹரனென்று பெயர் படைத்துப் பரிபூர்ண சக்தியுக்தனான எம்பெருமான் பிறருடைய துயரத்தைக்கண்டு தானும் துயருறக் காரணமேயில்லை யென்னலாம். இங்கே அவசியம் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்களைத் தெளிவாகத் தெரிவிக்கிறோம். பிறர்படும் துயரத்தைக்கண்டு துயருறுகை என்கிற வொரு தன்மையும், பிறர்படுந் துயரத்தை நீக்கத் தக்க சக்தியுடைமை என்கிற வொரு தன்மையும் ஒன்றோடொன்று முரண்பட்டவையென்று நினைக்கலாகாது; 'அசக்தனே துயருறுவன், சக்தன் துயருறமாட்டான்' என்று நினைப்பது மருள். தன் குழந்தைக்கு ஒரு துன்பம் நேர்ந்துவிட்டால் அதனை உடனே பரிஹரிக்கக் கூடிய சக்தி மாதாவுக்கு இருக்கச்செய்தேயும் அப்படியே அத்துன்பத்தை அவள் பரிஹரித்துவிடச்செய்தேயும் 'குழந்தைக்குத் துன்பம் நேராமல் காக்கவேண்டியது நமது கடமையாயிருந்தும் ஏமாந்து போனேனே; அந்தோ! அநியாயமாய்க் குழந்தையைத் துடிக்கவிட்டோமே!' என்று பலவாறு கதறி வருந்தும்படியைக் காணாதாருண்டோ? துச்சாஸனன் கையிலே த்ரௌபதி பரிபவப்பட்டுக் கூவின போது கண்ணபிரான் ஒருவாறு அவளது துயரைத் தீர்த்திருக்கச்செய்தேயும் 'ஐயோ! அவள் கூவினபோது நான் நேரில் சென்றிருந்து உதவா தொழிந்தேனே; ஐயோ அவளுக்குப் பரிபவம் நேர்ந்து அவள் கதறினபின்பு நான் காரியம் செய்தேனேயன்றி முதல்தன்னிலே பரிபவமே அவளுக்குண்டாகாதபடி ஜாகரூகனாயிராதுபோனேனே! அவளுக்கு நான் பெரிய கடனாளியாய்விட்டேனே, என் பொறுப்பு என்னாயிற்று!' என்று, தன் காவற் சோர்வை நினைத்துத் திருவுள்ளம் நொந்து வருந்தினபடி யுண்டே; 'கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம், ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந் நாபஸர்ப்பதி'' என்பதன்றோ கண்ணபிரானுடைய திருவாசகம். மடுவின் கரையிலே முதலைதன்னாலடர்ப்புண்ட ஸ்ரீகஜேந்திராழ்வானுடைய இடரை எம்பெருமான் தீர்த்தருளினனேனும் அவன்றான் பட்ட பரிதாபம் பேச்சுக்கு நிலமன்றே. ஆழ்வானும் பட்டருமன்றோ அதையெடுத்துரைத்து உருகினவர்கள். 'கெட்டேன்! கெட்டேன்!' என்று நொந்துகொண்டே எம்பெருமான் அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்தானென்கிறார்களே. இங்ஙனே பல்லாயிர மெடுத்துக்காட்டத்தக்கவை யுண்டு. இவற்றால் பரதுக்க துக்கித்வ ரூபமான எம்பெருமானது காருணிகத்வம் அசைக்க வொண்ணாதபடி தேறிநிற்கும்.

14. இதை ஸ்ரீராமாயணத்தில் அநுபவிக்கலாமிடம் காட்டுதும் காண்மின்;— பெருமாள் ஸுக்ரீவனுக்காக வாலியைக் கொன்றார்; வாலி மாண்டபின் ஸுக்ரீவன் மிக வருந்தினான்; அவனது வருத்தத்தைக் கண்டு பெருமாள் ஆற்றகில்லாது தாமும் அபரிமிதமாக வருந்தியழுதாரென்பதைக் கூறுகின்ற வான்மீகி முனிவர் (கிஷ்கிந்-24 - 24).

" இத்யேவமார்த்தஸ்ய ரகுப்ரவீர: ச்ருத்வா வசோ வால்யநுஜஸ்ய தஸ்ய
ஸஞ்ஜாதபாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ "

என்றார். இந்த ச்லோகத்தில் "ஸஞ்ஜாதபாஷ்ப:" என்றதும் "முஹூர்த்தம் விமநா பபூவ" என்றதும் கல்நெஞ்சையுமுருக்குஞ் சொற்கள். ஸுக்ரீவனுடைய

அழுகை யெய்தும் இராமனுடைய அழுகை ஓயவில்லையென்கிறது 'ஸஞ்ஜாத பாஷ்ப:' என்பது. சிலர் உள்ளே பசையில்லாமல் வெளியில்மாத்திரம் கண்ணீரை விட்டு துக்காபிநயஞ்செய்வதுமுண்டு, அப்படியல்ல; மதியெல்லா முள்கலங்கி நின்றா ரென்கிறது 'ராமோ மூஹூர்த்தம் விமநா பபூவ' என்பது. மேலே 25-ஆம் ஸர்க்கத்தின் முதல் ச்லோகம்—"ஸுக்ரீவஞ் சைவ தாராஞ்ச ஸாங்கதம் ஸஹலக்ஷ்மண:, ஸமாந சோக: காகுத்ஸ்த: ஸாந்த்வயந் இதமப்ரவீத்" என்பது. வாலியின் மரணத்தினால் தாரைக்கும் அங்கதனுக்கும் எவ்வளவு சோகமோ அவ்வளவு சோகம் பெருமானுக்கு மிருந்ததென்கிறார் முனிவர், "ஸமாந சோக: காகுத்ஸ்த:' என்பதனால். அந்த ஸர்க்கத்தின் முடிவிலும் (52) "ஸுக்ரீவேணைவ தீநேந தீநோ பூத்வா மஹாபல:, ஸமாநசோக: காகுத்ஸ்த: ப்ரேத கார்யாண்யகாரயத்." என்று அதையே மீண்டும் மொழிகின்றார்.

15. ஸீதா விவாஹகாலத்தில் ஜனக சக்ரவர்த்தி கூறிய "இயம் ஸீதா மம ஸுதா" என்கிற ச்லோகத்தில் 'ஸஹதர்மசரீ தவ' என்று சொன்னதின் கருத்திற்கு இணங்கவும் தருமமூர்த்தியான இராமபிரானைப்பற்றிச் சில நிருபணங்களைச் செய்வோம். நாமெல்லோரும் விவாஹம் செய்துகொள்ளும்போது "இமாம் கந்யாம் தர்மப்ரஜார்த்தம் வ்ருணீமஹே" என்று சொல்லி [அதாவது, இந்தப் பெண்ணை தர்மாநுஷ்டானத்திற்காகவும் ஸந்தான அபிவிருத்திக்காகவும் பரிக்ரஹிப்பதாகச் சொல்லி] கைப்பற்றுகிறோம். நம்போல்வாருடைய தர்மாநுஷ்டானம் எதுவென்னில், இல்லறம் எனப்படுகிற க்ருஹஸ்தாச்ரம தர்மாநுஷ்டானமேயாகும். இல்வாழ்க்கைத் துணைவியாக அமைகின்ற மனைவியோடுகூடி சாஸ்த்ரோக்தங்களான தருமங்களை க்ருஹஸ்தாச்ரமிகள் அநுஷ்டித்துவருவதுண்டு. இராமபிரானுக்கு ஸீதாபிராட்டியை ஜனகசக்ரவர்த்தி கன்யகாதானம் செய்யும்போது "இயம் ஸீதா தவ ஸஹதர்மசரீ" [இராமா! நீ அநுஷ்டிக்கும் கருமத்திற்குத் துணைவியாமவள் இந்த ஸீதை] என்று சொல்லிக் கொடுத்திருக்கிறார். இராமன் அநுஷ்டிக்கும் தருமம் எதுவென்று பார்க்கவேணும். பிராட்டி இராவணனுக்கு ஹிதோபதேசம் செய்யும்போது (ஸுந்தர 21—20.) "விதித: ஸ ஹி தர்மஜ்ஞ: சரணாகத வத்ஸல:" என்று கூறுகின்றாள், பெருமானை தர்மஜ்ஞரென்று சொல்லி உடனே அதை விவரிக்கிற வார்த்தையாக 'சரணாகத வத்ஸல:' என்றுரைத்தாள். இதனால், இராமபிரான் இவ்வவதாரத்தில் கைப்பற்றின தருமம் சரணாகத பரித்ராணமே [அதாவது அடைக்கலம் புகுந்தவர்களைக் காத்தருள்வதே] என்று தேறுகின்றது. வேதாந்த தேசிகனும் தசாவதார ஸ்தோத்ரத்தில் ராமாவதாரத்திற்கு இட்ட ச்லோகத்தில் "ஸர்வாவஸ்த ஸக்ருத்ப்ரபந்நஜநதா ஸம்ரக்ஷணைகவ்ரதீ தர்மோ விக்ரஹவாந்" என்று இந்த தருமத்தை வெளியிட்டுக்கொண்டேயருளிச் செய்தார். ப்ரபந்நஜந ஸம்ரக்ஷணமே பெருமானுக்குப் பரமதர்மம். இத்தருமத்திற்குத் துணைவியாகவே பிராட்டி அமைந்தாள். ஆனது பற்றியே திருமந்த்ரார்த்தத்தில் பிள்ளைலோகாசாரியர் "ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதி வேண்டுகையாலே இதிலே ஸ்ரீஸம்பந்தம் அநுஸந்தேயம்" என்றும் "இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது, அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்றும் அருளிச் செய்துள்ளார். இது ஸ்ரீராமாயணத்தில் பலபலவிடங்களிலும் காணப்படுகிறது. கம்பராமாயணம் வாலிவதைப் படலத்தில் ஒரு செய்யுளினால் இது நன்கு மூதலிக்கப்படுகிறது.

"தோவியல்கருமமுங்கள் குலத்துதித்தோர்கட்கெல்லாம்
ஓவியத் தெழுதவொண்ணா வுருவத்தா யுடைமை யன்றோ
ஆவியைச் சனகன்பெற்ற வன்னத்தை அமிழ்தின்வந்த
தேவியைப் பிரிந்தபின்னைத் திகைத்தனை போலுஞ் செய்கை."

இச்செய்யுள் இன்சுவையே வடிவெடுத்தது. பிராட்டி அருகே யில்லாமையினால்

தாம் இராமன் வாலிவதஞ்செய்ய நேர்ந்ததென்கிற தத்துவம் இங்கு வெளியாகின்றது. இச்செய்யுளில் "தேவியைப் பிரிந்தபின்னைத் திகைத்தனை போலுஞ் செய்கை" என்றது ஸ்ரீராமாயணக்கடலில் மிக முக்யமாகக் கொள்ளத்தக்க மஹாரத்னம்போன்றவொரு சம்பிரதாயப்பொருளை யுணர்த்துகின்றது. அதைச் சிறிது விவரிப்போமிங்கு.

16. கீதாசார்யன் பகவத்கீதையில் தன்னுடைய அவதார ப்ரயோஜனத்தை அருளிச்செய்யுமிடத்து *பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்* என்கிறான். ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதும் துஷ்டர்களைத் தொலைப்பதுமாகிய செயல்களை அவதாரத்திற்குப் பயனாகக் கூறியுள்ளான். இவ்விரண்டு செயல்களும் ஸ்ரீராமாவதாரத்தில் விசேஷமாக நடைபெற்றிருப்பதை நாம் ஸ்ரீராமாயண முகத்தினால் அறிகிறோம். இதில் அரிய பெரிய விசேஷமொன்றும் தெரியவருகிறது. அது யாதெனில்; சீதாபிராட்டி இராகவனோடு கூடியிருக்குங்காலத்தில் எப்படிப்பட்ட அபராதிகளுக்கும் விநாசம் ப்ராப்தமாகிறதில்லை; பெருமாள் அவளைவிட்டுப் பிரிந்திருக்கிற காலத்தில்தான் அபராதத்தில் குறையநின்றவர்களையும் கண்ணற்றுக் கொலைசெய்து தொலைக்கிறார் என்பதேயாம். இது ஸ்ரீராமாயணத்தில் ஆதியோடந்தமாகவுள்ள கதைகளினால் நன்கு தெரிகின்றது. இராமன் முதன்முதலாகச் செய்தது தாடகையினுடையவும் ஸுபாஹு முதலிய அரக்கர்களினுடையவும் வதம். முதன் முதலாகப் பெண்கொலை புரிந்தாரென்னு மபவாதம் இற்றைக்கும் அழிந்ததில்லை. அப்படிப்பட்ட கொலைத்தொழில் செய்த காலத்தில் பெருமாளுக்குப் பிராட்டியின் ஸம்பந்தமுண்டாகவேயில்லை; பிரமசாரியாயிருக்கும்போது தானே மாமுனி வேள்வியைக் காத்தது. அப்போது பிராட்டி அருகேயிருந்திருந்தால் தாடகாவதம் நேர்ந்தேயிராது. அவள் அருகே யில்லாதது பற்றியே பெருமாள் பெண்கொலையென்றும் பாராமல் தாடகாவதம் பண்ண நேரிட்டது. பிறகு மிதிலாபுரிக்குச் சென்று பிராட்டியை மணம் புணர்ந்தார். அது முதலாகப் பிராட்டியோடு கூடியிருக்கிறவரையில் ஒரு கொலைத்தொழிலும் நடந்ததில்லை. தீவ்ரமான அபராதம் செய்தவர்களுக்கும் ரக்ஷணம் நேர்ந்திருக்கின்றதேயன்றி, கொலையென்பது ஒருவர்க்கும் கிடையாது.

17. இதன்மேல் சிலர் சொல்லக்கூடிய ஆக்ஷேபங்களையும் பிரசங்கித்துப் பரிஹரிக்கிறோம். விராதனென்னும் அரக்கனை வதம் செய்தது பெருமாளும் பிராட்டியும் கூடியிருந்த காலத்தில்தானே; கரன் தூஷணன் முதலிய பதினாலாயிரமரக்கர்களின் வதமும் பிராட்டியோடு கூடியிருக்கும்போதுதானே நடைபெற்றிருக்கிறது. ஆகவே, பிராட்டியருகே யிருக்கும்போது பெருமாள் ஒருவரையும் வதஞ் செய்ததே கிடையாதென்று சொல்லுவது எப்படிப் பொருந்தும்? என்று சிலர் கேட்கக்கூடும். அவர்களுக்குச் சொல்லுகிறோம். விராதனுடைய பிரஸ்தாவம் ஆரணியகாண்டத்தில் இரண்டாவது ஸர்க்கத்தில் வருகிறது. அங்கே கதைப்போக்கு உள்ள விதத்தை நன்கு கவனிக்கவேணும். விராதன் வந்ததும் பிராட்டியைக் கொள்ளை கொள்கிறான். பிறகு அவளை விட்டுவிட்டு ஸ்ரீராமனையும் இலக்குமணனையும் தூக்கிக்கொண்டு வேறொரு வனத்தில் நுழைகிறான். அப்போது பிராட்டி தான் தனித்து நின்றுபோனதைக் குறித்துப் புலம்புகிறாள். இவ்விஷயம், ஆரணியகாண்டம் மூன்றாவது ஸர்க்கத்தின் முடிவிலும் நான்காவது ஸர்க்கத்தின் முதலிலும் ஸ்பஷ்டமாகவுள்ளது. சீதை தன்னைத் தனியாக விட்டிட்டு ஸ்ரீராமலக்ஷ்மணர்களை விராதன் வேறொரு காட்டுக்குத் தூக்கிச் சென்றபோது 'ஓ அரக்கனே! இனி என்னைச் செந்நாய்களும் புலிகளும் சிறுத்தைகளும் கொன்று தின்றுவிடுமே; அவ்விருவரையும் விட்டு என்னைக் கொண்டுபோகலாகாதா?' என்று கதறுகின்றாள். இதனால் விராதவதம் செய்யப்படுகிற காலத்திலும் இடத்திலும் பிராட்டியின் ஸந்நிதானமில்லை யென்பது ஸ்பஷ்டமாகத் தெரிகின்றது.

தான் இராமன் வாலிவதஞ்செய்ய நேர்ந்ததென்கிற தத்துவம் இங்கு வெளியாகின்றது. இச்செய்யுளில் "தேவியைப் பிரிந்தபின்னைத் திகைத்தனை போலுஞ் செய்கை" என்றது ஸ்ரீராமாயணக்கடலில் மிக முக்யமாகக் கொள்ளத்தக்க மஹாரத்னம்போன்றவொரு சம்பிரதாயப்பொருளை யுணர்த்துகின்றது. அதைச் சிறிது விவரிப்போமிங்கு.

16. கீதாசார்யன் பகவத்கீதையில் தன்னுடைய அவதார ப்ரயோஜனத்தை அருளிச்செய்யுமிடத்து *பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்* என்கிறான். ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதும் துஷ்டர்களைத் தொலைப்பதுமாகிய செயல்களை அவதாரத்திற்குப் பயனாகக் கூறியுள்ளான். இவ்விரண்டு செயல்களும் ஸ்ரீராமாவதாரத்தில் விசேஷமாக நடைபெற்றிருப்பதை நாம் ஸ்ரீராமாயண முகத்தினால் அறிகிறோம். இதில் அரிய பெரிய விசேஷமொன்றும் தெரியவருகிறது. அதுயாதெனில்; சீதாபிராட்டி இராகவனோடு கூடியிருக்குங்காலத்தில் எப்படிப்பட்ட அபராதிகளுக்கும் விநாசம் ப்ராப்தமாகிறதில்லை; பெருமாள் அவளைவிட்டுப் பிரிந்திருக்கிற காலத்தில்தான் அபராதத்தில் குறையநின்றவர்களையும் கண்ணற்றுக் கொலைசெய்து தொலைக்கிறார் என்பதேயாம். இது ஸ்ரீராமாயணத்தில் ஆதியோடந்தமாகவுள்ள கதைகளினால் நன்கு தெரிகின்றது. இராமன் முதன்முதலாகச் செய்தது தாடகையினுடையவும் ஸுபாஹு முதலிய அரக்கர்களினுடையவும் வதம். முதன் முதலாகப் பெண்கொலை புரிந்தாரென்னு மபவாதம் இற்றைக்கும் அழிந்ததில்லை. அப்படிப்பட்ட கொலைத்தொழில் செய்த காலத்தில் பெருமாளுக்குப் பிராட்டியின் ஸம்பந்தமுண்டாகவேயில்லை; பிரமசாரியாயிருக்கும்போது தானே மாமுனி வேள்வியைக் காத்தது. அப்போது பிராட்டி அருகேயிருந்திருந்தால் தாடகாவதம் நேர்ந்தே யிராது. அவள் அருகே யில்லாதது பற்றியே பெருமாள் பெண்கொலையென்றும் பாராமல் தாடகாவதம் பண்ண நேரிட்டது. பிறகு மிதிலாபுரிக்குச் சென்று பிராட்டியை மணம் புணர்ந்தார். அது முதலாகப் பிராட்டியோடு கூடியிருக்கிறவரையில் ஒரு கொலைத்தொழிலும் நடந்ததில்லை. தீவ்ரமான அபராதம் செய்தவர்களுக்கும் ரக்ஷணம் நேர்ந்திருக்கின்றதேயன்றி, கொலையென்பது ஒருவர்க்கும் கிடையாது.

17. இதன்மேல் சிலர் சொல்லக்கூடிய ஆக்ஷேபங்களையும் பிரசங்கித்துப் பரிஹரிக்கிறோம். விராதனென்னும் அரக்கனை வதம் செய்தது பெருமாளும் பிராட்டியும் கூடியிருந்த காலத்தில்தானே; கரன் தூஷணன் முதலிய பதினாலாயிரமரக்கர்களின் வதமும் பிராட்டியோடு கூடியிருக்கும்போதுதானே நடைபெற்றிருக்கிறது. ஆகவே, பிராட்டியருகே யிருக்கும்போது பெருமாள் ஒருவரையும் வதஞ் செய்ததே கிடையாதென்று சொல்லுவது எப்படிப் பொருந்தும்? என்று சிலர் கேட்கக்கூடும். அவர்களுக்குச் சொல்லுகிறோம். விராதனுடைய பிரஸ்தாவம் ஆரணியகாண்டத்தில் இரண்டாவது ஸர்க்கத்தில் வருகிறது. அங்கே கதைப்போக்கு உள்ள விதத்தை நன்கு கவனிக்கவேணும். விராதன் வந்ததும் பிராட்டியைக் கொள்ளை கொள்கிறான். பிறகு அவளை விட்டுவிட்டு ஸ்ரீராமனையும் இலக்குமணனையும் தூக்கிக்கொண்டு வேறொரு வனத்தில் நுழைகிறான். அப்போது பிராட்டி தான் தனித்து நின்றுபோனதைக் குறித்துப் புலம்புகிறாள். இவ்விஷயம், ஆரணியகாண்டம் மூன்றாவது ஸர்க்கத்தின் முடிவிலும் நான்காவது ஸர்க்கத்தின் முதலிலும் ஸ்பஷ்டமாகவுள்ளது. சீதை தன்னைத் தனியாக விட்டிட்டு ஸ்ரீராமலக்ஷ்மணர்களை விராதன் வேறொரு காட்டுக்குத் தூக்கிச் சென்றபோது 'ஓ அரக்கனே! இனி என்னைச் செந்நாய்களும் புலிகளும் சிறுத்தைகளும் கொன்று தின்றுவிடுமே; அவ்விருவரையும் விட்டு என்னைக் கொண்டுபோகலாகாதா?' என்று கதறுகின்றாள். இதனால் விராதவதம் செய்யப்படுகிற காலத்திலும் இடத்திலும் பிராட்டியின் ஸந்நிதானமில்லை யென்பது ஸ்பஷ்டமாகத் தெரிகின்றது.

இங்கு மற்றொரு விஷயமும் முக்யமாகக் கவனிக்கத்தக்கதுண்டு; ராமலக்ஷ்மணர்கள் விராதனை எவ்வளவு நலிந்தும் அவன் மரணமடையவேயில்லை. இதை வால்மீகி முனிவரே கூறுகின்றார்—'ஸ வித்தோ பஹுபிர் பாணை: கட்காப்யாஞ்ச பரிக்ஷத:, நிஷ்பிஷ்டோ பஹுதா பூமௌ ந மமார ஸ ராக்ஷஸ:' என்றார்—பல அம்புகளைப் பிரயோகித்தும், இருவரும் இரண்டு கத்திகளினால் வெட்டியும் தரையில் தள்ளிப் பலவாறு உதைத்துங்கூட அவ்வரக்கன் மரணமடையவேயில்லை—என்பது மேற்குறித்த ச்லோகத்தின் கருத்து. பிறகு அவன் எவ்வாறு மரணமடைந்தானென்னில்; அவன் தனது வரலாறுகளைத் தானே சொல்லிக்கொண்டு 'இராமா! இப்பொழுது உன்னால் நான் ஒரு சாபத்தினின்று விடுபட்டவனாயினேன்; என்னைப் பள்ளம்வெட்டிப் புதைத்துவிடு' என்றான்; பிறகு அவ்விதமே செய்யப்பட்டிருக்கிறது. இதனால், விராதன் தன் வதையைத் தானே வேண்டிச் செய்வித்துக்கொண்டானென்பது விளங்குகின்றது. இதுவும் பிராட்டியின் முன்னிலையில் நடைபெறவில்லையென்றும் தெரிகின்றது. ஆகவே, விராதவதச் செய்தியையெடுத்துக்கொண்டு செய்யும் ஆட்சேபம் வலியற்றதென்று காட்டப்பட்டதாயிற்று.

18. இனி, பிராட்டியின் முன்னிலையிலேயே கரதூஷணாதிகளின் வதம் நடந்திருக்கின்றதேயென்கிற ஆக்ஷேபத்திற்குப் பரிஹாரம் கேண்மின்: ஜனஸ்தானத்து ராக்ஷஸப் பெருஞ் சேனைகள் இராமனைக் கிட்டிவந்தபோது இராமன் லக்ஷ்மணனை நோக்கிக் கூறியதாவது—'லக்ஷ்மணா! நீ வில்லையும் அம்புகளையுங் கொண்டு சீதையுடன் அப்பால் போய்விடு; அதோ மரங்களால் மறைக்கப்பட்டு நுழையக் கூடாமலிருக்கின்ற குகைக்குள் சீதையையு மழைத்துக்கொண்டு சென்று அவளைக் காத்துக்கொண்டிரு; தாமதம் செய்யாமல் விரைந்து செல். இத்தனை யரக்கர்களையும் நீயே வதைக்க வல்லையாயினும் இப்பொழுது நானே இவர்களையெல்லாம் கொலைசெய்யக் கருதியிருக்கின்றேனாதலால் நீ சீதையுடன் இவ்விடம் விட்டுப் புறப்பட்டுப் போய்விடு' என்று; இக்கட்டளையைச் சிரமேற்கொண்ட லக்ஷ்மணன் சீதையுடன் சென்று குகைக்குள் நுழைந்த பின்பே இராமன் கவசங்களைத் தரித்து வில்லையும் அம்புகளையுமெடுத்துக்கொண்டு போர்புரிய எழுந்தனன் என்று ஆரணியகாண்டத்து இருபத்து நான்காவது ஸர்க்கத்தில் சொல்லப்பட்டுள்ளது. 'தஸ்மாத் க்ருஹீத்வா வைதேஹீம் சரபாணிர் தனுர்தர:, குஹாமாச்ரய சைலஸ்ய துர்க்காம் பாதபஸங்குலாம், ப்ரதிகூலிதுமிச்சாமி ந ஹி வாக்யமிதம் த்வயா, சாபிதோ மம பாதாப்யாம் கம்யதாம் வத்ஸ மா சிரம்...தஸ்மிந் ப்ரவிஷ்டே து குஹாம் லக்ஷ்மணே ஸஹ ஸீதயா' என்கிற (வால்மீகி) ச்லோகங்கள் காணத்தக்கன. இதுகொண்டே வேதாந்ததேசிகர் ரகுவீரகத்யத்தில் கரவதத்தைக் கூறும்பிரகரணத்தில் 'அஸஹாய சூர!' என்றது. ஆகவே, பிராட்டியின் ஸந்நிதானமில்லாதவிடத்தே தான் கரதூஷணாதிகளின் வதம் நடந்ததென்பது விளங்கிற்று. இதற்கடுத்தபடியாக மாரீசவதம் நடந்திருக்கிறது. அப்போது பிராட்டியை விட்டுப் பெருமாள் (மாரீசன்பின்னே) நெடுந்தூர மெழுந்தருளியிருக்கிறாரென்பது அனைவருமறிந்த விஷயம். அவனை வதைக்கவேண்டியிருந்தபடியாலும், பிராட்டி அருகேயிருந்தால் அவன் வதம்பெறமாட்டானாகையாலும், இதற்காகவே அவனை வெகுதூரம் கொண்டுபோனார் பெருமாள் என்கிற மருமமும் இங்கு உணரத்தக்கது.

10. விராதவதத்திற்கும் கரதூஷணாதிவதத்திற்குமிடையில் சூர்ப்பணகாபங்கம் நடந்திருக்கின்றது. பெருமாள் தாடகையை வதஞ் செய்ததுபோல் சூர்ப்பணகையையும் வதஞ்செய்து முடித்திருக்கலாம். அப்படிச் செய்திருக்குமளவில், மேலே பெருந்தீங்கு விளையாமலுமிருக்கும். அவளை அங்கபங்கஞ்செய்து உயிரோடு விட்டதனாலன்றோ அவள் இலங்கையிற்சென்று முறையிட்டுச் சீதையின் அபஹாரத்திற்குக் காரணமாயினாள். அவளைப் பஞ்சவடியிலேயே குழிவெட்டிப் புதைத்திருந்தால் மிகவும் நலமாயிருக்குமே. ஸமர்த்தரான பெருமாள் ஏன் அது

இங்கு மற்றொரு விஷயமும் முக்யமாகக் கவனிக்கத்தக்கதுண்டு ; ராமலக்ஷ்மணர்கள் விராதனை எவ்வளவு நலிந்தும் அவன் மரணமடையவேயில்லை. இதை வான்மீகி முனிவரே கூறுகின்றார்—*ஸ வித்தோ பஹுபிர் பாணை: கட்காப்யாஞ்ச பரிக்ஷத:, நிஷ்பிஷ்டோ பஹுதா பூமௌ ந மமார ஸ ராக்ஷஸ:* என்றார்—பல அம்புகளைப் பிரயோகித்தும், இருவரும் இரண்டு கத்திகளினால் வெட்டியும் தரையில் தள்ளிப் பலவாறு உதைத்துங்கூட அவ்வரக்கன் மரணமடையவேயில்லை—என்பது மேற்குறித்த சுலோகத்தின் கருத்து. பிறகு அவன் எவ்வாறு மரணமடைந்தானென்னில் ; அவன் தனது வரலாறுகளைத் தானே சொல்லிக்கொண்டு 'இராமா! இப்பொழுது உன்னால் நான் ஒரு சாபத்தினின்று விடுபட்டவனாயினேன் ; என்னைப் பள்ளம்வெட்டிப் புதைத்துவிடு' என்றான் ; பிறகு அவ்விதமே செய்யப்பட்டிருக்கிறது. இதனால், விராதன் தன் வதையைத் தானே வேண்டிச் செய்வித்துக் கொண்டானென்பது விளங்குகின்றது. இதுவும் பிராட்டியின் முன்னிலையில் நடைபெறவில்லையென்றும் தெரிகின்றது. ஆகவே, விராதவதச் செய்தியை யெடுத்துக்கொண்டு செய்யும் ஆட்சேபம் வலியற்றதென்று காட்டப்பட்டதாயிற்று.

18. இனி, பிராட்டியின் முன்னிலையிலேயே கரதூஷணாதிகளின் வதம் நடந்திருக்கின்றதேயென்கிற ஆக்ஷேபத்திற்குப் பரிஹாரம் கேண்மின் : ஜனஸ்தானத்து ராக்ஷஸப் பெருஞ் சேனைகள் இராமனைக் கிட்டிவந்தபோது இராமன் லக்ஷ்மணனை நோக்கிக் கூறியதாவது—'லக்ஷ்மணா! நீ வில்லையும் அம்புகளையுங் கொண்டு சீதையுடன் அப்பால் போய்விடு ; அதோ மரங்களால் மறைக்கப்பட்டு நுழையக் கூடாமலிருக்கின்ற குகைக்குள் சீதையையு மழைத்துக்கொண்டு சென்று அவளைக் காத்துக்கொண்டிரு ; தாமதம் செய்யாமல் விரைந்து செல். இத்தனை யரக்கர்களையும் நீயே வதைக்க வல்லையாயினும் இப்பொழுது நானே இவர்களை யெல்லாம் கொலைசெய்யக் கருதியிருக்கின்றேனாதலால் நீ சீதையுடன் இவ்விடம் விட்டுப் புறப்பட்டுப் போய்விடு' என்று; இக்கட்டளையைச் சிரமேற் கொண்ட லக்ஷ்மணன் சீதையுடன் சென்று குகைக்குள் நுழைந்த பின்பே இராமன் கவசங்களைத் தரித்து வில்லையும் அம்புகளையுமெடுத்துக்கொண்டு போர்புரிய எழுந்தனன் என்று ஆரணியகாண்டத்து இருபத்து நான்காவது ஸர்க்கத்தில் சொல்லப்பட்டுள்ளது. *தஸ்மாத் க்ருஹீத்வா வைதேஹீம் சரபாணிர் தநுர்தர:, குஹாமாச்ரய சைலஸ்ய துர்க்காம் பாதபஸங்குலாம், ப்ரதிகூலிதுமிச்சாமி ந ஹி வாக்யமிதம் த்வயா, சாபிதோ மம பாதாப்யாம் கம்யதாம் வத்ஸ மா சிரம்...தஸ்மிந் ப்ரவிஷ்டே து குஹாம் லக்ஷ்மணே ஸஹ ஸீதயா* என்கிற (வான்மீகி) ச்லோகங்கள் காணத்தக்கன. இதுகொண்டே வேதாந்ததேசிகர் ரகு வீரகத்யத்தில் கரவதத்தைக் கூறும்பிரகரணத்தில் *அஸஹாய சூர!* என்றது. ஆகவே, பிராட்டியின் ஸன்னிதானமில்லாதவிடத்தே தான் கரதூஷணாதிகளின் வதம் நடந்ததென்பது விளங்கிற்று. இதற்கடுத்தபடியாக மாரீசவதம் நடந்திருக்கிறது. அப்போது பிராட்டியை விட்டுப் பெருமாள் (மாரீசன்பின்னே) நெடுந்தூர மெழுந்தருளியிருக்கிறாரென்பது அனைவருமறிந்த விஷயம். அவனை வதைக்கவேண்டியிருந்தபடியாலும், பிராட்டி அருகேயிருந்தால் அவன் வதம்பெறமாட்டானாகையாலும், இதற்காகவே அவனை வெகுதூரம் கொண்டுபோனார் பெருமாள் என்கிற மருமமும் இங்கு உணரத்தக்கது.

19. விராதவதத்திற்கும் கரதூஷணாதிவதத்திற்குமிடையில் சூர்ப்பணகாபங்கம் நடந்திருக்கின்றது. பெருமாள் தாடகையை வதஞ் செய்ததுபோல் சூர்ப்பணகையையும் வதஞ்செய்து முடித்திருக்கலாம். அப்படிச் செய்திருக்குமளவில், மேலே பெருந்தீங்கு விளையாமலுமிருக்கும். அவளை அங்கபங்கஞ்செய்து உயிரோடு விட்டதனாலன்றோ அவள் இலங்கையிற்சென்று முறையிட்டுச் சீதையின் அபஹாரத்திற்குக் காரணமாயினள். அவளைப் பஞ்சவடியிலேயே குழிவெட்டிப் புதைத்திருந்தால் மிகவும் நலமாயிருக்குமே. ஸமர்த்தரான பெருமாள் ஏன் அது

செய்யவில்லையென்று கேட்கில், பிராட்டி அருகேயிருந்ததுதான் இந்த இடையூறாயிற்றென்பது முக்கியமாகச் சொல்லத்தக்கது. அமுக்கியமாகச்சொல்லத்தக்கது மொன்றுண்டு; அதுவென் என்னில்; தாடகாவதத்தை விச்வாமித்திர முனிவர் கட்டளையிட்டபடியாலே செய்தார்; அங்ஙனம் சூர்ப்பணகையின் வதத்தைக் கட்டளையிட யாருமில்லாமையினால் அது நடைபெறவில்லை என்பதேயாம். இதுவுமொரு ஸமாதானமெனினும் பிராட்டி அருகேயிருந்ததுதான் வதஞ் செய்யாமைக்கு முக்கிய காரணமென்று கொள்ளத்தக்கது.

20. பிராட்டி பெருமானைவிட்டுப் பிரிந்து இலங்கை புக்கபின்பு, வாலிவதமென்கிற மிகப் பெரிய காரியம் நடந்திருக்கின்றது. இது நியாயமா; அநியாயமா? என்கிற விசாரணை இற்றைக்கும் அறாது நிகழ்ந்துவருகின்றது. வேதாந்ததேசிகர் ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் *நிரவதி குணக்ராமே ராமே* என்னும் சுலோகத்தில் இதைச் சுட்டிக்காட்டியுமிருக்கிறார். வாலிவதம் நியாயமானதே என்று பண்டிதர்கள் எவ்வளவு பொருத்தமான ஸமாதானங்கள் சொன்னாலுங்கூட, அதை ஏற்றுக்கொள்வது மேட்டுமடையாகவே காண்கிறது. "என்னை எப்படி நீ கொன்றாய்?" என்று வலிதாக ஆட்சேபித்த வாலிதானே தன்னை வதம் செய்ததற்குப் பொருத்தமான காரணமிருப்பதைக் கண்டுபிடித்துத் தானே கூறிவிட்டதாகக் கம்பர் எழுதிவைத்துள்ளாரென்பதைக் கீழேகாட்டினோம். *தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலுஞ் செய்கை* என்பதே அது. 'இராமா! இப்போது பிராட்டி அருகேயிருந்தாளாகில் அநீதியான இவ் வதத்தை நீ செய்திருக்கமாட்டாய்; அவள் அருகில்லாதது காரணமாகவே இது செய்யத்துணிந்தாய்' என்று வாலி கூறினவிது மிகப் பொருத்தமாகவே யுள்ளதன்றோ! இதுவொரு சமத்காரமான வார்த்தை போலும் என்று நினைக்காமல், இதுதான் பரமார்த்தம் என்றே நினைக்கத்தக்கதன்றோ.



21. பிராட்டி அருகேயில்லாத சமயங்களில் நடந்த வரலாறுகளை ஆராய்வதுபோலவே அவள் அருகேயிருக்கும் சமயங்களில் நடந்த வரலாறுகளையும் ஆராயவேணும். சூர்ப்பணகையின் விஷயமொன்று கீழே தெரிவிக்கப்பட்டது. அதற்கும் முந்தியதான காகத்தின் கதையைக் காண்போம். இது சித்திரகூட மலைச்சாரலில் நடந்தது. அயோத்யாகாண்டத்தில் கூறப்படவேண்டிய கதை இது; ஆனால், இது அங்குக் கூறப்படவில்லை. சுந்தரகாண்டத்தில் முப்பத்தெட்டாவது ஸர்க்கத்தில் பிராட்டி அநுமானிடம் அடையாளமாகச் சொல்லியனுப்புவதாக இது அமைந்துளது. அங்குச் சொல்லப்பட்டிருக்கிற விதம் யாதெனில்; 'அநுமனே! முன்பு சித்திரகூட பர்வதத்தின் வடகிழக்கு மூலையிலுள்ள தாழ்வரையில் ஏகாந்தமானதோரிடத்தில் வாழ்ந்திருக்குங்கால் ஒரு ஸம்பவம் நிகழ்ந்தது. ஒரு ஸமயம் நான் விளையாடிக் களைப்புற்று இராமனது மடியில் உட்கார்ந்திருக்கையில், ஒரு காகம் மாமிசத்தின் விருப்பத்தினால் என் மார்பினிடையில் மூக்கால் குத்தியது. நான் எவ்வளவு அதட்டியோட்டியும் அது போகாமல் என் தனங்களைக் குத்திக்கொண்டு அங்கேயே மறைந்திருந்தது. அதைக்கண்டு இராமன் என்னைப் பரிகசிக்கையில், நான் வெட்கமும் கோபமும் காட்டினேன். பிறகு ராமன் என்னை நல்வார்த்தைகளால் சமாதானப்படுத்தினான். நான் இளைப்புற்று இராமனது மடியில் படுத்துறங்கினேன். தூக்கந்தெளிந்து நானெழுந்திருக்கையில் இராமனும் என் மடிமேல் படுத்துக் கண்வளர்ந்தருளினான். அப்பொழுது அக் காகம் மீண்டும் அவ்விடம் வந்து எனது மார்பினிடையில் அதிகமாகப் பீறி என்னை மிகவும் புண்படுத்தியது. அந்தப் புண்ணினின்று பெருகிய ரத்தத்தினால் ராமன் நனைந்தனன். பிறகு என்னாலெழுப்பப்பட்ட இராமன் எனது கஷ்டத்தைக் கண்டு மிகச் சீறித் தனது தர்ப்பாஸனத்தினின்று ஓர் தர்ப்பத்தை யெடுத்து அதைப் பிரமாஸ்திர மந்திரத்தினால் மந்தித்து அக் காகத்தின் மேலெய்தனன். அக் காகம் இந்திரனது மகனாம். அவனைப்

பிரமாஸ்திரம் ஆகாயத்தில் தாக்கிக்கொண்டே போயிற்று. அக் காகம் தன்னை எவரேனும் காப்பாற்றுவாரென்று மூவுலகும் திரிந்தது; தந்தை தாயார் தேவர் முனிவர் முதலிய யாவரும் கைவிட்டதினால் முடிவில் இராமனிடமே வந்துசேர்ந்தது; சரண்யனான ராமன் கருணையினால் கொல்லாது விட்டனன்; ஆனாலும் தனது பிரமாஸ்திரம் வ்யர்த்தமாகாமையால் அக் காகத்தின் விருப்பத்தின்படி அதன் வலது கண்ணைக் குருடாக்கி உயிரோடு விட்டனன்; பிறகு காகம் தன்னிருப்பிடம் சென்று சேர்ந்தது.'—என்றிங்ஙனே பிராட்டி கூறியதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இக் கதையானது பாத்ம புராணத்தில் சிறிது வாசிபடக் கூறப்பட்டுள்ளது. *ந சாப்யு பாரமத் மாம்ஸாத் பக்ஷயார்த்தீ பலிபோஜந:...பக்ஷிந்ருத்தேந காகேந* என்று ஸ்ரீராமாயணத்தில் காகம் மாம்ஸ பக்ஷணத்தில் ஆசையினால் வந்ததாகவன்றோ சொல்லப்பட்டது. பாத்மத்திலோ வென்னில் *ஸ த்ருஷ்ட்வா ஜாநகீம் தத்ர கந்தர்ப்ப சரபீடித:, விததார நகைஸ் தீக்ஷ்ணை: பீநோந்நத பயோதரௌ* என்று காகனும் இராவணனைப்போல் காமபீடிதனாகவே வந்து அபசாரப்பட்டனனாகச் சொல்லிற்று. இவ்வரலாற்றைப் பிராட்டி தன் திருவாக்கினால் அனுமானிடம் சொல்லும்போது காமபீடிதனாய் வந்தானென்று சொல்ல நாணி மாம்ஸார்த்தியாய் வந்தானென்று மறைத்துச்சொல்லி யிருப்பதாக நினைக்க இடமுள்ளது.

22. அன்றியும், பிராட்டி தானே காகத்தின் தலையையெடுத்துப் பெருமாள் திருவடியோடே சேர்த்து சரணாகதி செய்ததாகக்காட்டி இவனை ரக்ஷித்தருள வேணுமென்று இராமனை வேண்டினதாகப் பாத்மபுராணத்தில் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ளது; அவ்விடத்து ச்லோகங்கள் இவை;—*புரத: பதிதம் தேவீ தரண்யாம் வாயஸம் ததா, தச்சிர: பாதயோஸ் தஸ்ய யோஜயாமாஸ ஜாநகீ. ப்ராணஸம்சயமாபந்நம் த்ருஷ்ட்வா ஸீதாத வாயஸம், த்ராஹி த்ராஹீதி பர்த்தாரம் உவாச தயயா விபும்* என்று. இவ்வுண்மையைப் பிராட்டி (ஸ்ரீராமாயணத்தில்) சொல்லாதொழிந்தது ஏனென்னில்; அங்குத் தன்னுடைய பெருமையைச் சொல்லிக் கொள்ளவேண்டிய அவச்யமில்லையன்றோ. 'காகத்தை ரக்ஷிக்கும்படி நான்தான் செய்தேன்' என்று அவ்விடத்தில் தெரிவிப்பதில் சுவையில்லையே. ஆனாலும், இவ்விஷயத்தை ஒருவாறு காட்டியிருக்கின்றாள்; எப்படியென்னில், "வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்" என்பது பிராட்டியின் வாக்யம். இதில் 'க்ருபயா' என்கிற சொல் கவனிக்கத்தக்கது. இராமன் தன்னுடைய க்ருபையினாலே ரக்ஷித்தானென்பது மேலெழுந்த பொருள். க்ருபா என்பது பிராட்டிக்கு வாசகம். "லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா" என்றும் "அநுக்ரஹமயீம் வந்தே நித்யமஜ்ஞாதநிக்ரஹாம்" என்றும் பிராட்டியை க்ருபை தானே வடிவெடுத்தவளாகச்சொல்லியிருக்கின்றதன்றோ! ஆகவே 'க்ருபயா பர்யபாலயத்' என்று பிராட்டி சொன்னதானது 'இராமன் காகத்தை வதைசெய்யாமல் காப்பாற்றினது என்னாலே நான்' என்று வ்யங்க்யமாகத் தெரிவித்தபடி. இதனைத் திருவுள்ளம்பற்றியே திருமந்திரார்த்தத்தில் பிள்ளை லோகாசாரியர் "இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது" என்று அருளிச்செய்தார். பிராட்டி விஷயத்தில் காகாசுரனுடைய அபராதம் வலிதா? இராவணனுடைய அபராதம் வலிதா? என்று ஆராய்ந்து பார்க்குமளவில், இராவணனுடைய அபராதம் சிறிது, காகத்தின் அபராதமே மிகவும் வலிது என்று நிர்ணயிக்கத் தட்டில்லை. திருமேனியை நலிந்து உதிரவெள்ளம் பெருகும்படியான மஹா அபராதத்தை இராவணன் செய்யவில்லையே! இதை மணவாளமாமுனிகளும் திருமந்திரார்த்த வியாக்கியானத்தில் விளங்கக் காட்டியருளினர். பிராட்டியைக் கவர்ந்து சென்ற இராவணன் இராமபிரானோடு போர்புரியும்போது பிராட்டியை அசோகவனத்தில் வைத்திடாமல் அருகிலேயே வைத்துக்கொண்டு யுத்தம் நடத்தியிருந்தானாகில், காகம் போலவே அவனும் உயிர்பெற்றே உய்ந்திருப்பன் என்பது நம் ஆசாரியர்களுக்குத்

ப்ரமாஸ்த்ரம் ஆகாயத்தில் துரத்திக்கொண்டே போயிற்று. அக் காகம் தன்னை எவரேனும் காப்பாற்றுவாரென்று மூவுலகும் திரிந்தது; தந்தை தாயார் தேவர் முனிவர் முதலிய யாவரும் கைவிட்டதினால் முடிவில் இராமனிடமே வந்துசேர்ந்தது; சரண்யனான ராமன் கருணையினால் கொல்லாது விட்டனன்; ஆனாலும் தனது ப்ர மாஸ்திரம் வீணாகாதாகையால் அக் காகத்தின் விருப்பத்தின்படி அதன் வலது கண்ணைக் குருடாக்கி உயிரோடு விட்டனன்; பிறகு காகம் தன்னிருப்பிடம் சென்று சேர்ந்தது.'—என்றிங்ஙனே பிராட்டி கூறியதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இக் கதையானது பாத்ம புராணத்தில் சிறிது வாசிபடக் கூறப்பட்டுள்ளது. *ந சாப்யு பாரமக் மாம்ஸாத் பக்ஷயார்த்தி பலிபோஜந:...பக்ஷைக்ருத்கேந காகேந' என்று ஸ்ரீராமாயணத்தில் காகம் மாம்ஸ பக்ஷணத்தில் ஆசையினால் வந்ததாகவன்றோ சொல் லப்பட்டது. பாத்மத்திலோ வென்னில் *ஸ த்ருஷ்ட்வா ஜாநகீம் தத்ர கந்தர்ப்ப சரபீடித:, விததார நகைஸ் தீக்ஷ்ணை: பீநோந்நத பயோதரௌ* என்று காகனும் இராவணனைப்போல் காமபீடிதனாகவே வந்து அபசாரப்பட்டனனாகச் சொல்லிற்று. இவ்வரலாற்றைப் பிராட்டி தன் திருவாக்கினால் அநுமானிடம் சொல்லும்போது காமபீடிதனாய் வந்தானென்று சொல்ல நாணி மாம்ஸார்த்தியாய் வந்தானென்று மறைத்துச்சொல்லி யிருப்பதாக நினைக்க இடமுள்ளது.

22. அன்றியும், பிராட்டி தானே காகத்தின் தலையையெடுத்துப் பெருமாள் திருவடியோடே சேர்த்து சரணாகதி செய்ததாகக்காட்டி இவனை ரக்ஷித்தருள வேணுமென்று இராமனை வேண்டினதாகப் பாத்மபுராணத்தில் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ளது; அவ்விடத்து ச்லோகங்கள் இவை ;—*புரத: பதிதம் தேவீ தரண் யாம் வாயஸம் ததா, தச்சிர: பாதயோஸ் தஸ்ய யோஜயாமாஸ ஜாநகீ. ப்ராணஸம் சயமாபந்நம் த்ருஷ்ட்வா ஸீதாத வாயஸம், த்ராஹி த்ராஹீதி பர்த்தாரம் உவாச தயயா விபும்* என்று. இவ்வுண்மையைப் பிராட்டி (ஸ்ரீராமாயணத்தில்) சொல்லா தொழிந்தது ஏனென்னில்; அங்குத் தன்னுடைய பெருமையைச் சொல்லிக் கொள்ளவேண்டிய அவச்யமில்லையன்றோ. 'காகத்தை ரக்ஷிக்கும்படி நான்தான் செய்தேன்' என்று அவ்விடத்தில் தெரிவிப்பதில் சுவையில்லையே. ஆனாலும், இவ்விஷயத்தை ஒருவாறு காட்டியிருக்கின்றாள்; எப்படியென்னில், "வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்" என்பது பிராட்டியின் வாக்யம். இதில் 'க்ருபயா' என்கிற சொல் கவனிக்கத்தக்கது. இராமன் தன்னுடைய க்ருபையி னாலே ரக்ஷித்தானென்பது மேலெழுந்த பொருள். க்ருபா என்பது பிராட்டிக்கு வாசகம். "லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா" என்றும் "அநுக்ரஹமயீம் வந்தே நித்யமஜ்ஞாதநிக்ரஹாம்" என்றும் பிராட்டியை க்ருபை தானே வடிவெடுத்தவளாகச்சொல்லியிருக்கின்றதன்றோ! ஆகவே 'க்ருபயா பர்ய பாலயத்' என்று பிராட்டி சொன்னதானது 'இராமன் காகத்தை வதைசெய் யாமல் காப்பாற்றினது என்னாலே தான்' என்று வ்யங்க்யமாகத் தெரிவித்தபடி. இதனைத் திருவுள்ளம்பற்றியே திருமந்திரார்த்தத்தில் பிள்ளை லோகாசாரியர் "இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது" என்று அருளிச்செய்தார். பிராட்டி விஷயத்தில் காகாசுரனுடைய அபராதம் வலிதா? இராவணனுடைய அபராதம் வலிதா? என்று ஆராய்ந்து பார்க்குமளவில், இராவணனுடைய அபரா தம் சிறிது, காகத்தின் அபராதமே மிகவும் வலிது என்று நிர்ணயிக்கத் தட்டில்லை. திருமேனியை நலிந்து உதிரவெள்ளம் பெருகும்படியான மஹா அபராதத்தை இராவணன் செய்யவில்லையே! இதை மணவாளமாமுனிகளும் திருமந்திரார்த்த வியாக்கியானத்தில் விளங்கக் காட்டியருளினர். பிராட்டியைக் கவர்ந்து சென்ற இராவணன் இராமபிரானோடு போர்புரியும்போது பிராட்டியை அசோகவனத்தில் வைத்திடாமல் அருகிலேயே வைத்துக்கொண்டு யுத்தம் நடத்தியிருந்தானாகில், காகம் போலவே அவனும் உயிர்பெற்றே உய்ந்திருப்பன் என்பது நம் ஆசாரியர்களுக்குத்

திண்ணமான நம்பிக்கை. ஆகவேதான் "இவள் ஸன்னிதியாலே காகம் தலை பெற்றது" என்றவுடனே "அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்றருளிச்செய்தார் பிள்ளைலோகாசாரியர்.



23. பிராட்டி அருகேயிருந்தால் மாத்திரம் போருமோ? சரணாகதி செய்தாலன்றோ பெருமாள் ரக்ஷிக்கக்கூடும். காகம் சரணாகதி செய்தபடியாலன்றோ உயிர் பெற்றது. "த்விதா பஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்" என்று ஒரு வாக்கும் தலைவணங்கமாட்டேனென்று கண்டிப்பாகக் கூறுகின்ற இராவணன் சரணாகதி செய்யமாட்டானே; அப்படிப்பட்டவனுக்கு அருகே பிராட்டி இருந்து தான் என்ன பயனாகும்? என்றிப்படி சிலர் கேட்கக்கூடும். அவர்களுக்குச் சொல்லுகிறோம். 'காகம் சரணாகதி செய்தபடியினால்தான் உயிர்பெற்றது' என்று நிர்ப்பந்தம் பொருத்தமற்றது. காகம் மூவுலகும் திரிந்தும் எங்கும் கால்பாவ நிற்க இயலாமையாலே தரிப்பற்றுக் கீழே விழுந்த வத்தனையேயொழிய, பெருமாள் பக்கலில் சரணாகதி செய்யவேணுமென்கிற எண்ணத்தோடு வந்ததன்று. "புரத: பதிதம் தேவீ தரண்யாம் வாயஸம்" என்று பாத்மபுராணத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லிற்று. ஸ்ரீராமாயணத்திலும் 'ஸ தம் நிபதிதம் பூமௌ" என்று, தரிப்பற்றுத் தரையில் விழுந்தமாத்திரமே சொல்லிற்று. ஆளவந்தார் ஸ்தோத்திரத்தில் (63) "ரகுவர யதபூஸ் த்வம் தாத்ருசோ வாயஸஸ்ய ப்ரணத இதி தயாளு:" என்றவிடத்து வியாக்கியானத்தில்—வேதாந்ததேசிகர்—காகம் நமஸ்கரித்து சரணாகதி செய்யவில்லை யென்றும் கருணாகாகுத்ஸ்தனுடைய திருவுள்ளத்தினாலே சரணாகதனாகக் கொள்ளப்பட்டானத்தனை என்றும் நன்கு காட்டப்பட்டிருக்கிறது. *எத்திசையுமுழன்றோடி யிளைத்துவிழுங் காகம்போல்* என்று அடைக்கலப்பத்திலும் அவர்தாமே கூறினர். இளைத்துவிழுந்த வத்தனையேயொழிய, சரணாகதி செய்தமையில்லை யென்பதே இதன் கருத்து. காகம் சரணாகதி செய்ததாகவும் ஒரு யோஜனையுண்டு; அதைக் கொண்டே ஸ்ரீவசநபூஷணத்தில் "தர்மபுத்ராதிகளும் த்ரௌபதியும் காகமும் காளியனும்" என்று, சரணம் புகுந்தவர்களில் காகமும் சேர்த்துச் சொல்லப்பட்டது. இந்த மருமத்தையும் சிறிது விவரிப்போமிங்கு: சரணாகதியாவது என்ன? என்று விமர்சிக்குமளவில், அதைப்பற்றிப் பலர் பலவகையாகக் கூறுவர். 'எம்பெருமான் செய்யநினைக்கும் ரக்ஷணத்திற்கு இடையூறாகத் தான் செய்யும் ப்ரவ்ருத்தியிலிருந்து விலகிநிற்பதே சரணாகதி' என்பதும் ஒரு முடிவாகத் தேறியுள்ளது. இப்படிப்பட்ட சரணாகதிதான் காகத்தினிடத்தில் காண முடியும். இதற்காகப் பெருமாள் காகத்திற்கு உயிர்ப்பிச்சை யளித்தாரென்று சொல்லவேண்டும்.



24. இப்படிச் சொல்வதானால் இராவணனிடத்திலும் இங்ஙனே சொல்வதற்குத் தடையில்லை. எப்படியென்னில், 'இன்று போய் நாளை வா' என்றுசொல்லி இராவணனுக்குப் பெருமாள் நியமனம் தந்தருளும்போது, இராவணனது நிலைமை காகத்தின் நிலைமையோடொத்திருந்ததன்றோ? *சசால சாபஞ்ச முமோச வீர:* என்றது, போக்கற்றுச் செயல்மாண்டுநின்ற நிலையேயன்றோ. ஆக, காகத்தினிடத்தில் சரணாகதியென்று சொல்லக்கூடியதான நிலைமை எது காண்கிறதோ, அது இராவணனிடத்திலும் காண்பதனாலே மஹாபராதியான காகத்தையே ரக்ஷித்தருளின பெருமாள் அவ்வளவு அபராத மில்லாதவனான ராவணனை அவசியம் ரக்ஷித்தேயிருக்கவேண்டும். ஏன் ரக்ஷிக்கவில்லையென்று கேட்டால், பிராட்டி அருகிலிருக்கையாகிற ஒரு வாய்ப்பு காகத்திற்கு இருந்தது; அது இராவணனுக்கு இல்லையே, ஆதலால் தான் ரக்ஷிக்கவில்லை—என்று சொல்லக் குறையில்லையாயிற்று. ஆக, இவ்வளவு நிரூபணங்களினால், பிராட்டி இராவணனுக்கு உபதேசித்த ஹிதவசனத்தில் "தர்மஜ்ஞ: சரணாகதவத்ஸல:" என்று கூறியதையும், ஸீதாவிவாஹ

திண்ணமான நம்பிக்கை. ஆகவேதான் "இவள் ஸன்னிதியாலே காகம் தலை பெற்றது" என்றவுடனே "அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்றருளிச்செய்தார் பிள்ளைலோகாசாரியர்.

23. பிராட்டி அருகேயிருந்தால் மாத்திரம் போருமோ? சரணாகதி செய்தாலன்றோ பெருமாள் ரக்ஷிக்கக்கூடும். காகம் சரணாகதி செய்தபடியாலன்றோ உயிர் பெற்றது. "த்விதா பஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்" என்று ஒருவர்க்கும் தலைவணங்கமாட்டேனென்று கண்டிப்பாகக் கூறுகின்ற இராவணன் சரணாகதி செய்ய மாட்டானே; அப்படிப்பட்டவனுக்கு அருகே பிராட்டி இருந்து தான் என்ன பயனாகும்? என்றிப்படி சிலர் கேட்கக்கூடும். அவர்களுக்குச் சொல்லுகிறோம். 'காகம் சரணாகதி செய்தபடியினால்தான் உயிர்பெற்றது' என்று நினைப்பது பொருத்தமற்றது. காகம் மூவுலகும் திரிந்தும் எங்கும் கால்பாவிநிற்க இடம் பெறாமையாலே தரிப்பற்றுக் கீழே விழுந்த வத்தனையேயொழிய, பெருமாள் பக்கலில் சரணாகதி செய்யவேணுமென்கிற எண்ணத்தோடு வந்ததன்று. "புரத: பதிதம் தேவீ தரண்யாம் வாயஸம்" என்று பாத்மபுராணத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லிற்று. ஸ்ரீராமாயணத்திலும் 'ஸ தம் நிபதிதம் பூமௌ" என்று, தரிப்பற்றுத் தரையில் விழுந்தமாத்திரமே சொல்லிற்று. ஆளவந்தார் ஸ்தோத்திரத்தில் (63) "ரகுவர யதபூஸ் த்வம் தாத்ருசோ வாயஸஸ்ய ப்ரணத இதி தயாளு:" என்றவிடத்து வியாக்யானத்தில்—வேதாந்ததேசிகர்—காகம் நமஸ்கரித்து சரணாகதி செய்யவில்லை யென்றும் கருணாகாகுத்ஸ்தனுடைய திருவுள்ளத்தினாலே சரணாகதனாகக் கொள்ளப்பட்டானத்தனை என்றும் நன்கு காட்டப்பட்டிருக்கிறது. *எத்திசையுமுழன்றோடி யிளைத்துவிழுங் காகம்போல்* என்று அடைக்கலப்பத்திலும் அவர்தாமே கூறினர். இளைத்துவிழுந்த வத்தனையேயொழிய, சரணாகதி செய்தமையில்லை யென்பதே இதன் கருத்து. காகம் சரணாகதி செய்ததாகவும் ஒரு யோஜனையுண்டு; அதைக் கொண்டே ஸ்ரீவசநபூஷணத்தில் "தர்மபுத்ராதிகளும் த்ரௌபதியும் காகமும் காளியனும்" என்று, சரணம் புகுந்தவர்களில் காகமும் சேர்த்துச் சொல்லப்பட்டது. இந்த மருமத்தையும் சிறிது விவரிப்போமிங்கு: சரணாகதியாவது என்ன? என்று விமர்சிக்குமளவில், அதைப்பற்றிப் பலர் பலவகையாகக் கூறுவர். 'எம்பெருமான் செய்யநினைக்கும் ரக்ஷணத்திற்கு இடையூறாகத் தான் செய்யும் ப்ரவ்ருத்தியிலிருந்து விலகிநிற்பதே சரணாகதி' என்பதும் ஒரு முடிவாகத் தேறியுள்ளது. இப்படிப்பட்ட சரணாகதிதான் காகத்தினிடத்தில் காணமுடியும். இதற்காகப் பெருமாள் காகத்திற்கு உயிர்ப்பிச்சை யளித்தாரென்று சொல்லவேண்டும்.

24. இப்படிச் சொல்வதானால் இராவணனிடத்திலும் இங்ஙனே சொல்வதற்குத் தடையில்லை. எப்படியெனில், 'இன்று போய் நாளை வா' என்றுசொல்லி இராவணனுக்குப் பெருமாள் நியமனம் தந்தருளும்போது, இராவணனது நிலைமை காகத்தின் நிலைமையோடொத்திருந்ததன்றோ? *சசால சாபஞ்ச முமோச வீர:* என்றது, போக்கற்றுச் செயல்மாண்டுநின்ற நிலையே யன்றோ. ஆக, காகத்தினிடத்தில் சரணாகதியென்று சொல்லக்கூடியதான நிலைமை எது காண்கிறதோ, அது இராவணனிடத்திலும் காண்பதனாலே மஹாபராதியான காகத்தையே ரக்ஷித்தருளின பெருமாள் அவ்வளவு அபராத மில்லாதவனான ராவணனை அவசியம் ரக்ஷித்தேயிருக்கவேண்டும். ஏன் ரக்ஷிக்கவில்லையென்று கேட்டால், பிராட்டி அருகிலிருக்கையாகிற ஒரு வாய்ப்பு காகத்திற்கு இருந்தது; அது இராவணனுக்கு இல்லையே, ஆதலால் தான் ரக்ஷிக்கவில்லை—என்று சொல்லக் குறையில்லையாயிற்று. ஆக, இவ்வளவு நிரூபணங்களினால், பிராட்டி இராவணனுக்கு உபதேசித்த ஹிதவசனத்தில் 'தர்மஜ்ஞ: சரணாகதவத்ஸல:" என்று கூறியதையும், ஸீதாவிவாஹ

காலத்தில் "மம ஸ்நுஷா ஸஹதர்மசரீ தவ" என்று ஜநகசக்ரவர்த்தி சொல்லியிருந்ததையும் இணக்கி, தேறின ஸாரப்பொருள் தெளிவிக்கப்பட்டு முடிந்தது.

## (3) ஸ்ரீராமன் ஸௌசீல்யநிதி.

25. தன் மேன்மை பாராமல் தாழ்ந்தவர்களோடும் புரையறக் கலந்து பரிமாறும் சீலகுணத்திற்கே ஸௌசீல்ய மென்று மறுபெயர்; எல்லாக் குணங்களிற் காட்டிலும் இக்குணம் மிகச் சிறந்ததாதலால் இதற்கு குணம் என்றே சிறப்புப் பெயர் உண்டு. இத்திருக்குணத்திற்குச் சேர நாம் அநுஸந்திக்கக்கூடிய ஸ்ரீ ராம சரிதைகளைக் கேண்மின். ஸ்ரீமந்நாராயணமூர்த்தி இராமபிரானாக இந்நிலவுலகில் திருவவதரித்தா ரென்கிற விதுவே சீலகுணத்தின் பரீவாஹமாகவுள்ளது. கூரத்தாழ்வான் அதிமாநுஷ ஸ்தவத்தில் பத்தாவது ச்லோகம் *சீல: க ஏஷ தவ ஹந்த* என்று தொடங்குகின்றார். அந்தோ! இது என்ன சீலகுணம்! இதை எடுத்துப் பேச யாரால் முடியும்! என்கிறார்; அந்த சீலகுணத்தை எதுகொண்டு நிரூபிக்கிறாரென்னில், *அத்ராவதீர்ய நநு லோசநகோசரோபூ:* என்பதே அந்த ச்லோகத்தில் உயிரானவார்த்தை. கட்புலியான வெம்பெருமான் ஆஸுர ப்ரக்ருதிகளிடையே வந்து அவர்களுடைய கட்புலனுக்கும் இலக்காகித் திருவவதரித்தா னென்பதை நினைக்கும்போதே 'அந்தோ! இது என்ன சீலம்! குணமறிந்து உகக்கமாட்டாதே எதிரம்பு கோப்பதுஞ் செய்யாநின்ற அரக்கர் அசுரர்போன்ற மனிசரிடையே வந்து பிறக்கும்படியான இந்த சீல குணத்தை என்னவென்று சொல்லுவது?' என்று உருகுகிறார் கூரத்தாழ்வான். பிறந்தவாறும்! என்று சொல்லி ஆழ்வார் ஆறுமாஸம் மோஹித்திருக்கும்படியான பகவானது திருவவதாரத்தை நினைத்தவாறே 'இது என்ன சீலகுணம்!' என்று உருகவேண்டியது தவிர வேறில்லை யன்றோ.

26. அவதாரம் என்ற வடசொல்லுக்கு மேலிருந்து கீழேயிறங்குவது என்று பொருள். பரமபதமாகிய மேல்நிலத்திலிருந்து நிலவுலகமாகிய கீழ்நிலத்திற்கு வந்தாரென்பதை அவதார சப்தார்த்தமாக நினைக்கவேண்டா. மேலான தனது நிலைமைகளை விட்டிட்டுக் கீழான நிலைமைகளை ஏற்றுக்கொண்டதே அவதார மெனப்படுகிறது. ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதவன், எல்லாவிடங்களிலுமுளன், எல்லாக்காலத்திலுமுளன், எல்லாப்பொருள்களாகவுமுளன் என்கிற விவை பகவானுடைய மேலான நிலைமைகள். இத்தகைய நிலைமைகளை அறவேவிட்டிட்டு இவற்றுக்கு எதிரிடையான தாழ்ந்த நிலைமைகளை ஏற்றுக்கொண்டல்லவோ பகவான் வந்து பிறந்திருக்கிறது. ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதிருந்தவன் அரக்கசுரர்போன்றார் கண்ணுக்கும் புலப்பட்டான்; எல்லாவிடங்களிலுமுளனானவன் 'இப்போது அயோத்தியிலுளன், இப்போது சித்திரகூடத்திலுளன், இப்போது பஞ்சவடியிலுளன், இப்போது கிஷ்கிந்தையிலுளன், இப்போது கடற்கரையிலுளன்' என்னும்படியாகி ஓரிடத்திலிருக்கும்போது மற்றோரிடத்தில் இலனென்று நினைக்கும்படியாயினான். எக்காலத்திலுமுளனானவன் ஒரு குறிப்பிட்ட காலத்திலேயே இருந்தவனாகவிருந்து மற்றைக் காலத்தில் இலனாயினான் என்று நினைக்கும்படி போயினான். *நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய் சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய்* தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்* என்று ஆழ்வார்கள் அநுஸந்திக்கிறபடி எல்லாப் பொருள்களுமாகவுள்ளனவன் இராமன் என்கிறவொரு பெயர்க்கு மாத்திரம் பொருளாக விருந்தனன். ஆக இங்ஙனே உயர்ந்த நிலைமைகளை விட்டுத் தாழ்ந்த நிலைமைகளை ஏறிட்டுக்கொண்டு வந்து பிறந்தவாறு என்னே! என்று ஈடுபடும்படி யாக்குகின்றது சீல குணம்.

27. இராமபிரானுடைய சீலகுணத்திற்கு விசேஷித்த இலக்கு குஹப்பெருமாள் போல்வார். திருமங்கையாழ்வார் தமது பெரிய திருமொழியில் (5-8-1) *ஏழை

காலத்தில் "மம ஸ்நாதா ஸைஹதர்மசரீ தவ" என்று ஜநகசக்ரவர்த்தி சொல்லியிருந்ததையும் இணக்கி, தேறின ஸாரப்பொருள் தெளிவிக்கப்பட்டு முடிந்தது.

## (3) ஸ்ரீராமன் ஸௌசீல்யநிதி.

25. தன் மேன்மை பாராமல் தாழ்ந்தவர்களோடும் புரையறக் கலந்து பரிமாறும் சீலகுணத்திற்கே ஸௌசீல்ய மென்று மறுபெயர்; எல்லாக் குணங்களிற் காட்டிலும் இக்குணம் மிகச் சிறந்ததாதலால் இதற்கு குணம் என்றே சிறப்புப் பெயர் உண்டு. இத்திருக்குணத்திற்குச் சேர நாம் அநுஸந்திக்கக்கூடிய ஸ்ரீ ராம சரிதைகளைக் கேண்மின். ஸ்ரீமந்நாராயணமூர்த்தி இராமபிரானாக இந்நிலவுலகில் திருவவதரித்தா ரென்கிற விதுவே சீலகுணத்தின் பரீவாஹமாகவுள்ளது. கூரத்தாழ்வான் அதிமாநுஷ ஸ்தவத்தில் பத்தாவது ச்லோகம் *சீல: க ஏஷ தவ ஹந்த* என்று தொடங்குகின்றார். அந்தோ! இது என்ன சீலகுணம்! இதை எடுத்துப் பேச யாரால் முடியும்! என்கிறார்; அந்த சீலகுணத்தை எதுகொண்டு நிரூபிக்கிறாரென்னில், *அத்ராவதீர்ய நநு லோசநகோசரோபூ:* என்பதே அந்த ச்லோகத்தில் உயிரானவார்த்தை. கட்கிலியான வெம்பெருமான் ஆஸுர ப்ரக்ருதிகளிடையே வந்து அவர்களுடைய கட்புலனுக்கும் இலக்காகித் திருவவதரித்தா னென்பதை நினைக்கும்போதே 'அந்தோ! இது என்ன சீலம்! குணமறிந்து உகக்கமாட்டாதே எதிரம்பு கோப்பதுஞ் செய்யாநின்ற அரக்கர் அசுரர்போன்ற மனிசரிடையே வந்து பிறக்கும்படியான இந்த சீல குணத்தை என்னவென்று சொல்லுவது?' என்று உருகுகிறார் கூரத்தாழ்வான். பிறந்தவாறும்! என்று சொல்லி ஆழ்வார் ஆறு மாஸம் மோஹித்திருக்கும்படியான பகவானது திருவவதாரத்தை நினைத்தவாறே 'இது என்ன சீலகுணம்!' என்று உருகவேண்டியது தவிர வேறில்லை யன்றோ.

26. அவதாரம் என்ற வடசொல்லுக்கு மேலிருந்து கீழேயிறங்குவது என்று பொருள். பரமபதமாகிய மேல்நிலத்திலிருந்து நிலவுலகமாகிய கீழ்நிலத்திற்கு வந்தாரென்பதை அவதார சப்தார்த்தமாக நினைக்கவேண்டா. மேலான தனது நிலைமைகளை விட்டிட்டுக் கீழான நிலைமைகளை ஏற்றுக்கொண்டதே அவதாரமெனப்படுகிறது. ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதவன், எல்லாவிடங்களிலுமுளன், எல்லாக்காலத்திலுமுள்ளன், எல்லாப்பொருள்களாகவுமுளன் என்கிற விவை பகவானுடைய மேலான நிலைமைகள். இத்தகைய நிலைமைகளை அறவேவிட்டிட்டு இவற்றுக்கு எதிரிடையான தாழ்ந்த நிலைமைகளை ஏற்றுக்கொண்டல்லவோ பகவான் வந்து பிறந்தருளிற்று. ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதிருந்தவன் அரக்கரசுரர்போல்வார் கண்ணுக்கும் புலப்பட்டான்; எல்லாவிடங்களிலுமுளனானவன் 'இப்போது அயோத்தியிலுளன், இப்போது சித்திரகூடத்திலுளன், இப்போது பஞ்சவடியிலுளன், இப்போது கிஷ்கிந்தையிலுளன், இப்போது கடற்கரையிலுளன்' என்னும்படியாகி ஓரிடத்திலிருக்கும்போது மற்றோரிடத்தில் இலனென்று நினைக்கும்படியாயினன். எக்காலத்திலுமுளனானவன் ஒரு குறிப்பிட்ட காலத்திலேயே இ... ஒகளிருந்து மற்றைக் காலத்தில் இலனாயினன் என்று நினைக்கும்படி போயினன். *நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய் சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய்* தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்" என்று ஆழ்வார்கள் அநுஸந்திக்கிறபடி எல்லாப் பொருள்களுமாகவுளனானவன் இராமன் என்கிறவொரு பெயர்க்கு மாத்திரம் பொருளாக விருந்தனன். ஆக இங்ஙனே உயர்ந்த நிலைமைகளை விட்டுத் தாழ்ந்த நிலைமைகளை ஏறிட்டுக்கொண்டு வந்து பிறந்தவாறு என்னே! என்று ஈடுபடும்படி யாக்குகின்றது சீல குணம்.

27. இராமபிரானுடைய சீலகுணத்திற்கு விசேஷித்த இலக்கு குஹப்பெருமாள் போல்வார். திருமங்கையாழ்வார் தமது பெரிய திருமொழியில் (5-8-1) *ஏழை

யேதலன் கீழ்மகனென்னாதிரங்கி" என்று தொடங்கியுள்ள பாசுரத்தில இந்த சீல குணம் மிகவற்புதமாக அனுபவிக்கப்பட்டிருக்கின்றது. கங்கையில் ஓடம் விடுபவனும் ஆயிரம் ஓடங்கட்குத் தலைவனும் கங்கைக்கரையிலுள்ள ச்ருங்கிபேரபுரத்திற்கு அதிபதியுமாகிய ஒரு வேடர்தலைவன் குஹனென்பவன். இவனிடத்திற்கு இராமபிரான் பிராட்டியோடும் இளையவனோடு மெழுந்தருளியபொழுது இவன் அப்பிரானுடைய வடிவழகில் ஈடுபட்டுப் பரிந்து திருமேனிக்காவல் செய்தவிதம் வெகு ஆச்சரியமானது. [அது, ஸ்ரீவசநபூஷணம்—247ல் காணத்தக்கது.] பெருமாள் ச்ருங்கிபேரபுரத்திலே யெழுந்தருளி இளையபெருமாள் பாங்காக அமைத்த பர்ணசயனத்திலே பிராட்டியோடு பள்ளிகொண்டருளாநிற்க, இச் சேர்த்திக்கு என்ன தீங்கு விளையுமோ வென்று அதிசங்கைகொண்ட இளையபெருமாள் முதுகிலிட்ட அம்பறாத்தூணியும் கையிற்பிடித்த வில்லுமாய் 'நடையாடும் மதிள் போலே' உலாவிக்கொண்டு நிற்க, இதைக்கண்ட குஹப்பெருமாள் 'ஒருதம்பி தாயைக் கொண்டு பெருமாளை நாட்டிலிருந்து காட்டிலே துரத்தினன்; இத் தம்பி தனியிடத்திலே என் செய்யப் பார்க்கிறானோ!' என்று அவ்விளையபெருமாளிடத்திலும் அதிசங்கை கொண்டு 'இவன் அப்படி ஏதேனு மொரு தீங்கு செய்யில் இவனையே முடித்துவிடுவது' என்று தானும் வில்லு மம்புமாய்க் கொண்டு நின்றதாக ஸ்ரீராமாயணத்திற் காண்கிறது. ஆனால், இது எந்த ஸமயத்தில் நடந்ததோ அந்த ஸமயத்தில் வான்மீகிமுனிவரால் சொல்லப்படவில்லை; பிறகு பரதாழ்வான் சித்ரகூடஞ் செல்லப் புறப்பட்டு வருமளவில் அப் பரதனோடு குஹன் இதைச் சொல்லுவதாக அமைக்கப் பட்டுள்ளது. [அயோத்யா காண்டம். 87-வது ஸர்க்கம் 23, 24 ச்லோகங்கள் காண்க.] தொட்டிற்பருவமேபிடித்து இராமபிரான் மீது அளவுகடந்த அன்பு கொண்டிருக்கின்ற இளையபெருமாள்மேலும் அதிசங்கை தோன்றிப் பெருமாளிடத்தில் பரிவுகாட்டின இக் குஹனுடைய அன்பை என்ன வென்று சொல்லுவது! இவனுக்கு இவ்வளவான அன்பு இருந்தது பற்றியே பெருமாள் இவனிடத்தில் முதன் முதலாகத் தம்முடைய சீலகுணத்தைக் காட்டியருளினர்.

28. குஹனுடைய தாழ்வை எடுத்துக்காட்டுகின்ற திருமங்கை யாழ்வார் 'ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாதிரங்கி' என்கிறார். பெருமாள் குஹனைக் கைவிடுகைக்கு இவ் விழிகுணங்களில் ஒரொன்றே அமைவதாயிருக்க, அவை பலவுமுள வென்று கண்டும் அருட் கடலான பெருமான் குஹனிடம் உபேக்ஷை கொள்ளாமலிருந்ததோடு அளவு கடந்தும் கலந்து பரிமாறினன். க்ஷத்ரிய ஜாதியில் ஸூர்ய குலத்தில் இக்ஷ்வாகுவம்சத்தில் திருவவதரித்தவனும் சக்ரவர்த்தியின் திருக்குமாரனும் ஸகலைச்வர்ய ஸம்பன்னனும் மஹா புத்திமானும் பகைவரிடத்தும் அன்பு கொள்பவனுமான இராமபிரான் குஹனை நோக்குங்கால், இவன் இழிவான வேடச் சாதியனென்றும் அதனால் பகுத்தறிவில்லாத அவிவேகி யென்றும் அச்சாதிக்கு இயல்பான கொடுமையினால் எல்லாவுயிர்களோடும் பகைமை கொள்பவனென்றும் இப்படிப்பட்ட தன்மைகளைக்கண்டு இகழ்ச்சி கொள்ள வேண்டியிருந்தும் தனது பெருமைக் குணங்களையும் பாராமல் அவனுடன் கலந்து பரிமாறினவிதம் எத்தகைத் தென்னில், "சீரணிந்ததோழமை கொண்டதுமோரடையாளம்" என்று திருவடி வாக்கில் 'சீரணிந்த தோழமை' என்று வரும்படியாகவன்றோ கலந்தது. குகனுடைய அளவுகடந்த அன்பைக்கண்டு பெருமாள் அவனோடு தோழமை கொண்டாரா? அல்லது பெருமாள் சீரணிந்த தோழமை கொண்டதற்காகக் குகன் அன்பு பாராட்டினனா? என்று ஒரு கேள்வி பிறந்தால், எம்பெருமான் திருவுள்ளத்திற்கே தெரிய வெளிதான இவ்விஷயத்தில் நாம் என்ன விடை யிறுப்பது, பெருமாள் கங்கைக்கரை சேர்ந்தவுடனே அதனைக் கேள்விப்பட்ட குகன் தன்னினத்தாரோடு பெருமாளிடம் வந்து சேர்ந்தானென்பதைக் கூறுகின்ற வான்மீகிமுனிவர் "தத்ர ராஜா குஹோ நாம ராமஸ்ய ஆத்மஸமஸ் ஸகா" என்கிறார்.

குஹனைப்பற்றி முதன்முதலாக ப்ரஸ்தாவம் செய்யும்போதே 'ராமஸ்ய ஆத்மஸமஸ் ஸகா' என்று கூறியிருப்பது மிகமிக வியக்கத்தக்கது. இராமனுடைய உயிர்த் தோழனான குகன் இராமனது வரவைக் கேள்விப்பட்டு வந்து சேர்ந்தானென்று கூறியிருப்பதனால் இவ்விருவர்க்கும் தோழமை முன்னேபிடித்தேயுள்ளதுபோல் தோன்றுகிறது. குகன் வரும்போதே இராமனைத் தழுவிக்கொண்டதாகவும் சொல்லப்படுகிறது—*தம் ஆர்த்தஸ் ஸம்பரிஷ்வஜ்ய குஹேனா ராகவமப்ரவீத்* என்ற மேல் ச்லோகத்திலும்.

29. ஆனால் ஆழ்வார்க ளருளிச்செயலினுலும் கம்பருடைய வாக்கினுலும் இந்தத் தோழமை அப்போது தான் தோன்றியதென்று நன்கு தெரிகின்றது. *குகனோடுங் கங்கைதன்னில் சீரணிந்ததோழமைகொண்டதுமோரடையாளம்* என்பது பெரியாழ்வார் திருவாக்கு, கம்பராமாயணம் விபீடணனடைக்கலப்படலத்தில்—

(146) "குகனொடு மைவரானேம் முன்புபின் குன்றுசூழ்வான்
மகனொடு மறுவரானேம் எம்முழை யன்பின்வந்த
அகனமர் காதலைய! நின்னொடு மெழுவரானேம்
புகலருங் கானந்தந்து புதல்வராற் பொலிந்தானுந்தை."

என்ற செய்யுள் மிக இன்சுவையுடைத்து. இதன் கருத்தாவது; நகரில் நான்கு பேர் நாங்கள் தசரதாத்மஜர்களாகப் பிறந்தோம்; நான்கு புத்திரர்கள் பிறந்தவளவிலும் த்ருப்திபெருத நயரதன் இன்னமும் புத்திரர்கள் வேண்டியே எங்களைக் காட்டுக்கனுப்பினன்; 'நீங்களிருவரும் காடு சென்று இன்னமுஞ் சில தம்பிமார்களைச் சம்பாதித்துக் கொண்டுவாருங்கள்' என்றே எங்களைக் கானகம் போகவிட்டனன்; அப்படியே நாங்கள் பல தம்பிகளைச் சம்பாதித்துக் கொண்டோம்; கங்கைக் கரையிலே குகனைத் தம்பியாகப் பெற்றேம்; பம்பைக் கரையிலே சுக்ரீவனைத் தம்பியாகப் பெற்றேம்; விபீடணா! கடற் கரையிலே உன்னைத் தம்பியாகப் பெற்றேம். ஆக நம் தந்தை ஏழு புத்திரர்களைப் பெற்றவனாயினன்—என்பதாம். இவ்வனம் கூறுகின்ற இராமன், குகனிடத்தும் சுக்ரீவனிடத்தும் விபீடணனிடத்தும் கூடப்பிறந்த தம்பியினிடத்திற்போலத் தான் அன்பு பாராட்டுபவன் என்பதை யன்றோ வெளியிட்டாநின்றன். மேலும் இங்கு தசரதனை எந்தை யென்னுமல் உந்தை யென்றதும் ஊற்று நோக்கத்தக்கது. விபீஷணனது தந்தையாகவே யன்றோ நயரதன் கூறப்பட்டனன். இதனுல், பெருமாள் விபீடணனிடத்துப் புரையறக் கலந்த தன்மை புலனுகும். ஆக விப்படி குகன் சுக்ரீவன் விபீடணன் போல்வாரிடத்து ஒரு நீராகக் கலந்து பழகும் பெருங்குணத்தை உன்னியே ஸ்ரீராமனை ஸௌசீல்ய நிதியென்று குலாவுகின்றனர். இங்கு ஒரு சிறிய சங்கை தோன்றக் கூடியதுண்டு; அதாவது—"ஹீநப்ரேஷ்யம் ஹீநஸக்யம் ஹீநகேஹ நிஷேவணம்" என்று உபபாதகங்களிலே படிக்கப்பட்டுள்ளது; நீசர்களுக்குப் பணிவிடை செய்வது, நீசர்களோடு தோழமை கொள்ளுவது, நீசர்கள் மனைகளிலே சென்றிருப்பது ஆகியவிவை பாதகங்களாகச் சொல்லப்படாநிற்க, இவற்றைப் பெருமாள் செய்யலாமோ? செய்தவிது ஓர் ஏற்றமாகுமோ? என்று. கேண்மின்; நம்மைப் போன்றவர்கள் இவை செய்தால் நிறக்கேடாம். உயர்வாரில் ஒப்பற்ற பெருமாள் இவை செய்தால் அவருடைய பெருமை இன்னமும் பொலிந்து தோன்றுமத்தனை. பாண்டவதூதன், பார்த்தஸாரதி என்பனபோன்ற திருநாமங்களெல்லாம் அவருடைய பெருமையைக் குன்றிவிட்ட விளக்காக்குமவை யன்றோ?

30. வேதாந்த தேசிகன் தயா சதகத்தில் "நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ" என்னும் ச்லோகத்தில் சபரியையும் எடுத்துக்காட்டியிருக்கையாலே அவ்விடத்தையுங் கொள்வோம். வான்மீகிராமாயணத்திலும் கம்பராமாயணத்தி

இம்: பெருமாள் சபரியினிடம் கலந்து பரிமாறின வரலாறு விசேஷித்து ஸ்பஷ்டமாகக் கூறப்படவில்லையாயினும் இதர ராமாயணங்களிலுள்ளதைக் கொண்டோ, வான்மீகி ராமாயணத்தையே ஆழ்ந்து நோக்கியோ நம் ஆசாரியர்கள் அருளிச்செய்துள்ள விசேஷம் குறிக்கொள்ளத்தக்கது. ஸ்ரீவசனபூஷணத்தில் (233) "பெருமாள் ஸ்ரீ சபரி கையாலே அமுது செய்தருளினார்" என்றவிடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள்—"ரகுகுலதிலகராய் ஆசாரப்ரதாநரான பெருமாள் 'சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ:'* என்னும்படி வேடுவிச்சியாயிருந்தே குருசுச்ரூஷையிலே பழுத்த ஜ்ஞாநாதிகையாய் தன் நாவுக்கு இனிதாயிருந்த பலமூலாதிகளெல்லாம் இங்குத்தைக்கென்று ஸஞ்சயித்துக்கொண்டு வரவு பார்த்திருந்த ஸ்ரீ சபரி, தன் ஆதராநுகுணமாகத் தன் கையாலே அமுது செய்யப்பண்ண அதிஸந்துஷ்டராய் அமுதுசெய்தார்" என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் விசேஷித்து அநுஸந்திக்கத் தக்கவை. இதில் "தன் நாவுக்கு இனிதாயிருந்த" என்கிற வார்த்தையை மாமுனிகள் மூலப்ரமாணமின்றி அருளிச்செய்யார். வான்மீகி (ஸம்க்ஷேபத்தில்) "சபர்யா பூஜிதஸ் ஸம்யக்" என்றவிடத்து ஸம்யக் என்பதில் உள்ளுறையும் பொருளே இது என்று கொள்ளலாம். அவளிடத்தில் பெருமாள் இவ்வளவு கலந்து பரிமாறக் காரணமென்ன? என்று சிலர் விமர்சிக்கவும் நேரும்.

31. சேண்மின்; குஹனோடு கலந்து பரிமாறினபோது அவன் சில வுணவுப் பொருள்களைக் கொணர்ந்துகொடுத்து இவற்றைத் திருவுள்ளம்பற்றியருளவேணுமென்று வேண்டினன்; அதற்குப் பெருமாள் சொன்ன மறுமொழி—(வால்மீ. அயோ. 50) "யத்த்விதம் பவதா கிஞ்சித் ப்ரீத்யா ஸமுபகல்பிதம், ஸர்வம் தத் அநுஜாநாமி நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே, ...அச்வாநாம் காதநேநாஹமர்த்தீ நாந்யேந கேநசித், ஏதாவதாத்ர பவதா பவிஷ்யாமி ஸுபூஜித:" என்பது. 'நான் இந்த வனவாஸத்தில் யாரிடத்திலும் ஏதும் பெற்றுக்கொள்வதில்லையென்று விரதம் கொண்டிருக்கிறேன்; இதோ நமது தேர்க்குதிரைகள் விடாய்த்திருக்கின்றன; அவற்றுக்கு வேண்டிய வுணவுகளையே நான் விரும்புபவன்' என்று சொல்லி அவற்றைத் தாம் கைப்பற்றாமலே யிருந்துவிட்டார் பெருமாள். இங்கு பெருமாள் "நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" [நான் தானம் வாங்கக்கூடாதென்று வைத்துக்கொண்டிருக்கிறேன்] என்பது அவசியம் சொல்லியாகவேண்டிய வார்த்தையோ? குகன் மதுபர்க்கம் முதலிய சில வுணவுப்பொருள்களைக் கொணர்ந்து கொடுக்க வந்தானே யல்லது தன தான்ய வஸ்த்ராதிகளொன்றும் கொடுக்க வந்திலன். அவை கொடுக்கவந்தால் அப்போது 'நான் ப்ரதிக்ரஹம் பண்ணுவதில்லை' என்று சொல்லி மறுக்க நியாயமுண்டு. தேன் முதலிய காட்டுணவுப் பொருள்களையே கொடுக்கவந்தபோது "நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" என்று சொல்லி மறுத்ததானது அவச்யம் ஆராயத்தக்கதன்றோ? குகனிடம் இப்படிச்சொன்னவிவரே சபரியிடம் மறுத்துக் கூறாமல் "அர்ச்சிதோஹம் த்வயா பக்த்யா" என்று உகந்து கூறி அவளுடைய ஸமர்ப்பணையை ஏற்றுக்கொண்டார். இது எதனாலென்னில், கீழே நாமெடுத்துக்காட்டியுள்ள ஸ்ரீவசநபூஷண வியாக்கியான ஸ்ரீஸூக்தியில் "குரு சுச்ரூஷையிலே பழுத்த ஜ்ஞாநாதிகையாய்" என்று மருமமாக வருளிச்செய்திருப்பதை இங்கு விவரிக்கிறோம். சபரியிடம் மிகச் சிறந்ததொரு தருமம் குருசுச்ரூஷை யென்பது இருந்தது. இதைக் கபந்தன் பெருமாளுக்குத் தெரிவித்தனன்; "ச்ரமணீ சபரீ நாம காகுத்ஸ்த! சிரஜீவிநீ, த்வாம் து தர்மே ஸ்திதா நித்யம்" என்றும் "ச்ரமணீம் தர்மநிபுணாம் அபிகச்ச" என்றுமுள்ள கபந்தன் வார்த்தைகளில் தர்மசப்தத்தினால் கூறப்பட்டது குருசுச்ரூஷா தர்மமேயாகும். பெருமாளும் சபரியைக் கண்டவுடனே க்ஷேமம் வினவுகையில் "கச்சித் தே குரு சுச்ரூஷா ஸபலா சாருபாஷிணி!" என்று உன்னுடைய குருசுச்ரூஷை நிறை

லும், பெருமாள் சபரியினிடம் கலந்து பரிமாறின வரலாறு விசேஷித்து ஸ்பஷ்டமாகக் கூறப்படவில்லையாயினும் இதர ராமாயணங்களிலுள்ளதைக் கொண்டோ, வான்மீகி ராமாயணத்தையே ஆழ்ந்து நோக்கியோ நம் ஆசாரியர்கள் அருளிச் செய்துள்ள விசேஷம் குறிக்கொள்ளத்தக்கது. ஸ்ரீவசனபூஷணத்தில் (233) "பெருமாள் ஸ்ரீ சபரி கையாலே அமுது செய்தருளினார்" என்றவிடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள்—"ரகுகுலதிலகராய் ஆசாரப்ரதானரான பெருமாள் *சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ:* என்னும்படி வேடுவிச்சியாய்வைத்தே குருசுச்ரூஷையிலே பழுத்து ஜ்ஞாநாதிகையாய் தன் நாவுக்கு இனிதாயிருந்த பலமூலாதிகளெல்லாம் இங்குத்தைக்கென்று ஸஞ்சயித்துக்கொண்டு வரவு பார்த்திருந்த ஸ்ரீ சபரி, தன் ஆதாராநுகுணமாகத் தன் கையாலே அமுது செய்யப்பண்ண அதிஸந்துஷ்டராய் அமுதுசெய்தார்" என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் விசேஷித்து அநுஸந்திக்கத் தக்கவை. இதில் "தன் நாவுக்கு இனிதாயிருந்த" என்கிற வார்த்தையை மாமுனிகள் மூலப்ரமாணமின்றி அருளிச் செய்யார். வான்மீகி (ஸம்க்ஷேபத்தில்) "சபர்யா பூஜிதஸ் ஸம்யக்" என்றவிடத்து ஸம்யக் என்பதில் உள்ளுறையும் பொருளே இது என்று கொள்ளலாம். அவளிடத்தில் பெருமாள் இவ்வளவு கலந்து பரிமாறக் காரணமென்ன? என்று சிலர் விமர்சிக்கவும் நேரும்.

31. கேண்மின்; குஹனோடு கலந்து பரிமாறினபோது அவன் சில வுணவுப் பொருள்களைக் கொணர்ந்துகொடுத்து இவற்றைத் திருவுள்ளம்பற்றியருளவேணுமென்று வேண்டினன்; அதற்குப் பெருமாள்சொன்ன மறுமொழி—(வால்மீ. அயோ. 50) "யத்த்விதம் பவதா கிஞ்சித் ப்ரீத்யா ஸமுபகல்பிதம், ஸர்வம் ததநுஜாநாமி நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே, ...அச்வாநாம் காதநேநாஹமர்த்தி நாந்யேந கேநசித், ஏதாவதாத்ர பவதா பவிஷ்யாமி ஸுபூஜித:" என்பது. 'நான் இந்த வனவாஸத்தில் யாரிடத்திலும் ஏதும் பெற்றுக்கொள்வதில்லையென்று விரதம் கொண்டிருக்கிறேன்; இதோ நமது தேர்க்குதிரைகள் விடாய்த்திருக்கின்றன; அவற்றுக்கு வேண்டிய வுணவுகளையே நான் விரும்புபவன்' என்று சொல்லி அவற்றைத் தாம் கைப்பற்றாமலே யிருந்துவிட்டார் பெருமாள். இங்கு பெருமாள் "நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" [நான் தானம் வாங்கக்கூடாதென்று வைத்துக் கொண்டிருக்கிறேன்] என்பது அவசியம் சொல்லியாகவேண்டிய வார்த்தையோ? குகன் மதுபர்க்கம் முதலிய சில வுணவுப்பொருள்களைக் கொணர்ந்து கொடுக்க வந்தானே யல்லது தன தான்ய வஸ்த்ராதிகளொன்றும் கொடுக்க வந்திலன். அவை கொடுக்கவந்தால் அப்போது 'நான் ப்ரதிக்ரஹம் பண்ணுவதில்லை' என்று சொல்லி மறுக்க நியாயமுண்டு. தேன் முதலிய காட்டுணவுப் பொருள்களையே கொடுக்கவந்தபோது "நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" என்று சொல்லி மறுத்த தானது அவச்யம் ஆராயத்தக்கதன்றோ? குகனிடம் இப்படிச்சொன்னவிவரே சபரியிடம் மறுத்துக் கூறாமல் "அர்ச்சிதோஹம் த்வயா பக்த்யா" என்று உகந்து கூறி அவளுடைய ஸமர்ப்பணையை ஏற்றுக்கொண்டார். இது எதனாலென்னில், கீழே நாமெடுத்துக்காட்டியுள்ள ஸ்ரீவசநபூஷண வியாக்யான ஸ்ரீஸூக்தியில் "குரு சுச்ரூஷையிலே பழுத்து ஜ்ஞாநாதிகையாய்" என்று மருமமாக வருளிச் செய்திருப்பதை இங்கு விவரிக்கிறோம். சபரியிடம் மிகச் சிறந்ததொரு தருமம் குருசுச்ரூஷை யென்பது இருந்தது. இதைக் கபந்தன் பெருமாளுக்குத் தெரிவித்தனன். "ச்ரமணீ சபரீ நாம காகுத்ஸ்த! சிரஜீவிநீ, த்வாம் து தர்மே ஸ்திதா நித்யம்" என்றும் "ச்ரமணீம் தர்மநிபுணம் அபிகச்ச" என்று முள்ள கபந்தன் வார்த்தைகளில் தர்மசப்தத்தினால் கூறப்பட்டது குருசுச்ரூஷாதர்மமேயாகும். பெருமாளும் சபரியைக் கண்டவுடனே க்ஷேமம் வினவுகையில் "கச்சித் தே குரு சுச்ரூஷா ஸபலா சாருபாஷிணி!" என்று உன்னுடைய குருசுச்ரூஷை நிறை

வேறியதா வென்று கேட்டிருக்கிறார். அவளும் தான் செய்த குருசுச்ரூஷையைப் பற்றி ஆனந்தமாக விடை கூறியிருக்கின்றாள். "இங்கு என்னுடைய பணிவிடைகளைக்கொண்ட ஆசாரியர்கள் திருநாடுசென்றிருக்கின்றார்கள். அவர்களது திருவடிவாரஞ் செல்ல எனக்கு அனுமதி தரவேணு" மென்றும் கோரியிருக்கிறாள். இத்தகைய நருமம் குகனிடத்து இல்லாமைபற்றியே அவன் தந்த வுணவுகளைத் திருவுள்ளம் பற்றவில்லை - என்பதாகப் பேராசிரியர்களின் நிர்வாஹம்.

32. இங்குச் சிலர் வேறாகக் கூறவருவர்; எங்ஙனே யென்னில்; குகன் சபரியைப் போல் பழம் கொடுத்திருந்தாலும் பெருமாள் அதை ஸ்வீகரித்தே யிருப்பர். அவன் பழம் கொடுக்கவில்லை யென்பது அந்த பிரகரணத்தில் ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. ஆகவே குகனிடம் பெற்றுக்கொள்ளாமைக்கும் சபரியிடம் பெற்றுக்கொண்டமைக்கும் இங்குக் கூறிய காரணம் யுக்தமானதன்று என்று சிலர் சொல்லக்கூடும். அவர்கள் "நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" என்று குகனிடம் இராமபிரான் கூறியுள்ளதை நன்கு ஆராயவேணும். "குகனே! நீ காய்கனி ஏதாவது கொணர்ந்து கொடுத்தால் ஸ்வீகரிக்கிறேன்" என்றாவது பெருமாள் கூறியிரு வேண்டுமே. அங்ஙனம் கூறாது காம் ஊர் திரும்பிச் சென்று சேருகிறவரையில் ஒருவரிடத்திலும் ஒன்றுமே பெற்றுக்கொள்வதில்லையென்று ஒரு விரதம் கொண்டிருப்பதாகப் பொருள்படும்படி கூறியது ஏதோ தட்டுக்கழிக்கிற படியாகவன்றோ காண்கிறது. உணவைக் கைக்கொள்ளும்படியான அதிகார பூர்த்தி குகனிடம் இல்லையென்பதே பெருமாளுடைய திருவுள்ளம். அக்கருத்தைப் பெருமாள் செவ்வனே தெரிவியாமல் 'நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே' என்று கபடமாகக்கூறிக் கழித்தது அவருடைய பெருங்குணத்திற்குக் குறையன்றோ வென்று சிலர் சங்கிக்கக் கூடும். இதற்குச் சமாதானமாவது, "நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" என்று பெருமாள் கூறியது 'யாரிடத்திலும் எதுவும் நான் வாங்கிக்கொள்ளமாட்டேன்' என்றே பொருள்படவேணு மென்கிற நிர்ப்பந்தமில்லை. 'உன்னிடத்தில் வாங்கிக்கொள்ள எனக்கு ப்ரியமில்லை' என்று சொல்லுவதாகவும் பொருள்படும். அப்படி விருப்பமில்லாமைக்குக் காரணம் கீழே நாம் விவரித்ததே. வேதாந்த தேசிகன் ஸங்கல்பஸூர்யோதயத்தில் ஆறாவது அங்கத்தில், விவேகன் ஆனந்தமாகப் பாடுவதாய்வைத்து அற்புதமான வொரு ச்லோகமியற்றி யுள்ளார்; "பக்வதி பரத்வாஜே புத்திஸ் ததா சபரீ க்ருஹே" என்பது அதன் முதற்பாதம். பெருமாள் பரமபவித்ரமான பரத்வாஜாச்ரமத்தில் அமுது செய்தாரென்று கேள்விப்படுவது போலவே சபரி திருமாளிகையிலும் அமுது செய்ததாகக் கேள்விப்படுகிறோம்; இது என்ன சீர்மை! என்று ஈடுபட்டுக் கூறியுள்ளார். அதுவும் இங்கு அநுஸந்தேயம்.

33. கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் (ச்லோ. 27) "கோயம் குண: கதரகோடிகத: கியாந் வா கஸ்ய ஸ்துதே: பதம் அஹோ பத கஸ்ய பூமி:!" என்றொரு குணவிசேஷத்தை யெடுத்துரைத்து மாய்ந்துபோகிறார். அதாவது, [யத் தாத்ருசாகஸமரிம் ரகுவீர! வீக்ஷ்ய விச்ரம்யதாமிதி முமோசித முக்தமாஜௌ.] போர்க்களத்தில் "சசால சாபஞ்ச முமோச வீர:" என்னும்படியே நிலைகலங்கிநின்ற இராவணனை நோக்கி 'இன்றுபோய் நாளைவா' என்று பெருமாள்கூறி விடை கொடுத்தனுப்பினதுண்டே, இது மிகச் சிறந்ததொரு குணமாகக் குலாவப்படுகின்றது. "சுரிகுழற் கனிவாய்த் திருவினைப் பிரித்த கொடுமையிற் கடுவிசையரக்கன்" என்று திருமங்கையாழ்வார் அருளியபடியும், "பஞ்செனச் சிவக்குமென்கால் பாவையைப் பிரித்தபாவி வஞ்சகன்" என்று கம்பர் கூறியபடியும் மஹாபராதிகளில் தலைவனான அவனை ஒரு நொடியிலே வதஞ்செய்து தொலைக்கவேண்டியிருக்க, அங்ஙனம் தொலைத்திடாமல் "கச்சாநுஜாநாமி ரணார்திதஸ் த்வம் ப்ரவிச்ய ராத்ரிஞ்சரராஜ லங்காம், ஆச்வாஸ்ய நிர்யாஹி" என்று விடைகொடுத்துப் போகவிட்ட பெருந்தகையாளனது இக்குணம் ஸ்ரீராமாயணத்திற் காணும் ஸகலகுணங்களி

னும் மிக மேம்பட்டது. அஷ்டாதச ரஹஸ்யத்தில் தனித்வய மென்னும் ரஹஸ்யத்தில் "சீலவத்தையாகிறது அபிஷேகவிக்னம் பிறந்ததென்று வெறுப்பின்றியே *வனவாஸோ மஹோதய:* என்று காடேறப் புறப்பட்டுப்போவது, *ஆவாஸம் த்வஹமிச்சாமி* என்று ரிஷிகள் பக்கலிலே சென்று தாழநிற்பது, *கிங்கரௌ ஸமுபஸ்திதௌ* என்பது, ஜன்ம வ்ருத்தங்களில் குறைய நிற்கிறவர்களை *உகந்த தோழன் நீ* என்பது, இப்படிகளாலே சீலவத்தையை மூதலித்தது" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. அதையும் சற்று விவரிப்போமிங்கு. "ஜன்மவ்ருத்தங்களில் குறைய நிற்கிறவர்களை உகந்த தோழன் நீ என்பது" என்றதைக் கீழே விரிவாக விவரித்தாயிற்று. மற்றைய விரண்டு விஷயங்கள் இனி விவரிக்கப்படுகின்றன. தசரதச்சக்ரவர்த்தி இராமபிரானை ஒரு தடவைக் கிரண்டு தடவையாக அழைத்து 'உனக்கு ராஜ்யம் தந்தேன், முடிசூட ஸன்னாஹம் செய்' என்று சொல்லிவிட்டு, அப்படியே ஸன்னாஹங்கள் செய்து முடிந்தபின் ஒரு பெண்பெண்டாட்டியின் வார்த்தைக்கு இசைந்துநின்று 'உனக்கு நாடில்லை, காடுதான்' என்று சொல்ல, அப்போது சிறிதும் மனவேதனையின்றிக்கே 'நாட்டையாள்வதிற் காட்டிலும் காடுசென்று உறைவதே எனக்குப் பரமானந்தம்' என்று உள்ளம் பொங்கிக் கூறியது மஹாகுணம் என்று ஆசிரியர் திருவுள்ளம் பற்றுகிறார்.

34. இவ்விஷயத்தைக் கம்பர் கூறுமிடத்து, (அயோத். கைகே. 108).

"இப்பொழுதெம்மனோராலியம்புதற் கெளிதோ ? யாருஞ்
செப்பருங்குணத்திராமன் திருமுகச் செவ்வி நோக்கின்
ஒப்பதே முன்பு பின்பவ் வாசகமுரைக்கக் கேட்ட
அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா."

என்றார். 'உனக்கு நாடில்லை; காடுதான் நீ செல்லவேண்டும்' என்று சொன்னபோது இராமபிரானது திருமுகக் கமலத்தில் தோன்றிய விகாஸத்தை அப்பொழுது கட்கூடாகக் கண்டவர்கள் சொல்ல வேண்டுமேயல்லது நாமா அதைச் சொல்ல வல்லோம்!' என்று கைவிட்டவர், ஆகிலுஞ் சொல்லுவோமென்று ஒருவாறு சொல்லுகின்றார். காடு செல்வாயென்கிற சொல் செவிப்படுவதற்கு முன்னே இராமனது முகம் தாமரைபோன்றிருந்ததாம்; அச்சொல் செவிப்பட்டதும் தாமரையை வென்று விளங்கிற்றாம். இதனால், காடு செல்வதைப்பற்றிச் சங்கடமில்லையென்பது மாத்திரமேயன்றி அளவுகடந்த ஆனந்தமுமுண்டாயிற் றென்றவாறு. அவ்வளவு ஆனந்தம் எதற்காக வென்னில்; நாட்டில் அரசனாகிச் சிங்காசனத்து வீற்றிருந்தால் பரத்வகுண மொன்றையே காட்டமுடியுமே யல்லது சீலகுணத்தைக் காட்ட அவகாசமே நேரிடாது. அதிகமாக அக்குணத்தைக் காட்டுதற்கென்றே அவதாரம் செய்த தனக்கு அக்குணம் மிகமிக விளங்குதற்குரிய வனவாஸமே யன்றோ ஆனந்த கந்தமாகும். ஆனதுபற்றியே 'வநவாஸோ மஹோதய:' என்றனன். ரிஷிகள் பக்கலிலே சென்று தாழநின்ற சீலமும் நெஞ்சை யுருக்குவதாகும். மஹர்ஷிகளின் ஆச்ரமங்களிலே தானாகச்சென்று அவர்களைத் தெண்டனிட்டுக் குசலப்ரச்னம் பண்ணவேணுமென்று தானிருக்க, அவர்கள் முற்பட்டுவந்து தம்தம் குறைகளை விண்ணப்பஞ் செய்தபோது *ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா, யதீத்ருசை ரஹம் விப்ரை ருபஸ்தேயை ருபஸ்தித:* என்று அவர்களிடம் இராமபிரான் தான் பொறைவேண்டினது சீலகுணத்தை விளக்கினபடியே யாகும். "அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்யபராக்ரமம்" என்று சொன்ன விச்வாமித்ர முனிவனை நோக்கி. *இமௌ ஸ்ம முநிசார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம்* என்று தன்னையும் தம்பியையும் அவனுக்கு வேலையாட்களாகத் தெரிவித்துக்கொண்டதும், உமக்கு விருப்பமானவையெல்லாம் எமக்குக் கட்டளையிட்டு எங்களிடம் பணிவிடை பெற்றுக்கொள்ள வேணுமென்றதும் ஒப்புயர்வற்ற மஹாகுணமன்றோ. ... ...

னும் மிக மேம்பட்டது. அஷ்டாதச ரஹஸ்யத்தில் தனித்வய மென்னும் ரஹஸ்யத்தில் "சீலவத்தையாகிறது அபிஷேகவிக்னம் பிறந்ததென்று வெறுப்பின்றியே *வநவாஸோ மஹோதய:* என்று காடேறப் புறப்பட்டுப்போவது, *ஆவாஸம் த்வஹமிச்சாமி* என்று ரிஷிகள் பக்கலிலே சென்று தாழநிற்பது, *கிங்கரௌ ஸமுபஸ்திதௌ* என்பது, ஜன்ம வ்ருத்தங்களில் குறைய நிற்கிறவர்களை *உகந்த தோழனீ* என்பது, இப்படிகளாலே சீலவத்தையை மூதலித்தது" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. அதையும் சற்று விவரிப்போமிங்கு. "ஜன்மவ்ருத்தங்களில் குறைய நிற்கிறவர்களை உகந்த தோழன் நீ என்பது" என்றதைக் கீழே விரிவாக விவரித்தாயிற்று. மற்றைய விரண்டு விஷயங்கள் இனி விவரிக்கப்படுகின்றன. தசரதசக்ரவர்த்தி இராமபிரானை ஒரு தடவைக் கிரண்டு தடவையாக அழைத்து 'உனக்கு ராஜ்யம் தந்தேன், முடிசூட ஸன்னாஹம் செய்' என்று சொல்லிவிட்டு, அப்படியே ஸன்னாஹங்கள் செய்து முடிந்தபின் ஒரு பெண்பெண்டாட்டியின் வார்த்தைக்கு இசைந்துநின்று 'உனக்கு நாடில்லை, காடுதான்' என்று சொல்ல, அப்போது சிறிதும் மனவேதனையின்றிக்கே 'நாட்டையாள்வதிற் காட்டிலும் காடுசென்று உறைவதே எனக்குப் பரமானந்தம்' என்று உள்ளம் பொங்கிக் கூறியது மஹாகுணம் என்று ஆசிரியர் திருவுள்ளம் பற்றுகிறார்.

34. இவ்விஷயத்தைக் கம்பர் கூறுமிடத்து, (அயோத். கைகே. 108).

"இப்பொழுதெம்மனோரா லியம்புதற் கெளிதோ? யாருஞ்
செப்பருங்குணத்திராமன் திருமுகச் செவ்வி நோக்கின்
ஒப்பதே முன்பு பின்பவ் வாசகமுரைக்கக் கேட்ட
அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா."

என்றார். 'உனக்கு நாடில்லை; காடுதான் நீ செல்லவேண்டும்' என்று சொன்னபோது இராமபிரானது திருமுகக் கமலத்தில் தோன்றிய விகாஸத்தை அப்பொழுது கட்கூடாகக் கண்டவர்கள் சொல்ல வேண்டுமேயல்லது நாமா அதைச் சொல்ல வல்லோம்!' என்று கைவிட்டவர், ஆகிலுஞ் சொல்லுவோமென்று ஒருவாறு சொல்லுகின்றார். காடு செல்வாயென்கிற சொல் செவிப்படுவதற்கு முன்னே இராமனது முகம் தாமரைபோன்றிருந்ததாம்; அச்சொல் செவிப்பட்டதும் தாமரையை வென்று விளங்கிற்றாம். இதனால், காடு செல்வதைப்பற்றிச் சங்கடமில்லையென்பது மாத்திரமேயன்றி அளவுகடந்த ஆனந்தமுமுண்டாயிற்றென்றவாறு. அவ்வளவு ஆனந்தம் எதற்காக வென்னில்; நாட்டில் அரசனாகிச் சிங்காசனத்து வீற்றிருந்தால் பரத்வகுண மொன்றையே காட்டமுடியுமே யல்லது சீலகுணத்தைக் காட்ட அவகாசமே நேரிடாது. அதிகமாக அக்குணத்தைக் காட்டுதற்கென்றே அவதாரம் செய்த தனக்கு அக்குணம் மிகமிக விளங்குதற்குரிய வனவாஸமேயன்றோ ஆனந்த கந்தமாகும். ஆனதுபற்றியே 'வநவாஸோ மஹோதய:' என்றனன். ரிஷிகள் பக்கலிலே சென்று தாழநின்ற சீலமும் நெஞ்சை யுருக்குவதாகும். மஹர்ஷிகளின் ஆச்ரமங்களிலே தானாகச்சென்று அவர்களைத் தெண்டனிட்டுக் குசலப்ரச்னம் பண்ணவேணுமென்று தானிருக்க, அவர்கள் முற்பட்டுவந்து தம்தம் குறைகளை விண்ணப்பஞ் செய்தபோது *ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா, யதீத்ருசை ரஹம் விப்ரை ருபஸ்தேயை ருபஸ்தித:* என்று அவர்களிடம் இராமபிரான் தான் பொறைவேண்டினது சீலகுணத்தை விளக்கினபடியே யாகும். "அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்யபராக்ரமம்" என்று சொன்ன விச்வாமித்ர முனிவனை நோக்கி. *இமௌ ஸ்ம முநிசார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம்* என்று தன்னையும் தம்பியையும் அவனுக்கு வேலையாட்களாகத் தெரிவித்துக்கொண்டதும், உமக்கு விருப்பமானபடி யெல்லாம் எமக்குக் கட்டளையிட்டு எங்களிடம் பணிவிடை பெற்றுக் கொள்ளவேணுமென்றதும் ஒப்புயர்வற்ற மஹாகுணமன்றோ. ... ...

## (4) ஸ்ரீராமன் க்ருதஜ்ஞ[illegible]

35. அயோத்யா காண்டத்தில் (1—11).—“கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி, நஸ்மரத்யபகாராணாம் சதமபி ஆத்மவத்தயா.” என்றுள்ள ச்லோகமானது இராமபிரானுடைய க்ருதஜ்ஞதா குணத்தை நன்கு வெளியிடுகின்றது. ஏதேனுமொருவிதத்தில் யாரேனும் ஒருதவி செய்தாலும் அதனால் எப்போதும் உள்ளம் பூரித்திருப்பதாகவும், நூற்றுக்கணக்கான தீங்குகளிழைத்தாலும் அவற்றைச் சிறிதும் நெஞ்சிற் கொள்வதில்லையாகவும் இந்தச்லோகத்தில் ஸ்ரீராமகுணாதிசயம் கூறப்பட்டுள்ளது. இதில் கதஞ்சித் என்று முன்னம் ப்ரயோகிக்கப்பட்டுள்ள பதம் குறிக்கொள்ளத்தக்கது. உபகாரம் செய்யவேணுமென்கிற எண்ணத்தோடு செய்கையன்றியே அபுத்திபூர்வகமாகச் செய்ததாயிருந்தாலும் அதையும் பேருதவியாகக்கொண்டு மகிழ்பவனும் இராமன். நெஞ்சாரவே நூற்றுக்கணக்கான தீங்குகள் செய்யினும் அவற்றை நெஞ்சிற் கொள்ளானும். இப்பெருங்குணத்தை நாம் ஸ்ரீராமாயணத்தில் எங்கே கண்டோமென்னில்; பல விடங்களிற் கண்டாலும் சில விடங்களையே இங்கெடுத்துக்காட்டுவோம். ஆனால், இங்கு முன்னம் ஒன்று சொல்லவேண்டியதாகிறது; “வெறிதே யருள் செய்வர்” என்று ஆழ்வாரருளிச் செய்தபடி ஒன்றுமே செய்யாதவர்கட்குங்கூட மிகச்சிறந்த அருளைச் செய்யுமியல்வினனான இராமன் ஒன்று செய்தவர்களுக்கு உகந்திருக்கிறானென்றால் இது வியப்போ? இது பாராட்டத்தக்கதொரு குணமாகுமோ? ஆகாது தான். ஆனாலும், இராமன் தன்னை ஒரு மனிதனாக நடித்துக் காட்டினதனால், ‘உலகில் மனிதர்களிடத்துக்காணும் குணங்களெல்லாம் இராமபிரானிடத்து உள்ளன’ என்று காட்டவேண்டுவது ப்ராப்தமாகிறபடியால் அந்த முறையில் காட்டலாமன்றோ.

36. கேண்மின்; குரங்கரசனான சுக்ரீவனிடத்திலும் அரக்கர் கோமானான விபீடணனிடத்திலும் இராமபிரான் காட்டியருளின திருவருள் வாயாற் சொல்லவொண்ணாதது, நெஞ்சாலும் நினைப்பரிது. இதற்கீடாக அவர்கள் செய்தநன்றி யாதென்று பார்க்குமளவில், விபீஷணன் சரணாகதி செய்தானென்றாவது சொல்லத் தக்கதாகவுள்ளது; ஸுக்ரீவனிடத்திலோ வென்னில் அதுவுமில்லை; “லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி” என்றும் “ஸுக்ரீவம் சரணம் கத:” என்றுமுள்ள பிரமாணங்களின்படி இராமன் ஸுக்ரீவனைச் சரணம் புக்கதாகக் காண்கிறோமேயல்லது சுக்ரீவன் இராமனைச் சரணம்புக்கதாக இல்லை. ஆனாலும், இராமபிரானது திருவுள்ளத்தினால் சுக்ரீவன் பேருதவி செய்தானாகக் கொள்ளப்பட்டான்; அவ்வுதவி யாதெனில்; இராமன் சீதையைப் பிரிந்து மிக வருந்தி இன்னது செய்வதென்று தோன்றாமல் சென்றுகொண்டிருக்கையில் “பம்பாதீரே ஹநுமதா ஸங்கதோ வாநரேண ஹ” என்னும்படி பம்பைக்கரையில் அனுமன் வந்து சந்தித்தானன்றே; இது சுக்ரீவனது கட்டளையினால்தானே நிகழ்ந்தது. அனுமன் இராமனிடம் வந்து சேர்ந்ததும் ‘நான் சுக்ரீவனால் அனுப்பப்பட்டு இவ்விடம் வந்தேன் உங்களைக் காண’ என்றே சொல்லியிருக்கின்றனன். இத்தகைய மஹாகுணசாலியான ஆஞ்சநேயனை யனுப்பினது ஸுக்ரீவன் தன்னுடைய காரியத்திற்காகவாயினும், இராமன் அங்ஙனம் கொள்ளாது அதனைத் தனக்குச்செய்த பேருதவியாகக் கொண்டே சுக்ரீவனிடத்துப் பேரருள் புரிந்தனன். விபீடணன் “ஸர்வலோகசரண்யாய ராகவாய மஹாத்மநே” என்று சொல்லிக் கொண்டு தன்னிருப்பிடந் தேடிவந்ததொரு சிறிய செயலையே பேருதவியாகக் கொண்டு அவனிடத்து மிக்கபரிவு காட்டியருளினன் இராமன். அந்தப் பரிவு எப்படிப்பட்டதென்பதை ஸ்ரீவசநபூஷணத்தில் ஒரு வாக்யத்தில் காணலாம்; அதாவது—(228) “விபீஷணனை ராவணன் *குலபாம்ஸநம்* என்றான்; பெருமாள்

[illegible] நினைத்து வார்த்தை யருளிச்செய்தார்.'' என்பது. இராமன் விபீடணனை இக்ஷ்வாகுவம்சத்தவர்களுள் ஒருவனாகத் திருவுள்ளம்பற்றி வார்த்தை யருளிச்செய்தாரென்பது ஸ்ரீராமாயணத்தில் எங்கே காணகிறதென்னில்; விபீடணனை இராமபிரான் அங்கீகரித்த பிறகு இலங்கையிலுள்ளாருடைய பலாபலங்களைச் சொல்லுமாறு வினவுகின்ற இராமன் "ஆக்யாஹி மம தத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்" என்கிறான். ராக்ஷஸர்களின் பலாபலத்தை உள்ளபடி எனக்குச் சொல்லு என்பது இதன் பொருள். 'விபீஷணா! உன்னினத்தாருடைய பலாபலங்களைச் சொல்லு' என்றோ 'ராவணனுடைய பலாபலங்களைச் சொல்லு' என்றோ சொல்லவேண்டுமிடத்து அப்படிச் சொல்லாமல் 'ராக்ஷஸர்களின் பலாபலங்களைச் சொல்லு' என்றதனால் விபீடணனை ராக்ஷஸஜாதியில் வேறு பிரித்தபடியே தெரியும் என்று ஆசார்யர்கள் திருவுள்ளம்பற்றினர். "செல்வ விபீடணற்கு வேறாக நல்லானை" என்கிறார் திருமங்கையாழ்வார், பெரிய திருமொழியில். இராமனுக்கு மற்ற பக்தர்கள் யாவரும் ஒரு தட்டு, விபீஷணனொருவன் தனித்தட்டு என்பது இப்பாசுரத்தின் கருத்து. ஆக விபீடணன் சுக்கிரீவன் போல்வார் செய்த செயல்களைக் கனத்ததாகக் கொண்டு அவர்களுக்கு நன்மை புரிந்த விஷயம் நிற்க;

37. பிறர் எவ்வளவு அபகாரங்கள் செய்தாலும் அவற்றைச் சிறிதும் நினைப்பதில்லை' என்று இதுவும் ஒரு பெருங்குணமாக இராமனுக்குச் சொல்லப்பட்டிருக்கின்றதே! சுக்கிரீவன் விஷயத்தில் இது மாறுபாடாகக் காண்கிறதே; எங்ஙனேயெனின்; வாலியை வதைத்துச் சுக்கிரீவனுக்கு மகுடாபிஷேகஞ்செய்து, கார்காலம் நீங்கினவுடனே வானரசேனைகளைத் திரட்டிக்கொண்டு வருமாறு கட்டளையிட்டு அவனைக் கிஷ்கிந்தைக்குப் போகவிட்டனன் இராமன். போனவவன் மன்மதலீலைகளில் கால்தாழ்ந்திருந்ததனால் கெடு கடந்துபோனதை நினையாமலேயிருந்தான். அப்போது இராமன் இளையோனை நோக்கிக் கூறுகின்றனன்: 'லக்ஷ்மணா! அரசர்கள் போர்க்குப் புறப்படவேண்டு மிக்காலத்தில் சுக்கிரீவன் என்னை அடியோடு மறந்து வாளாகிடக்கின்றனனே; செய்ந்நன்றி மறந்த காதகனல்லவா அவன்; நீ உடனே அவனிடஞ் சென்று நான் சொன்னதாக இங்ஙனம் கூறுவாயாக; செய்ந்நன்றி மறந்த பாபிஷ்டன் புருஷர்களில் கடையானவன்; மாமிசம் தின்னப்பிறந்த ஜந்துக்களுங்கூட அவனது மாமிசத்தைத் தின்னாதென்று சொல்லு. லக்ஷ்மணா! என் பராக்கிரமத்தை அவன் நன்கறிந்திருந்தும் மழைகாலம் சென்ற பின்பும் சிறிதுமச்சமின்றிக் காம பரவசனாய்க் கிடக்கிறானே; வாலிசென்ற வழி அவனுக்கும் திறந்திருக்கின்றதென்று அவனிடம் கூறு. அவனை உற்றாருறவினரோடுங்கூட யமபுர மனுப்பச் சித்தமாயிருக்கின்றேனென்று தெரிவி; அப்படிப்பட்ட கதியை வரவழைத்துக்கொள்ளவேண்டாமென்று சொல்லு' என்று. இவ்வளவு சீற்றம் இராமனுக்கு ஏன் உண்டாயிற்று? *ந ஸ்மரதி அபகாராணாம் சதமபி ஆத்மவத்தயா' [நூற்றுக்கணக்கான தீங்குகள் கண்டாலும் நெஞ்சு கன்றுவதில்லை] என்று கொண்டாடப்பெற்ற இராமனுக்கு உயிர்த்தோழன் திறத்து இத்தனை சீற்றம் தகுமா? இது குணக்கேடல்லவா? என்கிற கேள்வி பிறக்கக் கூடும்.

38. இதற்குச் சொல்லுகிறோம் கேண்மின்; மேற்சொன்னவிதமாக இராமன் லக்ஷ்மணனிடம் சொன்னபோது அவ்விளையோன் "சத்தியம் தவறின சுக்ரீவனை இன்றே கொன்றுவிடுகிறேன்; வாலியின் மகனான அங்கதன் நமக்குத் துணை புரிவான், சுக்கிரீவனைத் தொலைத்தே விடுவோம்'' என்றனன். அதற்கு இராமன் சொல்லுகிறான்—'லக்ஷ்மணா! நன்னடத்தையுள்ள நீ இப்படிப்பட்ட நண்பனை ஆராயாது கொல்லலாகாது; அவனிடம் பழையபடி நல்ல குளிர்ந்த வார்த்தை

இக்ஷ்வாகுவம்ச்யராக நினைத்து வார்த்தை யருளிச்செய்தார்." என்பது. இராமன் விபீடணனை இக்ஷ்வாகுவம்சத்தவர்களுள் ஒருவனாகத் திருவுள்ளம்பற்றி வார்த்தை யருளிச் செய்தானென்பது ஸ்ரீ ராமாயணத்தில் எங்கே காண்கிறதென்னில்; விபீடணனை இராமபிரான் அங்கீகரித்த பிறகு இலங்கையிலுள்ளாருடைய பலாபலங் களைச் சொல்லுமாறு வினவுகின்ற இராமன் "ஆக்யாஹி மம தத்வேந ராக்ஷஸா நாம் பலாபலம்" என்கிறான். ராக்ஷஸர்களின் பலாபலத்தை உள்ளபடி எனக்குச் சொல்லு, என்பது இதன் பொருள். 'விபீஷணா! உன்னினத்தாருடைய பலா பலங்களைச் சொல்லு' என்றோ 'ராவணனுடைய பலாபலங்களைச் சொல்லு' என்றோ சொல்லவேண்டியிருக்க அப்படிச் சொல்லாமல் 'ராக்ஷஸர்களின் பலாபலங்களைச் சொல்லு' என்றதானது விபீடணனை ராக்ஷஸஜாதியில் வேறு படுத்திக்காட்டியே தீரும் என்று ஆசார்யர்கள் திருவுள்ளம்பற்றினர். "செல்வ விபீடணற்கு வேறாக நல்லானை" என்கிறார் திருமங்கையாழ்வார், பெரிய திரு மொழியில். இராமனுக்கு மற்ற பக்தர்கள் யாவரும் ஒரு தட்டு, விபீஷணனொருவான் தனித்தட்டு என்பது இப்பாசுரத்தின் கருத்து. ஆக, விபீடணன் சுக்கிரீவன் போல்வார் செய்த செயல்களைக் கனத்ததாகக் கொண்டு அவர்களுக்கு நன்மை புரிந்த விஷயம் நிற்க;

37. 'பிறர் எவ்வளவு அபகாரங்கள் செய்தாலும் அவற்றைச் சிறிதும் நினைப் பதில்லை' என்று இதுவும் ஒரு பெருங்குணமாக இராமனுக்குச் சொல்லப்பட்டிருக் கின்றதே! சுக்கிரீவன் விஷயத்தில் இது மாறுபாடாகக் காண்கிறதே; எங்ஙனே யெனின்; வாலியை வதைத்துச் சுக்கிரீவனுக்கு மகுடாபிஷேகஞ்செய்து, கார் காலம் நீங்கினவுடனே வானரசேனைகளைத் திரட்டிக்கொண்டு வருமாறு கட்டளை யிட்டு அவனைக் கிஷ்கிந்தைக்குப் போகவிட்டனன் இராமன். போனவவன் மன் மதலீலைகளில் கால்தாழ்ந்திருந்ததனால் கெடு கடந்துபோனதை நினையாமலே யிருந்தான். அப்போது இராமன் இளையோனை நோக்கிக் கூறுகின்றனன்: 'லக்ஷ்மணா! அரசர்கள் போர்க்குப் புறப்படவேண்டு மிக்காலத்தில் சுக்கிரீவன் என்னை அடியோடு மறந்து வாளாகிடக்கின்றனனே; செய்ந்நன்றி மறந்த காத கனல்லவா அவன்; நீ உடனே அவனிடஞ் சென்று நான் சொன்னதாக இங்ங னம் கூறுவாயாக; செய்ந்நன்றி மறந்த பாபிஷ்டன் புருஷர்களில் கடையான வன்; மாம்சம் தின்னப்பிறந்த ஜந்துக்களுங்கூட அவனது மாம்சத்தைத் தின்னா தென்று சொல்லு. லக்ஷ்மணா! என் பராக்கிரமத்தை அவன் நன்கறிந்திருந்தும் மழைகாலம் சென்ற பின்பும் சிறிதுமச்சமின்றிக் காம பரவசனாய்க் கிடக்கிறானே; வாலிசென்ற வழி அவனுக்கும் திறந்திருக்கின்றதென்று அவனிடம் கூறு. அவனை உற்றுறவினரோடுங்கூட யமபுர மனுப்பச் சித்தமாயிருக்கின்றேனென்று தெரிவி; அப்படிப்பட்ட கதியை வரவழைத்துக்கொள்ளவேண்டா மென்று சொல்லு' என்று. இவ்வளவு சீற்றம் இராமனுக்கு ஏன் உண்டாயிற்று? *ந ஸ்மரதி அபகா ராணாம் சதமபி ஆத்மவத்தயா* [நூற்றுக்கணக்கான தீங்குகள் கண்டாலும் நெஞ்சு கன்றுவதில்லை] என்று கொண்டாடப்பெற்ற இராமனுக்கு உயிர்த்தோழன் திறத்து இத்தனை சீற்றம் தகுமா? இது குணக்கேடல்லவா? என்கிற கேள்வி பிறக்கக் கூடும்.

38. இதற்குச் சொல்லுகிறோம் கேண்மின்; மேற்சொன்னவிதமாக இராமன் லக்ஷ்மணனிடம் சொன்னபோது அவ்விளையோன் "சத்தியம் தவறின சுக்ரீவனை இன்றே கொன்றுவிடுகிறேன்; வாலியின் மகனான அங்கதன் நமக்குத் துணை புரி வான், சுக்கிரீவனைத் தொலைத்தே விடுவோம்" என்றனன். அதற்கு இராமன் சொல்லுகிறான்—'லக்ஷ்மணா! நன்னடத்தையுள்ள நீ இப்படிப் பட்ட நண்பனை ஆராயாது கொல்லலாகாது; அவனிடம் பழையபடி நல்ல குளிர்ந்த வார்த்தை

களையே பேசு; அவன் நம்விஷயத்தில் நன்றிகெட்டவனே யென்பது நிச்சயமாகத் தெரிந்தால் பிறகு உன் விருப்பத்தின்படி செய்' என்று. இதனால் நாம் தெரிந்து கொள்வதென்ன? உலகில் நன்றிமறத்தலென்பது பெரும் பாதகம், அப்பாதகியை என்ன செய்யினும் குற்றமில்லை என்கிற நூற்கொள்கையை எடுத்துரைப்ப தொன்றே இராமனுக்கு இலக்கியமானது; "தர்மஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி" என்று சொல்லித் தருமநெறியை நிலைநாட்டுதற்கென்றே திருவவதாரம் செய்தரு ளின பெருமாள் இத்தகைய நூற்கொள்கைகளைத் தெரிவிக்கும் முகத்தால் தர்ம ஸ்தாபனம் செய்யவேண்டுவதும் அவசியமாதலால் இதனால் இராமனுக்குக் குணக் கேடு யாதொன்றுமில்லை யென்றுணர்க. இலங்கைக்கு வழிவிடவேண்டுமென்று கடலரசனை நோக்கிச் சரணாகதி செய்தார் பெருமாள்; அவன் முகங்காட்டவில்லை யென்று சீறிச் சிவந்தார்; உடனே அவன் விநயத்தோடு வந்து நிற்க, அவன்மீது எய்யத்தொடுத்த அம்பை அவனது பகைவர்களின் மேற்செலுத்திப் பரம கருணை யைக் காட்டியருளினாரென்று இராமாயணம் கதையுள்ளது: இதனால், சீற்றமும் நன்மைக்கே யாகிறதென்று நன்கு தெரிகின்றதன்றோ. கருணைமூர்த்தியான இராகவனுக்குச் சீற்றமுண்டாக வழியில்லைதான். சீற்றமுண்டானதாகக் காணு மிடங்களில் தருமஸம்ரக்ஷணமேதேனும் தெரியவந்தே தீரும்.

39. க்ருதஜ்ஞதை என்னும் மஹாகுணத்தை மானிடவடிவனான இராம னிடத்தில் நாம் நிரூபித்துக் காட்டுவது ஒரு புறமிருக்கட்டும். பரந்தாமனான ஸ்ரீமந் நாராயணமூர்த்தியிடத்தில் இக்குண முண்மையை நம் ஆசாரியர்கள் வெகு அற்புத மாக நிரூபித்துக் காட்டியருளுகிறார்கள். மனிதர்களின் க்ருதஜ்ஞதாகுணம் ஒரு விதமானது. பகவானுடைய க்ருதஜ்ஞதாகுணம் மிகச் சீரியது; இதனை நம் ஆசாரி யர்கள் நிரூபிக்கும் விதம் மிகவும் ஆச்சரியமானது. அஃது இங்கு விவரிக்கப்படு கின்றது. க்ருதஜ்ஞ: என்னுஞ் சொல்லானது (க்ருதம் ஜாநாதி இதி க்ருதஜ்ஞ:) என்கிற வியுத்பத்தியின்படி செய்கிற காரியங்களை யுணருபவன் என்று பொருள் படும். ஜீவர்களாகிய நாம் செய்கிற காரியங்களை யுணருபவர் பகவான் என்ற தாயிற்று. அனந்தகோடி ஜீவராசிகள் ஒவ்வொரு க்ஷணத்திலும் செய்யும் காரியங்களை எம்பெருமான் தன்னுடைய சிறந்த சக்தி விசேஷத்தினால் உடனிருந்து அறிகிறானென்பது ஆச்சரியப்படத்தக்க விஷயமன்றோ; அதையா இங்குச் சொல் லுகிறது? என்னில்; கேண்மின். ஸர்வேச்வரன் நம்போன்ற சேதனர்களைத் தன்னருளுக்கு இலக்காக்கிக்கொள்வதற்கு உபாயமாக நாம் செய்யவேண்டிய காரியங்களை சாஸ்திரங்களில் சொல்லிவைத்திருப்பதை யாவரும் அறிவர். அவற் றுக்கு ஸுக்ருதமென்று பொதுவான பெயர் வழங்கும். நன்றாகச் செய்யப் பட்டது' என்பது இதன் பொருள். நாம் செய்யுங் காரியங்களில் நன்றாகச் செய்யப்படுவதும் தீதாகச் செய்யப்படுவதுமாக இரண்டு வகைகள் உள்ளனவன்றோ. அவை வடமொழியில் ஸுக்ருத—துஷ்க்ருத பதங்களாலும் தென்மொழியில் நல் வினை தீவினை யென்னுஞ் சொற்களாலும் வழங்கப்பெறும். ஸுக்ருதத்தைப் பற்றியே இங்குப் பேசுவோம். இது பொதுவாக இருவகைப்படும்—ஜ்ஞாத ஸுக்ருதமென்றும் அஜ்ஞாதஸுக்ருதமென்றும். மனப்பூர்வமாகத் தெரிந்து செய்யும் நன்மைகள் ஜ்ஞாதஸுக்ருத மெனப்படும். நமக்கும் தெரியாமல் விளையும் நன்மைகள் அஜ்ஞாதஸுக்ருத மெனப்படும்.

40. இவற்றுள் முதல் வகுப்பான ஜ்ஞாதஸுக்ருதங்கள் பலபலவாயிருக் கும்; தவம்புரிவது தானஞ்செய்வது யஜ்ஞயாகங்களைச் செய்வது கங்கை யமுனை காவேரி முதலிய புண்ணிய தீர்த்தங்களிற் சென்று குடைந்தாடுவது, கோயில் திருமலை பெருமாள்கோயில் திருநாராயணபுரம் முதலான திவ்யதேசங்களிற் சென்று பகவத்ஸேவை செய்வது, 'பேராயிரமு மோதுமின்கள்' என்கிற கட்ட

களையே பேசு; அவன் நம்விஷயத்தில் நன்றிகெட்டவனே யென்பது நிச்சயமாகத் தெரிந்தால் பிறகு உன் விருப்பத்தின்படி செய்' என்று. இதனால் நாம் தெரிந்து கொள்வதென்ன? உலகில் நன்றிமறத்தலென்பது பெரும் பாதகம், அப்பாதகியை என்ன செய்யினும் குற்றமில்லை என்கிற நூற்கொள்கையை எடுத்துரைப்பதொன்றே இராமனுக்கு இலக்கியமானது; "தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி" என்று சொல்லித் தருமநெறியை நிலைநாட்டுதற்கென்றே திருவவதாரம் செய்தருளின பெருமாள் இத்தகைய நூற்கொள்கைகளைத் தெரிவிக்கும் முகத்தால் தர்மஸ்தாபனம் செய்யவேண்டுவதும் அவசியமாதலால் இதனால் இராமனுக்குக் குணக்கேடு யாதொன்றுமில்லை யென்றுணர்க. இலங்கைக்கு வழிவிடவேண்டுமென்று கடலரசனை நோக்கிச் சரணாகதி செய்தார் பெருமாள்; அவன் முகங்காட்டவில்லையென்று சீறிச் சிவந்தார்; உடனே அவன் விநயத்தோடு வந்து நிற்க, அவன்மீது எய்யத்தொடுத்த அம்பை அவனது பகைவர்களின் மேற்செலுத்திப் பரம கருணையைக் காட்டியருளினதொன்று இராமாயண கதையுள்ளது: இதனால், சீற்றமும் நன்மைக்கே யாகிறதென்று நன்கு தெரிகின்றதன்றோ. கருணாமூர்த்தியான இராகவனுக்குச் சீற்றமுண்டாக வழியில்லைதான். சீற்றமுண்டானதாகக் காணுமிடங்களில் தருமஸம்ஸ்தாபனமே தேனும் தெரியவந்தே தீரும்.

39. க்ருதஜ்ஞதை என்னும் மஹாகுணத்தை மானிடவடிவனான இராமனிடத்தில் நாம் நிரூபித்துக் காட்டுவது ஒரு புறமிருக்கட்டும். பரந்தாமனான ஸ்ரீமந் நாராயணமூர்த்தியிடத்தில் இக்குணமுண்மையை நம் ஆசாரியர்கள் வெகு அற்புதமாக நிரூபித்துக் காட்டியருளுகிறார்கள். மனிதர்களின் க்ருதஜ்ஞதாகுணம் ஒருவிதமானது. பகவானுடைய க்ருதஜ்ஞதாகுணம் மிகச் சிறியது; இதனை நம் ஆசாரியர்கள் நிரூபிக்கும் விதம் மிகவும் ஆச்சரியமானது. அஃது இங்கு விவரிக்கப்படுகின்றது. 'க்ருதஜ்ஞ:' என்னுஞ் சொல்லானது (க்ருதம் ஜாநாதி இதி க்ருதஜ்ஞ:) என்கிற வியுத்பத்தியின்படி செய்கிற காரியங்களை யுணருபவன் என்று பொருள்படும். ஜீவர்களாகிய நாம் செய்கிற காரியங்களை யுணருபவர் பகவான் என்றதாயிற்று. அனந்தகோடி ஜீவராசிகள் ஒவ்வொரு க்ஷணத்திலும் செய்யும் காரியங்களை எம்பெருமான் தன்னுடைய சிறந்த சக்தி விசேஷத்தினால் உடனிருந்து அறிகிறானென்பது ஆச்சரியப்படத்தக்க விஷயமன்றோ; அதையா இங்குச் சொல்லுகிறது? என்னில்; கேண்மின். ஸர்வேச்வரன் நம்போன்ற சேதனர்களைத் தன்னருளுக்கு இலக்காக்கிக்கொள்வதற்கு உபாயமாக நாம் செய்யவேண்டிய காரியங்களை சாஸ்திரங்களில் சொல்லிவைத்திருப்பதை யாவரும் அறிவர். அவற்றுக்கு ஸுக்ருதமென்று பொதுவான பெயர் வழங்கும். 'நன்றாகச் செய்யப்பட்டது' என்பது இதன் பொருள். நாம் செய்யுங் காரியங்களில் நன்றாகச் செய்யப்படுவதும் தீதாகச் செய்யப்படுவதுமாக இரண்டு வகைகள் உள்ளனவன்றோ. அவை வடமொழியில் ஸுக்ருத—துஷ்க்ருத பதங்களாலும் தென்மொழியில் நல்வினை தீவினை யென்னுஞ் சொற்களாலும் வழங்கப்பெறும். ஸுக்ருதத்தைப் பற்றியே இங்குப் பேசுவோம். இது பொதுவாக இருவகைப்படும்—ஜ்ஞாதஸுக்ருத மென்றும் அஜ்ஞாதஸுக்ருதமென்றும். மனப்பூர்வமாகத் தெரிந்து செய்யும் நன்மைகள் ஜ்ஞாதஸுக்ருத மெனப்படும். நமக்கும் தெரியாமல் விளையும் நன்மைகள் அஜ்ஞாதஸுக்ருத மெனப்படும்.

40. இவற்றுள் முதல் வகுப்பான ஜ்ஞாதஸுக்ருதங்கள் பலபலவாயிருக்கும்; தவம்புரிவது தானஞ்செய்வது யஜ்ஞயாகங்களைச் செய்வது கங்கை யமுனை காவேரி முதலிய புண்ணிய தீர்த்தங்களிற் சென்று குடைந்தாடுவது, கோயில் திருமலை பெருமாள்கோயில் திருநாராயணபுரம் முதலான திவ்யதேசங்களிற் சென்று பகவத்ஸேவை செய்வது, 'பேராயிரமுமோதுமின்கள்' என்கிற கட்ட

ளைக்கு உட்பட்டு ஸஹஸ்ரநாமம் முதலான துதிகளை வாயாரச் சொல்லுவது, திருவிளக்கெரிக்கை திருமாலை யெடுக்கை என்று சொல்லப்படுகிற பலவகைக்கைங்கரியங்களைச்செய்வது... ஆகிய இப்படிப்பட்டகாரியங்களை 'இது செய்யக்கடவோம்" என்று ஸங்கல்பித்துக்கொண்டு மனஸ்கரித்துச் செய்வதான்து ஜ்ஞாதஸுக்ருதமென்னப்படும். நாம் ஸங்கல்பித்துக்கொண்டு செய்யாவிடினும் கோல்விழுக்காட்டாலே நல்வினையாகப் பரிணமிக்கும் செய்கைகள் அஜ்ஞாதஸுக்ருதமெனப்படும். நல்லது செய்யவேணுமென்று நாம் நினைத்துச் செய்யாதவற்றை ஸுக்ருதமென்னுஞ் சொல்லால் வழங்கலாமோ? சாஸ்திரங்களினால் விதிக்கப்பட்டதாய் கர்த்தாவான சேதநனாலே புத்திபூர்வமாயனுஷ்டிக்கப்பட்டதான செய்கையையன்றோ ஸுக்ருதமென்று வழங்கலாம். இன்ன ஸுக்ருதம் பண்ணினேனென்று கர்த்தாவான சேதனன் அறியாதவற்றை ஸுக்ருதமென்று எப்படிச் சொல்லக்கூடும்?—என்று ஆக்ஷேபிக்க இடமுண்டு. இதற்கு நம் பூருவாசாரியர்கள் அருளிச் செய்யும் ஸமாதானத்தையே இங்குத் தெரிவிக்கிறோம்; ஸ்ரீவசனபூஷணத்தில் பகவந்நிர்ஹேதுகக்ருபாவைபவ ப்ரகரணத்தில்—(396.) "சாஸ்த்ரமும் விதியாதே நாமுமறியாதே யிருக்கிற வித்தை ஸுக்ருதமென்று நாம் பேரிடுகிறபடி யென்னென்னில், நாமன்று, ஈச்வரனென்று கேட்டிருக்கையாயிருக்கும்" என்றுள்ளது. நம்மையறியாமல் நேர்ந்த நல்வினைக்கு ஸுக்ருதமென்று பேரிடுகிறது நாமன்று; ஸர்வமுக்திப்ரஸங்கம் வாராமைக்காக ஸர்வஜ்ஞனான ஸர்வேச்வரன்தான் ஸுக்ருதமென்று பேரிட்டுவைத்தான் என்று ஆசாரியர்கள் அருளிச்செய்வர்களாம். இதனால் என்ன தேறுகிறதென்னில்; நமக்கு அஜ்ஞாதமாயிருந்தாலும் எம்பெருமானுக்கு ஜ்ஞாதமாயிருக்கையாலே ஸுக்ருதமென்னக் குறையில்லை என்றதாயிற்று.

41. இதற்குமேல் ஒருகேள்வி பிறக்கும்; எம்பெருமானே யதார்த்தஜ்ஞானநிதி; அவனுக்கு அந்யதாஜ்ஞான விபரீதஜ்ஞானங்கள் அடியோடு கிடையாதென்று சாஸ்த்ரங்களாலறிகிறோம். நாம் மனஸ்கரித்துச் செய்யாததொன்றை அவன் ஸுக்ருதமென்று கொண்டானாகில் அது யதார்த்தஜ்ஞானமாகுமோ? ஒருவன் ஸந்நிபாதஜ்வரம் முதலான கொடிய நோய்களினால் துன்பப்படுங்காலங்களில் தன்னையறியாமல் ஏதேதோ உளறுகிறான்! அபுத்திபூர்வமாக வெளிவரும் அந்த உளறல்களில் யாராவது அர்த்தம் காண்கிறார்களோ, இல்லையன்றோ. அப்படியே நம்மையறியாமல் நாம் செய்யும் செயல்களை எம்பெருமான் ஸுக்ருதமென்று எப்படிக் கொள்ளக்கூடும்?—என்கிற கேள்வி பிறக்கும். கேண்மின்; எம்பெருமான் சேதநர்களிடத்தில் இயற்கையாகவே இன்னருள் பொருந்தியவன். இவனை எவ்வகையினாலாவது தான் அங்கீகரிப்பதற்கு அப்பெருமான் வழிதேடுபவன். இச்சேதநன் புத்திபூர்வமாகச் செய்யும் நல்வினைகளை முன்னிட்டே இவனை அங்கீகரிப்பதாக எம்பெருமான் வைத்துக்கொண்டால், ஒருவனைக்கூட அங்கீகரிக்க அவகாசம் நேராது. ஏனென்னில்; நாம் புத்திபூர்வமாகச் செய்வது தீவினைகளையே யாதலாலும் நல்வினையை நாம் நெஞ்சாலும் நினைப்பவர்களல்லோமாதலாலும் நம்மை அங்கீகரிக்க எம்பெருமானுக்கு அவகாசமேது? நாமும் இழந்து அவனும் இழந்துபோக வேண்டியதாகிறது. நம்முடைய இழவு கிடக்கட்டும், இழந்தோமென்கிற இழவுமின்றிக்கேயிருக்கிற நாம் நம்மிழவைப்பற்றிக் கவலைப்படாதொழிந்தாலும், சொத்துக்கு உடையவனாய் ஸ்வாமியென்று பேர்பெற்றிருக்கு மெம்பெருமான் இழந்து தரிக்கமாட்டானன்றோ. 'ஸுக்ருதம் செய்பவர்களையன்றி மற்றையோரை நான் அங்கீகரிக்க மாட்டேன் என்று சாஸ்த்ரங்களில் அவன் பொறித்துவைத்திருப்பதனால் ஸுக்ருதம் செய்யாதவர்களை அங்கீகரிக்க முடியாமலிருக்கிறது; சேதநர்களோ புத்திபூர்வமாக ஸுக்ருதம் செய்யமாட்டாதவர்களாகையாலே இவர்களை அங்கீகரிக்க இடமில்லாமலிருக்கிறது; ஆகவே இழந்தேபோகவேண்டியதாகிறது. இழவாமைக்காக அப்பெருமான் ஒரு கள்ளவழியில் நுழைகிறான். (அதாவது) காண

களேபரங்களைப் பெற்றிருக்கிற சேதநன் வாளா கிடப்பதில்லை; "நஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத்" என்று கீதையில் சொன்னபடி எப்போதும் ஏதாவதொரு காரியம் செய்துகொண்டே போதைப் போக்கிவருகின்ற சேதநன் செய்யும் காரியங்களிலே, நாம் நன்மையென்று பேரிட்டுக்கொள்ளும்படியான காரியம் ஏதாவது இருக்குமாவென்று பார்ப்போம்—என்று ஆராயத் தொடங்குகிறான். அவனுடைய அநுக்ரஹத்தாலே அப்படிப்பட்ட காரியங்கள் நம்மிடத்திலே அவனுக்குக் கிடைத்து விடுகின்றன. அவற்றை ஸுக்ருதமாகவே அவன் திருவுள்ளம் பற்றுகின்றான். நாம் மனப்பூர்வமாக ஸுக்ருதமென்று செய்யாததாகையாலே அஜ்ஞாதமென்கிறது. அவன் திருவுள்ளத்தாலே இது ஸுக்ருதமாகக் கொள்ளப்பட்டுவிட்டபடியால் ஸுக்ருதமென்கிறது. ஆகவே அஜ்ஞாத ஸுக்ருதமென்று பேர்பெற்று விட்டது. இந்த அஜ்ஞாதஸுக்ருதமானது, யாத்ருச்சிக ஸுக்ருதமென்றும் ஆநுஷங்கிக ஸுக்ருதமென்றும் ப்ராஸங்கிக ஸுக்ருத மென்றும் பல பெயர்களையுடைத்தாயிருக்கும். இவை நம்போல்வாரிடமிருந்து எம்பெருமானால் எவ்விதமாகக் கொள்ளப்படுகின்றன வென்பதை இனி நிரூபிப்போம்.



42. நாம் ஸம்ஸாரிகளாகையாலே மக்களைப் பெறுகிறோம்; மகளை ஒருவனுக்கு மணம் புரிவிக்க வேண்டியதாகிறது; மகனுக்கு ஒரு பெண்ணைக் கொள்ள வேண்டியதாகிறது; ஆகவே ஸ்ரீரங்கத்திலுள்ள ஒரு வரனுக்குத் தன் மகளைக் கொடுக்கவும், திருவேங்கடத்திலுள்ளவொரு பெண்ணைத் தன் மகனுக்குக் கொள்ளவும் நேருகிறதென்று வைத்துக்கொள்ளுங்கள். இந்த ஸம்ஸாரி அடிக்கடி வியவஹாரங்களில் [வாய்ப்பேச்சுக்களில்] ஸ்ரீரங்கத்தையும் திருமலையையும் வாயால் சொல்ல வேண்டி வருகிறது. 'என்னுடைய மாப்பிள்ளை ஸ்ரீரங்கத்திலிருக்கிறார்' 'ஸ்ரீரங்கத்திலிருந்து என்னுடைய மாப்பிள்ளை நேற்று வந்தார்' 'மாப்பிள்ளையை யழைத்துவர ஸ்ரீரங்கம் போய்வரப்போகிறேன்' 'என்னுடைய நாட்டுப்பெண் திருவேங்கட மலையிலிருந்து வந்தாள்' என்றிப்படி பலகால் வ்யவஹரிக்க நேர்கின்றது. இந்த வ்யவஹாரங்களில் திருவரங்கத்தையும் திருமலையையும் பலகால் சொல்லுவதானது "இந்த திவ்யதேசங்களை நாம் சொன்னால் ஸுக்ருதமுண்டு" என்கிற எண்ணத்தினாலன்று; அம்பத்தூர், ஆவடி என்கிற ஊர்ப்பெயர்களைச் சொல்லுவதுபோலவே கோயில் திருமலை யென்னுமூர்ப்பெயர்களையும் இவன் சொல்லாநின்றான். ஆனாலும் ஏதேனுமொரு வியாஜத்தை எதிர்பார்ப்பதில் நோக்குடையனான எம்பெருமான் 'என்னூரைச் சொன்னானிவன்' என்று இதையொரு ஸுக்ருதமாகக் கணக்கிடாநின்றான்.

43. மற்றுங் கேண்மின்; ஸம்ஸாரிகளுக்குப் பிறக்கும் மக்களுக்கு ரங்கன், ராகவன், திருவேங்கடன், கோவிந்தன், கோபாலன், நாராயணன், மாதவன் என்றிப்படி பெயரிட்டு அந்தப் பிள்ளைகளை ஆர்வத்தோடு அழைக்கும்போதெல்லாம் இந்தப் பெயர்களைச் சொல்லி அழைக்க நேருகின்றது; தவிரவும் வ்யவஹாரங்களில் 'ரங்கன் வந்தான்; ராகவன் போனான், க்ருஷ்ணனைக் கண்டேன், ராமனோடு பேசினேன்' என்றிப்படி பலகாலும் சொல்ல நேருகின்றது. எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லுகிறோமென்கிற எண்ணம் சிறிதுமில்லாமல் இங்ஙனே நிகழும் ஸம்ஸாரிகளின் வியவஹாரங்களில் எம்பெருமான் 'என் பெயரைச் சொன்னானிவன்' என்று இதையொரு ஸுக்ருதமாகக் கணக்கிடாநின்றான்.

44. சில பாகவதர்கள் திருவேங்கட யாத்திரையாக வழிநடந்து செல்லாநிற்கையில் கள்ளர்கள் அவர்களையடித்துப் பொருள்களை யபஹரிப்பதாக அணுகினார்கள்; அதே ஸமயத்தில் சில ராஜசேவகர்கள் தங்களுடைய காரியமாக ஆயுதங்களைத்

தாங்கிக்கொண்டு அவ்வழியே வந்துகொண்டிருப்பதைக் கள்ளர்கள் கண்டு 'இவர்கள் இந்த பாகவதர்களுக்குத் திருமேனிக்காவலாக வருகின்றார்கள்போலும்; இங்கு நம்முடைய எண்ணம் ஒன்றும் நிறைவேறாது' என்றெண்ணி வாளா விலகியொழிந்தனர். இந்த நிகழ்ச்சி அங்கு யாத்ருச்சிகமாகவந்த ராஜ சேவகர்களுக்கும் தெரியாது, யாத்திரை செல்லுகின்ற பாகவதர்களுக்கும் தெரியாது; ஆனாலும் அங்கீகரிக்க அவகாசம் பார்க்கிற ஸர்வேச்வரன் அந்த ராஜசேவகர்களை பாகவதரக்ஷணம் பண்ணினவர்களாகத் திருவுள்ளம் பற்றுகிறான். அந்த ராஜசேவகர்கள் அந்த பாகவதர்கள் சென்ற வழியில் சென்றதுதன்னையே ஒரு ஸுக்ருதமாகக் கணக்கி[illegible]

[illegible] ஒருவன் ஓரிடத்திலே நிலம் வாங்கி அதிலே வெங்காயம் உள்ளி முதலானவற்றைப் பயிர்செய்கிறான். தண்ணீரிறைக்க அங்கே ஸௌகர்ய மில்லாமையால் நெடுந்தூரத்திலே நீருள்ள விடத்தில் துலையிட்டு, தன்வயலிலே வந்து சேரும்படி தண்ணீரிறைக்கின்றான். அந்த நீர் ஒருபெரிய வாய்க்காலாகப் பெருகி வயலுக்குச் செல்லாநின்றது. யாத்திரை செல்கின்ற சில பாகவதர்கள் தாபார்த்தர்களாய் தாஹமும் மிகுந்து எங்கும் தண்ணீர் கிடைக்காமல் வருந்தி வருகையில் இந்தத் தண்ணீர்ப்பெருக்கைக் கண்டு பரமானந்தங்கொண்டு காலும் கையும் முகமுங் கழுவி விடாய்தீர்ந்து வாழ்த்திச் சென்றார்கள். நெடுந்தூரத்தில் துலையிட்டுத் தண்ணீரிறைக்கின்ற அவன் இதைச் சிறிதுமறியாதவனாயிருந்தாலும் ஸர்வஜ்ஞனான எம்பெருமான் "என்னடியார்களது விடாயைத் தீர்த்தானிவன்" என்றுகொண்டு இதையொருஸுக்ருதமாகக் கணக்கிடாநின்றான்.

46. ஒரு தனிகன் தான் சூது சதுரங்கமாடுவதற்காக ஒரு சாவடி கட்டி அதிலே சூதாடிக் காலம் கழிக்கிறான். ஆனால் இரவு முழுவதும் சூதாடிக் கண் விழித்திருக்க முடியாதே; நடுநிசி வரையில் சூதாடிவிட்டு உறங்குவதற்கு வீடு போய்விடுகிறான். அப்போது, யாத்திரையாக வழிகடந்துவருகின்ற சில பரமபாகவதர்கள் தாங்கள் சயனிப்பதற்கு இடம் கிடைக்காமல் வருந்தியிருந்து இந்தச் சாவடியிலே யொதுங்கநேர்கின்றது. இப்படி ஒருநாளல்ல; நாடோறும் நேர்கின்றது; இதை அந்தத் தனிகன் அறியான்; அறிந்தானாகில் ஒருவரும் உள்ளே புகாதபடி கதவுகள் போடவும் ஏற்பாடு செய்திடுவன். இப்படி சில பாகவதர்கள் தங்கிப் போகிறார்களென்பதை அவனறியாமையாலே சேமக்காப்பு செய்யப்படாம விருந்து யாத்திரை செய்வார்க்குப் பேரின்பமளிக்கும் வசதியாக இருந்துவருகின்றது. இது எம்பெருமான் திருவுள்ளத்திலே பட்டு, 'என்னடியார்க்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தானிவன்' என்று ஒரு ஸுக்ருதமாகக் கணக்கிடலாகிறது.

47. ஒருவன் கோஹத்தி பண்ணியே ஜீவிக்குமியல்வினன்; அவன் ஒருநாள் ஒரு பசுவைக்கண்டு அதைப் பிடித்துக் கொல்ல முயன்று தொடரத் தொடங்கினான்; இதையறிந்த அந்தப் பசு அஞ்சியோடத் தொடங்கிற்று; இவனும் விடாது அதைத் தொடர்ந்து ஓடுகிறான். பசு ஓடும் வழியில் ஒரு பெருமாள் கோவில் இருந்தது; இதற்கு வலமாக ஓடிற்று அந்தப் பசு; இந்தக் கிராதகன் அதைத் தொடர்ந்து பிடிக்கவேண்டியதற்காகத் தானும் அந்தக் கோவிலை வலஞ் செய்வானாய் ஓடுகிறான்; ஒரு பகவதாலயத்தை வலஞ் செய்கிறோமென்கிற எண்ணம் அவனுக்கில்லை; கோவிலை வலஞ் செய்வது ஸுக்ருதம் என்கிற அறிவுமில்லை யவனுக்கு. ஆனாலும், ஆள்பார்த்துத் திரியும் எம்பெருமான் 'இவன் என் கோயிலை வலஞ்செய்தான்' என்று இதையொரு ஸுக்ருதமாகக் கணக்கிடாநின்றான்.

தாங்கிக்கொண்டு அவ்வழியே வந்துகொண்டிருப்பதைக் கள்ளர்கள் கண்டு 'இவர்கள் இந்த பாகவதர்களுக்குத் திருமேனிக்காவலாக வருகின்றார்கள்போலும்; இங்கு நம்முடைய எண்ணம் ஒன்றும் நிறைவேறாது' என்றெண்ணி வாளா விலகியொழிந்தனர். இந்த நிகழ்ச்சி அங்கு யாதருச்சிகமாகவந்த ராஜ சேவகர்களுக்கும் தெரியாது, யாத்திரை செல்லுகின்ற பாகவதர்களுக்கும் தெரியாது; ஆனாலும் அங்கிகரிக்க அவகாசம் பார்க்கிற ஸர்வேச்வரன் அந்த ராஜசேவகர்களை பாகவதரக்ஷணம் பண்ணினவர்களாகத் திருவுள்ளம் பற்றுகிறான். அந்த ராஜசேவகர்கள் அந்த பாகவதர்கள் சென்ற வழியில் சென்றதுதன்னையே ஒரு ஸுக்ருதமாகக் கணக்கிடாநின்றான்.

45. ஒருவன் ஓரிடத்திலே நிலம் வாங்கி அதிலே வெங்காயம் உள்ளி முதலானவற்றைப் பயிர்செய்கிறான். தண்ணீரிறைக்க அங்கே ஸௌகர்ய மில்லாமையால் நெடுந்தூரத்திலே நீருள்ள விடத்தில் துலையிட்டு, தன்வயலிலேவைந்து சேரும்படி தண்ணீர் இறைக்கின்றான். அந்த நீர் ஒருபெரிய வாய்க்காலாகப் பெருகி வயலுக்குச் செல்லாநின்றது. யாத்திரை செல்கின்ற சில பாகவதர்கள் தாபார்த்தர்களாய் தாஹம் மிகுந்து எங்கும் தண்ணீர் கிடைக்காமல் வருந்தி வருகையில் இந்தத் தண்ணீர்ப்பெருக்கைக் கண்டு பரமானந்தங்கொண்டு காலும் கையும் முகமுங் கழுவி விடாய்தீர்ந்து வாழ்த்திச் சென்றார்கள். நெடுந்தூரத்தில் துலையிட்டுத் தண்ணீரிறைக்கின்ற அவன் இதைச் சிறிதுமறியாதவனாயிருந்தாலும் ஸர்வஜ்ஞனான எம்பெருமான் "என்னடியார்களது விடாயைத் தீர்த்தானிவன்" என்று கொண்டு இதையொருஸுக்ருதமாகக் கணக்கிடாநின்றான்.

46. ஒரு தனிகன் தான் சூது சதுரங்கமாடுவதற்காக ஒரு சாவடி கட்டி அதிலே சூதாடிக் காலம் கழிக்கிறான். ஆனால் இரவு முழுவதும் சூதாடிக் கண் விழித்திருக்க முடியாதே; நடுநிசி வரையில் சூதாடிவிட்டு உறங்குவதற்கு வீடு போய்விடுகிறான். அப்போது, யாத்திரையாக வழிநடந்துவருகின்ற சில பரமபாகவதர்கள் தாங்கள் சயனிப்பதற்கு இடம் கிடைக்காமல் வருந்தியிருந்து இந்தச் சாவடியிலே யொதுங்கநேர்கின்றது. இப்படி ஒருநாளல்ல; நாடோறும் நேர்கின்றது; இதை அந்தத் தனிகன் அறியான்; அறிந்தானாகில் ஒருவரும் உள்ளே புகாதபடி கதவுகள் போடவும் ஏற்பாடு செய்திடுவன். இப்படி சில பாகவதர்கள் தங்கிப் போகிறார்களென்பதை அவனறியாமையாலே சேமக்காப்பு செய்யப்படாமலிருந்து யாத்திரை செய்வார்க்குப் பேரின்பமளிக்கும் வசதியாக இருந்துவருகின்றது. இது எம்பெருமான் திருவுள்ளத்திலே பட்டு, 'என்னடியார்க்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தானிவன்' என்று ஒரு ஸுக்ருதமாகக் கணக்கிடலாகிறது.

47. ஒருவன் கோஹத்தி பண்ணியே ஜீவிக்குமியல்வினன்; அவன் ஒரு நாள் ஒரு பசுவைக்கண்டு அதைப் பிடித்துக் கொல்ல முயன்று தொடரத் தொடங்கினான்; இதையறிந்த அந்தப் பசு அஞ்சியோடத் தொடங்கிற்று; இவனும் விடாது அதைத் தொடர்ந்து ஓடுகிறான். பசு ஓடும் வழியில் ஒரு பெருமாள் கோவில் இருந்தது; இதற்கு வலமாக ஓடிற்று அந்தப் பசு; இந்தக் கிராதகன் அதைத் தொடர்ந்து பிடிக்கவேண்டியதற்காகத் தானும் அந்தக் கோவிலை வலஞ் செய்வானாய் ஓடுகிறான்; ஒரு பகவதாலயத்தை வலஞ் செய்கிறேனென்கிற எண்ணம் அவனுக்கில்லை; கோவிலை வலஞ் செய்வது ஸுக்ருதம் என்கிற அறிவுமில்லை யவனுக்கு. ஆனாலும், ஆள்பார்த்துத் திரியும் எம்பெருமான் 'இவன் என் கோயிலை வலஞ்செய்தான்' என்று இதையொரு ஸுக்ருதமாகக் கணக்கிடாநின்றான்.

48. இங்ஙனே பல நிகழ்ச்சிகள் ஸம்ஸார வாழ்க்கையில் ஸம்பவிப்பவையுள. இவையே அஜ்ஞாதஸுக்ருதமெனப்படுவன. மேலே நிரூபிக்கப்பட்டவற்றில் யாத்ருச்சிக ஸுக்ருத கோஷ்டியில் சேர்வன சில; ப்ராஸங்கிக ஸுக்ருத கோஷ்டியில் சேர்வன சில. ஆக இப்படிப்பட்ட ஸுக்ருதங்களை எம்பெருமான் தானாக அறிந்து நம்மை விஷயீகரிப்பதற்கு இவற்றை ஹேதுவாகவோ வியாஜமாகவோ கொள்ளுகிறானென்று இதுதன்னையும் நாம் சாஸ்திரங்களாலேயே அறிகிறோம். இப்படிப்பட்ட ஸுக்ருதஜ்ஞதாகுணம் எம்பெருமானிடத்திலுள்ளது பற்றியே அவனுக்கு க்ருதஜ்ஞன் என்னும் புகழ் தோன்றிற்று. ஆளவந்தாரும் தமது ஸ்தோத்ர ரத்னத்தில் 'வசீ வதாந்ய:' என்னும் ச்லோகத்தில் எம்பெருமானது பல திருக்குணங்களையும் கூறி வருகையில் 'க்ருதீ க்ருதஜ்ஞ:' என்று இக்குணத்தையும் கூட்டிக் கூறியுள்ளார். எம்பெருமானுடைய க்ருதஜ்ஞதா குணத்தை இவ்விதமாகவே நம் ஆசாரியர்கள் நிரூபித்தருளி பக்தர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றனர். 

49. இத்தகைய குணம் இராமபிரானிடத்து உள்ளதாக நாம் எது கொண்டு அறிகிறோமென்னில், ஓரிடத்தையே இங்குக் குறிப்பிடுவோம்; விபீஷணாழ்வான் சேர்ந்தபோது அவனை அங்கீகரிக்கக் கூடாதென்று வாதித்தவர்களில் தலைவன் ஸுக்ரீவன்; இராமபிரான் அவனுடைய வாதங்களைக் கண்டித்து விபீஷணாழ்வானைத் திருவுள்ளம் பற்றியே தீருவதென்கிற தனது உறுதியை வெளியிட்டபின் விபீடணனைத் தன்னிடம் அழைத்துவரும்படி ஸுக்ரீவனுக்கே கட்டளையிட்டுச் சொல்லும்போது 'ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட தத்தமஸ்யாபயம் மயா' என்றார். 'ஸுக்ரீவ! விபீடணனுக்கு நாம் அபயமளித்தோமாதலால் அவனை நீயே அழைத்துவா' என்று சொல்லி, உடனே "விபீஷணோ வா ஸுக்ரீவ! யதிவா ராவண: ஸ்வயம்" என்றார்; இதன் பொருளாவது, ஸுக்ரீவ! நம்மை அடைக்கலம் புகுவதாக வந்து நிற்பவன் விபீடணனென்று நீங்கள் சொல்லுவதனால் அவனை அங்கீகரித்த[illegible] சொன்னேன்; ஒருகால் விபீஷணனல்லாமல் அவனது வேடம் பூண்ட இராவணனே வந்திருப்பதாகத் தெரியவந்தால் அவ்விராவணனை அங்கீகரிப்பதா? என்று மறுபடியும் விசாரம் வைத்துக்கொள்ளாமல் அவனையே தாராளமாக அழைத்துவா என்றபடி. 

50. இங்ஙனம் தம்முடைய உதாரமான திருவுள்ளத்தைக்காட்டுகின்ற இராமபிரான் ராவணனிடத்தில் என்ன ஸுக்ருதங்கண்டு இந்த வார்த்தை சொன்னானென்று ஆராயுமளவில், மஹா பாபியான அவ்விராவணனிடத்தில் புத்திபூர்வமான ஸுக்ருதமொன்றும் காணமுடியாமற்போனாலும் மேலே விவரித்தவைகளில் யாத்ருச்சிகம் முதலிய ஸுக்ருதங்கள் காணநேருமென்கிற துணிவுகொண்டே அங்ஙனமருளிச் செய்யலாயிற்றென்று நம் ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றுகின்றனர். 

## (5) ஸ்ரீராமன் ஸத்யவாதி

51. அயோத்யாகாண்டம் இரண்டாம் ஸர்க்கத்தில் தசரத சக்ரவர்த்தியிடத்தில் நகரத்து ஜனங்கள் ஸ்ரீராம குணங்களைச் சொல்லிவருகையில் *ப்ரியவாதீ ச பூதாநாம் ஸத்யவாதீ ச ராகவ:* என்று ஸ்ரீராமபிரானுடைய ஸத்யவாதித்வத்தைக் கொண்டாடிக் கூறியிருக்கிறார்கள். ஸ்ரீராமாயணத்தில் ஸ்ரீராமனுடைய ஸத்யவாதித்வம் பலவிடங்களில் புகழப்படுகின்றது. அதைப்பற்றி இங்கு விவரிப்போம். ஸத்யவாதீ என்பதற்கு ஸத்யமே சொல்லுபவன் என்பது கருத்து. ஸத்யமாவது என்ன? என்பதைப்பற்றி முன்னம் ஆராய்ச்சி செய்யவேண்டும்.

48. இங்ஙனே பல நிகழ்ச்சிகள் ஸம்ஸார வாழ்க்கையில் ஸம்பவிப்பவையுள. இவையே அஜ்ஞாதஸுக்ருதமெனப்படுவன. மேலே நிரூபிக்கப்பட்டவற்றில் யாத்ருச்சிக ஸுக்ருத கோஷ்டியில் சேர்வன சில; ப்ராஸங்கிக ஸுக்ருத கோஷ்டியில் சேர்வன சில. ஆக இப்படிப்பட்ட ஸுக்ருதங்களை எம்பெருமான் தானுக அறிந்து நம்மை விஷயீகரிப்பதற்கு இவற்றை ஹேதுவாகவோ வியாஜமாகவோ கொள்ளுகிறுனென்று இதுதன்னையும் நாம் சாஸ்திரங்களாலேயே அறிகிறோம். இப்படிப்பட்ட ஸுக்ருதஜ்ஞானம் எம்பெருமானிடத்திலுள்ளது பற்றியே அவனுக்கு க்ருதஜ்ஞன் என்னும் புகழ் தோன்றிற்று. ஆளவந்தாரும் தமது ஸ்தோத்ர ரத்னத்தில் 'வசீ வதாந்ய:' என்னும் ச்லோகத்தில் எம்பெருமானது பல திருக்குணங்களையும் கூறி வருகையில் 'க்ருதீ க்ருதஜ்ஞ:' என்று இக்குணத்தையும் கூட்டிக் கூறியுள்ளார். எம்பெருமானுடைய க்ருதஜ்ஞதா குணத்தை இவ்விதமாகவே நம் ஆசாரியர்கள் நிரூபித்தருளி பக்தர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றனர்.

49. இத்தகைய குணம் இராமபிரானிடத்து உள்ளதாக நாம் எதுகொண்டு அறிகிறோமென்னில், ஓரிடத்தையே இங்குக் குறிப்பிடுவோம்; விபீஷணுழ்வான் சேர்ந்தபோது அவனை அங்கீகரிக்கக் கூடாதென்று வாதித்தவர்களில் தலைவன் ஸுக்ரீவன்; இராமபிரான் அவனுடைய வாதங்களைக் கண்டித்து விபீஷணுழ்வானைத் திருவுள்ளம் பற்றியே தீருவதென்கிற தனது உறுதியை வெளியிட்டபின் விபீடணனைத் தன்னிடம் அழைத்துவரும்படி ஸுக்ரீவனுக்கே கட்டளையிட்டுச் சொல்லும்போது 'ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட தத்தமஸ்யாபயம் மயா' என்றார். 'ஸுக்ரீவ! விபீடணனுக்கு நாம் அபயமளித்தோமாதலால் அவனை நீயே அழைத்துவா' என்று சொல்லி, உடனே "விபீஷணோ வா ஸுக்ரீவ! யதிவா ராவண: ஸ்வயம்" என்றார்; இதன் பொருளாவது, ஸுக்ரீவ! நம்மை அடைக்கலம் புகுவதாக வந்து நிற்பவன் விபீடணனென்று நீங்கள் சொல்லுவதனுல் அவனை அங்கீகரித்தருளச் சொன்னேன்; ஒருகால் விபீஷணனல்லாமல் அவனது வேடம் பூண்ட இராவணனே வந்திருப்பதாகத் தெரியவந்தால் அவ்விராவணனை அங்கீகரிப்பதா? என்று மறுபடியும் விசாரம் வைத்துக்கொள்ளாமல் அவனையே தாராளமாக அழைத்துவா என்றபடி.

50. இங்ஙனம் தம்முடைய உதாரமான திருவுள்ளத்தைக்காட்டுகின்ற இராமபிரான் ராவணனிடத்தில் என்ன ஸுக்ருதங்கண்டு இந்த வார்த்தை சொன்னுனென்று ஆராயுமளவில், மஹா பாபியான அவ்விராவணனிடத்தில் புத்திபூர்வமான ஸுக்ருதமொன்றும் காணமுடியாமற்போனலும் மேலே விவரித்தவகையில் யாத்ருச்சிகம் முதலிய ஸுக்ருதங்கள் காணநேரு மென்கிற துணிவுகொண்டே அங்ஙனமருளிச் செய்யலாயிற்றென்று நம் ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றுகின்றனர்.

## (5) ஸ்ரீராமன் ஸத்யவாதி

51. அயோத்யாகாண்டம் இரண்டாம் ஸர்க்கத்தில் தசரத சக்ரவர்த்தியிடத்தில் நகரத்து ஜனங்கள் ஸ்ரீராம குணங்களைச் சொல்லிவருகையில் *ப்ரியவாதீ ச பூதாநாம் ஸத்யவாதீ ச ராகவ:* என்று ஸ்ரீராமபிரானுடைய ஸத்யவாதித்வத்தைக் கொண்டாடிக் கூறியிருக்கிறார்கள். ஸ்ரீராமாயணத்தில் ஸ்ரீராமனுடைய ஸத்யவாதித்வம் பலவிடங்களில் புகழப்படுகின்றது. அதைப்பற்றி இங்கு விவரிப்போம். ஸத்யவாதீ என்பதற்கு ஸத்யமே சொல்லுபவன் என்பது கருத்து. ஸத்யமாவது என்ன? என்பதைப்பற்றி முன்னம் ஆராய்ச்சி செய்யவேண்டும்.

'உள்ளதை உள்ளபடியே கண்டு உள்ளபடியே சொல்லுவதுதான் சத்தியம் என்று உலகமெல்லாம் கொண்டிருக்கின்றது. இதை நம் ஆசாரியர்கள் ஆராயுமிடத்துச் சிறிது சிக்ஷித்துப் பேசுகிறார்கள். "உள்ளதை உள்ளபடியே கண்டு உள்ளபடியே சொல்லுவது" என்பதில், உள்ளதை உள்ளபடியே காண்பதென்பதையும் சேர்த்திருப்பது கூடாது; ஏனெனில்; உலகில் மனிதர்களுக்கு ஒன்றை வேறொன்றாக மயங்குகையாகிற மருள் ஸஹஜமானது. கயிற்றைக் கண்டு பாம்பு என்று மருளுவது மனிதர்களுக்கு ஸஹஜமேயன்றோ. இப்படிப்பட்ட ப்ரமங்கள் பலவும் நேருமாதலால், அந்தப்ரமத்தினால் ஒன்றை வேறொன்றாகத் தெரிந்துகொண்டவன் தான் தெரிந்துகொண்ட விதமாகவேயன்றோ பிறர்க்குச் சொல்ல முடியும். கயிற்றைக்கண்டு ஸர்ப்பமென்று மருண்டவன் பாம்பு பாம்பென்று கத்தினாலும், அங்கே ஸர்ப்பமுள்ளதென்று ஒருவரிடம் கூறினாலும் அது அஸத்யவசனமாக ஆகவேண்டிவரும். உண்மையில் அது அஸத்யவசனமாகாது. அவன் தான் க்ரஹித்தபடியேயன்றோ சொல்லியிருக்கிறான். இது அவன் கருத்தால் ஸத்யவசனமேயொழிய அஸத்யவசனமாகாது. "ஏனாகாது? இவன் அஸத்யமாகத் தானே க்ரஹித்துவிட்டான்; அது பிசகல்லவோ?" என்று சிலர் வாதிக்கக்கூடும். இந்த வாதம் பொருந்தாது. ஒன்றை வேறொன்றாக க்ரஹிக்கையாகிற ப்ரமம் என்பது தெய்வச் செயலாக நேருமதேயொழிய வேறல்ல. அது, மருள் அல்லது மயக்கு என்கிற குற்றத்தின்பாற்படுமேயல்லது பொய் என்கிற குற்றத்தின்பாற்படாது.

52. பகவத்கீதையில் பத்தாவது அத்யாயத்தில் நான்காவது ச்லோகத்தில் "க்ஷமா ஸத்யம் தமச் சம:" என்றவிடத்து ஸத்யமின்னதென்பதை நிரூபிக்கும் ஸ்ரீராமாநுஜபாஷ்யமும் அதற்கு வேதாந்த தேசிகருடைய டீகையும் இங்கு நோக்கத்தக்கன. 'உள்ளதை உள்ளபடியே கண்டு சொல்வது ஸத்யம்' என்னாமல், 'தான் கண்டபடியே சொல்வது ஸத்யம்' என்றார் பாஷ்யகாரர். இதன் கருத்தை விவரித்தார் தேசிகர். 'தான் கண்டபடியே சொல்வது ஸத்யம்' என்றதிலும் [illegible]வேண்டியதுண்டு; கண்டது கண்டபடியே சொல்லுவதும் ஸத்யமாகாது; ஏனென்னில் விஷ்ணுஸ்ம்ருதியில் "ஸத்யம் பூதஹிதம் ப்ரோக்தம்" என்று சொல்லப்பட்டுள்ளது. கண்டது கண்டபடியே சொல்லுவதானது ப்ராணிகளுக்கு ஹிதமாயிருந்தாலன்றோ; அப்படியல்லாமல் அஹிதமாயிருக்குமானால் அது ஸத்யமாகாது, அஸத்யமேயாகும். "ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யம் அப்ரியம்" என்கிற வசனமும் இங்கு அறியத்தக்கதாகும். பிறர்க்கு வெறுப்பையுண்டாக்கமாட்டாத வார்த்தை எதுவோ அதுவே ஸத்யமென்றும், பிறர்க்கு வெறுப்பை விளைவிக்கும் வார்த்தை உண்மையில் ஸத்யமாயிருந்தாலும் அஸத்யமாகவே கருதப்படுமென்றும் நூற்கொள்கையுள்ளது. ஒருவன் சொல்லுகிற ஸத்யவசனத்தினால் பிறர்க்கு அனர்த்தம் விளையுமாயின் அது ஸத்யவசனமாகாது; அஸத்யவசனமாகவே கொள்ளத்தகும் என்பர் பெரியோர். இவ்விஷயத்தில் பல சங்கைகள் தோன்றும்; நியாயாலயத்தில் நடக்கும் விவகாரங்களில் உண்மை [illegible]ற்காகச் சில யோக்யர்களான மஹான்களைச் சாக்ஷியிடுவதுண்டே; அவர்கள் உண்மையை யொளிக்காமல் சொல்லித்தானே யாக வேண்டும்; உள்ளதை உள்ளபடி யுரைத்தால் ஒரு தலையில் அனர்த்தம் விளைந்து [illegible] தீரும்; அப்படி அனர்த்தத்தை விளைவிப்பதான ஸத்யத்தைச் சொல்லலாகாதென்பது [illegible]கொள்கையானால் ப்ராமாணிகர்களாயுள்ளவர்கள் ஸத்யத்தை [illegible]வேண்டுமே. அது யுக்தமாகுமோ? ப்ராமாணிகர்களின் செயல் [illegible]இல்லையே. கொலை, களவு, வஞ்சகம் முதலிய விஷயங்களில் [illegible]ப்பட்டவர்கள் உண்மையை வெளியிட்டுப் புகழ்பெறுகின்றார் [illegible] உண்மையை யொளித்தால் அஸத்யவாதிகளென்று இகழவும்

‘உள்ளதை உள்ளபடியே கண்டு உள்ளபடியே சொல்லுவதுதான் சத்தியம் என்று உலகமெல்லாம் கொண்டிருக்கின்றது. இதை நம் ஆசாரியர்கள் ஆராயுமிடத்துச் சிறிது சிக்ஷித்துப் பேசுகிறார்கள். “உள்ளதை உள்ளபடியே கண்டு உள்ளபடியே சொல்லுவது” என்பதில், உள்ளதை உள்ளபடியே காண்பதென்பதையும் சேர்த்திருப்பது கூடாது; ஏனெனில்: உலகில் மனிதர்களுக்கு ஒன்றை வேறொன்றாக மயங்குகையாகிற மருள் ஸஹஜமானது. கயிற்றைக் கண்டு பாம்பு என்று மருளுவது மனிதர்களுக்கு ஸஹஜமேயன்றோ. இப்படிப்பட்ட ப்ரமங்கள் பலபல நேருமாதலால், அந்தப்ரமத்தினால் ஒன்றை வேறொன்றாகத் தெரிந்துகொண்டவன் தான் தெரிந்துகொண்ட விதமாகவேயன்றோ பிறர்க்குச் சொல்ல முடியும். கயிற்றைக்கண்டு ஸர்ப்பமென்று மருண்டவன் பாம்பு பாம்பென்று கத்தினாலும், அங்கே ஸர்ப்பமுள்ளதென்று ஒருவரிடம் கூறினாலும் அது அஸத்யவசனமாக ஆகவேண்டிவரும். உண்மையில் அது அஸத்யவசனமாகாது. அவன் தான் கிரஹித்தபடியேயன்றோ சொல்லியிருக்கிறான். இது அவன் கருத்தால் ஸத்யவசனமேயொழிய அஸத்யவசனமாகாது. “ஏனாகாது? இவன் அஸத்யமாகத்தானே க்ரஹித்துவிட்டான்; அது பிசகல்லவோ?” என்று சிலர் வாதிக்கக்கூடும். இந்த வாதம் பொருந்தாது. ஒன்றை வேறொன்றாக க்ரஹிக்கையாகிற ப்ரமம் என்பது தெய்வச் செயலாக நேருமதேயொழிய வேறல்ல. அது, மருள் அல்லது மயக்கு என்கிற குற்றத்தின்பாற்படுமேயல்லது பொய் என்கிற குற்றத்தின்பாற்படாது.

52. பகவத்கீதையில் பத்தாவது அத்யாயத்தில் நான்காவது ச்லோகத்தில் “க்ஷமா ஸத்யம் தமச் சம:” என்றவிடத்து ஸத்யமின்னதென்பதை நிரூபிக்கும் ஸ்ரீராமாநுஜபாஷ்யமும் அதற்கு வேதாந்த தேசிகருடைய டீகையும் இங்கு நோக்கத்தக்கன. ‘உள்ளதை உள்ளபடியே கண்டு சொல்வது ஸத்யம்’ என்னாமல், ‘தான் கண்டபடியே சொல்வது ஸத்யம்’ என்றார் பாஷ்யகாரர். இதன் கருத்தை விவரித்தார் தேசிகர். ‘தான் கண்டபடியே சொல்வது ஸத்யம்’ என்றதிலும் சிக்ஷிக்கவேண்டியதுண்டு; கண்டது கண்டபடியே சொல்லுவதும் ஸத்யமாகாது; ஏனெனில்; வியாஸஸ்மிருதியில் “ஸத்யம் பூதஹிதம் ப்ரோக்தம்” என்று சொல்லப்பட்டுள்ளது. கண்டது கண்டபடியே சொல்லுவதானது பிராணிகளுக்கு ஹிதமாயிருந்தால் நன்றே; அப்படியல்லாமல் அஹிதமாயிருக்குமானால் அது ஸத்யமாகாது, அஸத்யமேயாகும். “ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யம் அப்ரியம்” என்கிற வசனமும் இங்கு அறியத்தக்கதாகும். பிறர்க்கு வெறுப்பையுண்டாக்கமாட்டாத வார்த்தை எதுவோ அதுவே ஸத்யமென்றும், பிறர்க்கு வெறுப்பை விளைவிக்கும் வார்த்தை உண்மையில் ஸத்யமாயிருந்தாலும் அஸத்யமாகவே கருதப்படுமென்றும் நூற்கொள்கையுள்ளது. ஒருவன் சொல்லுகிற ஸத்யவசனத்தினால் பிறர்க்கு அனர்த்தம் விளையுமாயின் அது ஸத்யவசனமாகாது; அஸத்யவசனமாகவே கொள்ளத்தகும் என்பர் பெரியோர். இவ்விஷயத்தில் பல சங்கைகள் தோன்றும்; நியாயாலயத்தில் நடக்கும் விவகாரங்களில் உண்மை தெரிவதற்காகச் சில யோக்யர்களான மஹான்களைச் சாக்ஷியிடுவதுண்டே; அவர்கள் உண்மையை யொளிக்காமல் சொல்லித்தானே யாகவேண்டும்; உள்ளதை உள்ளபடி யுரைத்தால் ஒரு தலையில் அனர்த்தம் விளைந்துதானே தீரும்; அப்படி அனர்த்தத்தை விளைவிப்பதான ஸத்யத்தைச் சொல்லலாகாதென்பது நூற்கொள்கையானால் பிராமாணிகர்களாயுள்ளவர்கள் ஸத்யத்தை மறைத்துத்தீரவேண்டுமே. அது யுக்தமாகுமோ? பிராமாணிகர்களின் செயல் அப்படிக் காணப்படவில்லையே. கொலை, களவு, வஞ்சகம் முதலிய விஷயங்களில் ஸாக்ஷிகளாகக் கோரப்பட்டவர்கள் உண்மையை வெளியிட்டுப் புகழ்பெறுகின்றார்களே; அவர்கள் உண்மையை யொளித்தால் அஸத்யவாதிகளென்று இகழவும்

படுகிறார்களே ; அவர்களின் உண்மையுரையினால் ஒரு தலையில் தீங்கு விளைந்தாலும் அதைப் பாபமாக ஒருவரும் நினைக்கக்காணுமே ; ஆகவே, பிறர்க்குத் தீங்கு விளைப்பதான ஸத்யவசனம் அஸத்யவசனமே யாகுமென்று எப்படிச் சொல்லக்கூடும் ? என்றிப்படிப்பட்ட வாதங்கள் தோன்றக்கூடியவையுண்டு. இதற்குச் சமாதனம் கேண்மின் ;

53. “ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம்” என்கிற வசனம் நாம் கற்பித்ததன்று : உலகம் போற்றும் மஹர்ஷி வசனமிது. “ஸத்யமாயிருந்தாலும் பிறர்க்குத் தீங்கு விளைக்குமதாயிருந்தால் அது சொல்லலாகாது” என்று சாஸ்த்ரப்ரவர்த்தகர்களான முனிவர்களே யன்றோ நியமித்துள்ளார்கள். அதை அப்ரமாணமென்று சொல்லித் தள்ளுவதற்கில்லை. லோகாநுபவத்தையும் சாஸ்த்ரத்தையும் ஸமரஸப்படுத்துவதென்பது எளிதான காரியமன்று. எல்லா சாஸ்திரங்களுக்கும் எல்லாருமே அதிகாரிகளாக முடியாது. உத்தமாதிகாரிகள் மத்யமாதிகாரிகள் அதமாதிகாரிகள் என்னும் பாகுபாடு எங்குமுண்டு. ஸத்யம் சொல்லிப் பிறர்க்கு அனர்த்தம் விளைப்பவர்களை உத்தமாதிகாரிகளென்று கொள்ள சாஸ்திரம் இடம் தராது. இங்கு நாம் பலபல இதிஹாஸங்களை யெடுத்துக்காட்ட வேண்டியதாகிறது ; ஆனாலும் விரிவுக்கு அஞ்சி ஒரு இதிஹாஸம் மாத்திரமே எண்டெடுத்துக் காட்டலாகிறது ;—மஹாபாரதத்தில் அநுசாஸன பருவத்தில் எட்டாவது அத்யாயத்தில் வீதஹவ்ய னென்னும் க்ஷத்ரியனுடைய கதை ஒன்று சொல்லப்பட்டுள்ளது ; இவ்வரசன் தன்னுடைய நூறு புதல்வர்களோடு கூடிப் பகைவருடன் போர்புரிகையில், அப்புதல்வர் நூற்றுவரும் மாண்டொழிய, அரசன் (வீதஹவ்யன்) அஞ்சி நடுங்கித் தன்னகரைத் துறந்தோடி ப்ருகுமஹர்ஷியின் ஆச்ரமத்திற் புகுந்து அம்முனிவரை அடைக்கலம் புகுந்து நிற்க, அம்முனிவர் இவ்வரசனுடைய நிலைமையைக் கண்டிரங்கி அபயமளித்து ஆஸனத்திலே அமர்த்தியிருந்தார் ; அவனைப் பின்தொடர்ந்தோடிவருகின்ற பகைவன் அவ்வாச்ரமத்திற்கு வந்து அம்முனிவரின் சிஷ்யர்களை நோக்கி ‘இங்கு யார் யார் இருக்கிறார்கள் ? நான் தெரிந்துகொள்ளவேணும்; ப்ருகு முனிவரையும் நான் காணவேணும் ; இங்கு நான் வந்திருப்பதாக அவர்க்குச் சொல்லுங்கள்’ என்று சொல்ல, உடனே முனிவர் உள்ளிருந்து வெளியேவந்து அவனை உபசரித்து ‘இங்கு உனக்கு ஆகவேண்டியதென்ன ?’ என்று கேட்க, ‘முனிவரே! வீதஹவ்யன் இங்கு வந்து பதுங்கிக்கிடக்கிறான் ; அவனை வெளியேவிடும் ; அவனைக் கொன்றுமுடிக்கவேணும்’ என்று அப்பகையரசன் கூற, அதற்கு ப்ருகுமுனிவர் விடை கூறுகின்றார் ;—[நேஹாஸ்தி க்ஷத்ரிய: கச்சித் ஸர்வே ஹீமே த்விஜாதய:] ‘இவ்விடத்தில் க்ஷத்திரியன் ஒருவனுமில்லை ; இங்குள்ளார் யாவரும் அந்தணர்களே’ என்றார். அதனால் அந்த வீதஹவ்யனுக்கு நேர்ந்த ஆபத்து எளிதாக நீங்கிவிட்டது. க்ஷத்ரியனான வீதஹவ்யன் தம்முடைய ஆச்ரமத்திலிருக்கச்செய்தேயும் ‘இங்கு ஒரு க்ஷத்ரியனுமில்லை’ என்று முனிவர் சொன்னதானது அஸத்யமென்று நினைக்கக் கூடியதேயொழிய ஸத்யமென்று நினைக்கக்கூடியதன்று. சரணாகதரக்ஷணம் பரமதர்மமென்றும், அஞ்சி நடுங்கி [illegible]ம் புகுந்தவனைக் காட்டிக் கொடுப்பது மஹாபாதகமென்றும் கருதியே முனிவர் அவ்விதமாக விடை கூறினர். ‘வீதஹவ்யன் இங்கில்லை’ என்று பச்சைப்பசும் பொய்யாகச் சொல்லாமல் “இங்குள்ள யாவரும் அந்தணர்களே ; அரசன் ஒருவனுமில்லை” என்று சொன்னது முனிவருடைய சாதுரியம். பிறருடைய அனர்த்த பரிஹாரத்திற்காகவும் பச்சைப்பசும் பொய் சொல்லலாகாது என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது. சரணாகத ஸம்ரக்ஷணமாகிற மிகச் சிறந்த தருமம் ஸித்திக்கவேண்டில் பச்சைப்பசும் பொய்யும் பேசலாம் என்று கூறுகின்ற பெரியோர்களுமுளர். இவ்விஷயத்தை இப்போது இவ்வளவோடு நிறுத்திக்கொள்வோம், உண்மை

படுகிறார்களே; அவர்களின் உண்மையுரையினால் ஒரு கலையில் தீங்கு விளைந்தாலும் அதைப் பாபமாக ஒருவரும் நினைக்கக்காணோமே; ஆகவே, பிறர்க்குத் தீங்கு விளைப்பதான ஸத்யவசனம் அஸத்யவசனமே யாகுமென்று எப்படிச் சொல்லக் கூடும்? என்றிப்படிப்பட்ட வாதங்கள் தோன்றக்கூடியவையுண்டு. இதற்குச் சமாதானம் கேண்மின்;

53. "ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம்" என்கிற வசனம் நாம் கற்பித்ததன்று; உலகம் போற்றும் மஹர்ஷி வசனமிது. "ஸத்யமாயிருந்தாலும் பிறர்க்குத் தீங்கு விளைக்குமதாயிருந்தால் அது சொல்லலாகாது" என்று சாஸ்த்ரப்ரவர்த்தகர்களான முனிவர்களே யன்றோ நியமித்துள்ளார்கள். அதை அப்ரமாணமென்று சொல்லித் தள்ளுவதற்கில்லை. லோகாநுபவத்தையும் சாஸ்த்ரத்தையும் ஸமரஸப்படுத்துவதென்பது எளிதான காரியமன்று. எல்லா சாஸ்திரங்களுக்கும் எல்லாருமே அதிகாரிகளாக முடியாது. உத்தமாதிகாரிகள் மத்யமாதிகாரிகள் அதமாதிகாரிகள் என்னும் பாகுபாடு எங்குமுண்டு. ஸத்யம் சொல்லிப் பிறர்க்கு அனர்த்தம் விளைப்பவர்களை உத்தமாதிகாரிகளென்று கொள்ள சாஸ்திரம் இடம் தராது. இங்கு நாம் பலபல இதிஹாஸங்களை யெடுத்துக்காட்ட வேண்டியதாகிறது; ஆனாலும் விரிவுக்கு அஞ்சி ஒரு இதிஹாஸம் மாத்திரமே ஈண்டெடுத்துக் காட்டலாகிறது;—மஹாபாரதத்தில் அநுசாஸன பருவத்தில் எட்டாவது அத்யாயத்தில் வீதஹவ்ய னென்னும் க்ஷத்ரியனுடைய கதை ஒன்று சொல்லப்பட்டுள்ளது; இவ்வரசன் தன்னுடைய நூறு புதல்வர்களோடு கூடிப் பகைவருடன் போர்புரிகையில், அப்புதல்வர் நூற்றுவரும் மாண்டொழிய, அரசன் (வீதஹவ்யன்) அஞ்சி நடுங்கித் தன்னகரைத் துறந்தோடி ப்ருகுமஹர்ஷியின் ஆச்ரமத்திற் புகுந்து அம்முனிவரை அடைக்கலம் புகுந்து நிற்க, அம்முனிவர் இவ்வரசனுடைய தீனதசையைக் கண்டிரங்கி அபயமளித்து ஆஸனத்திலே அமர்த்தியிருந்தார்; அவனைப் பின்தொடர்ந்தோடிவருகின்ற பகைவன் அவ்வாச்ரமத்திற்கு வந்து அம்முனிவரின் சிஷ்யர்களை நோக்கி 'இங்கு யார் யார் இருக்கிறார்கள்? நான் தெரிந்துகொள்ளவேணும்; ப்ருகு முனிவரையும் நான் காணவேணும்; இங்கு நான் வந்திருப்பதாக அவர்க்குச் சொல்லுங்கள்' என்று சொல்ல, உடனே முனிவர் உள்ளிருந்து வெளியேவந்து அவனை உபசரித்து 'இங்கு உனக்கு ஆகவேண்டியதென்ன?' என்று கேட்க, 'முனிவரே! வீதஹவ்யன் இங்கு வந்து பதுங்கிக்கிடக்கிறான்; அவனை வெளியேவிடும்; அவனைக் கொன்று முடிக்கவேணும்' என்று அப்பகையரசன் கூற, அதற்கு ப்ருகுமுனிவர் விடை கூறுகின்றார்;—[நேஹாஸ்தி க்ஷத்ரிய: கச்சித் ஸர்வே ஹீமே த்விஜாதய:] 'இவ்விடத்தில் க்ஷத்திரியன் ஒருவனுமில்லை; இங்குள்ளார் யாவரும் அந்தணர்களே' என்றார். அதனால் அந்த வீதஹவ்யனுக்கு நேர்ந்த ஆபத்து எளிதாக நீங்கிவிட்டது. க்ஷத்ரியனான வீதஹவ்யன் தம்முடைய ஆச்ரமத்திலிருக்கச்செய்தேயும் 'இங்கு ஒரு க்ஷத்ரியனுமில்லை' என்று முனிவர் சொன்னதானது அஸத்யமென்று நினைக்கக் கூடியதேயொழிய ஸத்யமென்று நினைக்கக்கூடியதன்று. சரணாகதரக்ஷணம் பரமதர்ம மென்றும், அஞ்சி நடுங்கி சரணம் புகுந்தவனைக் காட்டிக் கொடுப்பது மஹாபாதகமென்றும் கருதியே முனிவர் அவ்விதமாக விடை கூறினார். 'வீதஹவ்யன் இங்கில்லை' என்று பச்சைப்பசும் பொய்யாகச் சொல்லாமல் "இங்குள்ள யாவரும் அந்தணர்களே; அரசன் ஒருவனுமில்லை" என்று சொன்னது முனிவருடைய சாதுரியம். பிறருடைய அனர்த்த பரிஹாரத்திற்காகவும் பச்சைப்பசும் பொய் சொல்லலாகாது என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது. சரணாகத ஸம்ரக்ஷணமாகிற மிகச் சிறந்த தருமம் ஸித்திக்கவேண்டில் பச்சைப்பசும் பொய்யும் பேசலாம் என்று கூறுகின்ற பெரியோர்களுமுளர். இவ்விஷயத்தை இப்போது இவ்வளவோடு நிறுத்திக்கொள்வோம். உண்மை

[illegible] போன்றவர்கள் எளிதாக நிஷ்கர்ஷித்தறியவல்லோ [illegible] ஹாயாம் என்று மஹாபாரதத்திலும், "ஸ [illegible] பலவங்கம்!" என்று ஸ்ரீ ராமாயணத்திலும் [illegible] அல்பசருதர்களுக்கு அறிவரிதாதலால், இன்னது ஸத்யம், இன்னது அஸத்யம் என்று இலேசாகக் கண்டறிய முடியாதென்பதை [illegible] இங்கு இவ்வளவு விரித்துரைக்கப்பட்டது.

54. இனி ஸ்ரீ ராமபிரானுடைய ஸத்யவாதித்வத்தைப் பற்றிப் பேசுவோம். ராமனுடைய ஸத்யவாதித்வம் ராமனுடைய திருவாக்கிலிருந்தே வெளிவருகின்ற படியை முந்துற நிரூபிப்போம். "ராமோ த்விர் நாபிபாஷதே" என்று ப்ரஸித்தமாக வழங்கும் ச்லோகம் ஸ்ரீ ராமனுடைய திருவாக்கிலிருந்தே அவதரித்ததாகும். வனவாஸப் புறப்பாட்டுக்கு முன்பு ராமன் கைகேயியிடத்தில் சொல்லுகிற வார்த்தையிது, "தத் ப்ரூஹி வசநம் தேவி! ராஜ்ஞோ யதபிகாங்க்ஷிதம், கரிஷ்யே ப்ரதிஜாநேச ராமோ த்விர் நாபிபாஷதே" என்பது பூர்ணச்லோகம். "ஆணையிட்டுச் சொல்லுகிறேன். ராமன் வாக்கில் இரண்டு பேச்சு வராது; ஒன்றே யுரைப்பானொரு சொல்லே சொல்லுவானென்கிற புகழ் ராமனுக்கே உரியது" என்று இராமனே சொன்னானாயிற்று. மற்றோரிடத்திலும் இராமன் தன்னைப் பற்றி இங்ஙனே சொல்லிக் கொள்வதைக் காண்கின்றோம்; [கிஷ்கி. 7-22.] ஸுக்ரீவனை நோக்கிக் கூறுகின்ற வார்த்தை—"அந்ருதம் நோக்தபூர்வம் மே நச வக்ஷ்யே கதாசந, ஏதத் தே ப்ரதிஜாநாமி ஸத்யேநைவ ச தே சபே" என்பது. 'இதுவரையில் நான் பொய் சொன்னதில்லை; இனிமேலும் ஒருகாலும் சொல்லப் போகிறதில்லை; ஸத்யத்தின் மேலாணையிட்டு உறுதியாகச் சொல்லுகிறேனிதை' என்பது இதன் பொருள். இதே வார்த்தையை அந்த ஸுக்ரீவனிடத்திலேயே மறுபடியும் ஒருமுறை சொன்னதுமுண்டு; [கிஷ்கி. 14-14 காண்க.] இப்படி தன்னுடைய ஸத்யவாதித்வத்தைத் தானே சொல்லிக்கொள்வது தற்புகழ்ச்சியென்னுங் குற்றத்தின் பாற்படாதோ? "பொய்யனேன் வந்து நின்றேன் பொய்யனேன் பொய்யனேனே" என்று ஆழ்வார்கள் அநுஸந்தித்துக் காட்டுகிற வழியன்றோ சிறந்தது; அவ்வழியை விட்டுத் தன்னைத்தானே மெய்யனாகப் புகழ்ந்து பேசிக் கொள்வது குணக்கடலான இராமனுக்குத் தகுதியோ? என்று சிலர் நினைக்கலாம். "தன்னுடையாற்ற லுணராரிடையினும் தன்னைப் புகழ்தலும் தகும்" என்றார் நன்னூலாசிரியர். வடநூற்களிலும் இங்ஙனே அநுமதியளித்ததுண்டு. தனக்குள்ள பெருமையைச் சொல்லித் தீரவேண்டிய ஸமயத்தில் சொல்லித்தானேயாகவேண்டும். ராமனுடைய ஸத்யவாதித்வம் பிறருடைய வாக்கினாலும் வெளிவந்தபடியையும், அந்த ஸத்யவாக்கின் பெருமையினாலாய பயனையும் எடுத்துரைக்க விரும்புகிறோம். அதற்குமுன், தசரதசக்ரவர்த்தியினது ஸத்யவாதித்வத்தைப் பற்றிச் சிறிது ஆராய்ச்சி செய்ய அவச்யமாகிறது. தசரதாத்மஜனான ஸ்ரீராமபிரான் ஸத்யவாதி யென்பது சொல்லவேணுமோ? தந்தையான தசரத சக்ரவர்த்தி ஸத்யவாதிகளில் தலைவனாக ப்ரஸித்தனாகையால் அவன் வயிற்றிற் பிறந்த இராமன் ஸத்யவாதியென்பதில் வியப்புண்டோ? என்று பலர் சொல்வதுண்டு. இதைப்பற்றி இங்குச்சில சொல்ல நினைக்கிறோம்.

55. தசரதசக்ரவர்த்திக்கு ஸத்யவாதியென்கிற விருது விளைந்தது "புண்யைர் யசோ லப்யதே" என்று ஒரு மஹாகவி சொன்ன கணக்கிலே ஏதோ அவனுடைய பாக்யவிசேஷத்தினாலத்தனை என்றே சொல்ல வேண்டும். தசரதனுடைய சரித்திரம் விபுலமாக நமக்கு ஒன்றும் கிடைக்கவில்லை; கிடைக்கின்ற சரித்திரத்தில் சாஸ்திரப்படி அவனை ஸத்யவாதி யென்று கொள்வதற்கு அவகா[illegible]முண்டா வென்று பார்க்கவேணும்: கைகேயிக்கு அவன் என்றைக்கோ வாக்களித்திருந்த

யுரையின் உண்மையை நம்போன்றவர்கள் எளிதாக நிஷ்கர்ஷித்தறியகில்லோம்.
*தர்மஸ்ய தத்வம் நிஹிதம் குஹாயாம்" என்று மஹாபாரதத்திலும், "ஸூக்ஷ்ம:
பரமதுர்ஜ்ஞேயஸ் ஸதாம் தர்ம: ப்லவங்கம!" என்று ஸ்ரீ ராமாயணத்திலும் கூறி
யுள்ளபடி தரும நுட்பங்கள் அல்பச்ருதர்களுக்கு அறிவரிதாதலால், இன்னது
ஸத்யம், இன்னது அஸத்யம் என்று இலேசாகக் கண்டறிய முடியாதென்பதை
யுணர்த்துதற்கே இங்கு இவ்வளவு விரித்துரைக்கப்பட்டது.

54. இனி ஸ்ரீ ராமபிரானுடைய ஸத்யவாதித்வத்தைப் பற்றிப் பேசுவோம்.
ராமனுடைய ஸத்யவாதித்வம் ராமனுடைய திருவாக்கிலிருந்தே வெளிவருகின்ற
படியை முந்துற நிரூபிப்போம். "ராமோ த்விர் நாபிபாஷதே" என்று ப்ரஸித்த
மாக வழங்கும் ச்லோகம் ஸ்ரீராமனுடைய திருவாக்கிலிருந்தே அவதரித்ததாகும்.
வனவாஸப் புறப்பாட்டுக்கு முன்பு ராமன் கைகேயியிடத்தில் சொல்லுகிற வார்த்
தையிது. "தத் ப்ரூஹி வசநம் தேவி! ராஜ்ஞோ யதபிகாங்க்ஷிதம், கரிஷ்யே
ப்ரதிஜாநே ச ராமோ த்விர் நாபிபாஷதே" என்பது பூர்ணச்லோகம். "ஆணை
யிட்டுச் சொல்லுகிறேன். ராமன் வாக்கில் இரண்டு பேச்சு வராது; ஒன்றே
யுரைப்பானொரு சொல்லே சொல்லுவானென்கிற புகழ் ராமனுக்கே உரியது"
என்று இராமனே சொன்னனாயிற்று. மற்றோரிடத்திலும் இராமன் தன்னைப்
பற்றி இங்ஙனே சொல்லிக் கொள்வதைக் காண்கின்றோம்; [கிஷ்கி. 7-22.]
ஸுக்ரீவனை நோக்கிக் கூறுகின்ற வார்த்தை—"அந்ருதம் நோக்தபூர்வம் மே நச
வக்ஷ்யே கதாசந, ஏதத் தே ப்ரதிஜாநாமி ஸத்யேநைவச தே சபே" என்பது.
'இதுவரையில் நான் பொய் சொன்னதில்லை; இனிமேலும் ஒருகாலும் சொல்லப்
போகிறதில்லை; ஸத்யத்தின் மேலாணையிட்டு உறுதியாகச் சொல்லுகிறேனிதை'
என்பது இதன் பொருள். இதே வார்த்தையை அந்த ஸுக்ரீவனிடத்திலேயே
மறுபடியும் ஒருமுறை சொன்னதுமுண்டு; [கிஷ்கி. 14-14 காண்க.] இப்படி
தன்னுடைய ஸத்யவாதித்வத்தைத் தானே சொல்லிக்கொள்வது தற்புகழ்ச்சியென்
னுங் குற்றத்தின் பாற்படாதோ? "பொய்யனேன் வந்து நின்றேன் பொய்யனேன்
பொய்யனேனே" என்று ஆழ்வார்கள் அநுஸந்தித்துக் காட்டுகிற வழியன்றோ
சிறந்தது; அவ்வழியை விட்டுத் தன்னைத்தானே மெய்யனாகப் புகழ்ந்து பேசிக்
கொள்வது குணக்கடலான இராமனுக்குத் தகுதியோ? என்று சிலர் நினைக்கலாம்.
"தன்னுடையாற்ற லுணராரிடையினும் தன்னைப் புகழ்தலும் தகும்" என்றார் நன்
னூலாசிரியர். வடநூற்களிலும் இங்ஙனே அனுமதியளித்ததுண்டு. தனக்குள்ள
பெருமையைச் சொல்லித் தீரவேண்டிய ஸமயத்தில் சொல்லித்தானேயாகவேண்டும்.
ராமனுடைய ஸத்யவாதித்வம் பிறருடைய வாக்கினாலும் வெளிவந்தபடியையும்,
அந்த ஸத்யவாக்கின் பெருமையினாலாய பயனையும் எடுத்துரைக்க விரும்புகிறோம்.
அதற்குமுன், தசரதசக்ரவர்த்தியினது ஸத்யவாதித்வத்தைப் பற்றிச் சிறிது
ஆராய்ச்சி செய்ய அவச்யமாகிறது. தசரதாத்மஜனான ஸ்ரீராமபிரான் ஸத்யவாதி
யென்பது சொல்லவேணுமோ? தந்தையான தசரத சக்ரவர்த்தி ஸத்யவாதிகளில்
தலைவனாக ப்ரஸித்தனானமையால் அவன் வயிற்றிற் பிறந்த இராமன் ஸத்யவாதியென்
பதில் வியப்புண்டோ? என்று பலர் சொல்வதுண்டு. இதைப்பற்றி இங்குச்சில
சொல்ல நினைக்கிறோம்.

55. தசரதசக்ரவர்த்திக்கு ஸத்யவாதியென்கிற விருது விளைந்தது "புண்
யைர் யசோ லப்யதே" என்று ஒரு மஹாகவி சொன்ன கணக்கிலே ஏதோ அவ
னுடைய பாக்யவிசேஷத்தினாலேதானே என்றே சொல்ல வேண்டும். தசரதனுடைய
சரித்திரம் விபுலமாக நமக்கு ஒன்றும் கிடைக்கவில்லை; கிடைக்கின்ற சரித்திரத்தில்
சாஸ்திரப்படி அவனை ஸத்யவாதி யென்று கொள்வதற்கு அவகா[illegible]முண்டா
வென்று பார்க்கவேணும்: கைகேயிக்கு அவன் என்றைக்கோ வாக்களித்திருந்த

இரண்டு வரங்களை ஸ்ரீராமமகுடாபிஷேக ஸமயத்தில் மறுக்க முடியாமல் ஸ்ரீராமனுடைய வனவாஸத்திற்கு இசைந்திருந்தானென்கிற இவ்வளவே கொண்டு அவ்வரசனுக்கு ஸத்யவாதியென்கிற புகழ் விளங்குள்ளது. இதன் ஔசித்யத்தைச் சிறிது விமர்சிப்போம். கைகேயிக்கு அவன் வரங்கொடுத்திருந்தது எந்த யுகாந்தரத்திலோ தெரியாது. இன்ன விதமான வரம் என்று குறிப்பிடப்பட்டிருக்கவுமில்லை. அதுகிடக்க. இவ்வரசன் இராமனைத் தானாகவரவழைத்து 'நாளை உனக்கு மகுடாபிஷேகம்' என்று சொன்னது நாடு நகரமும் நன்கறிந்தது. அதுதானும் ஒருமுறை சொன்னதன்று, இருமுறை சொன்னது. இங்ஙனே சொன்னதைத் தவறினவன் ஸத்யவாதியாக எங்ஙனம் ஆகமுடியும்? கைகேயிக்கு வரங்கொடுத்திருந்ததற்குக் கண்ணழிவு சொல்லிவிட முடியும்; எப்படியென்னில்; சாஸ்த்ரங்களில் "பஞ்சாந்ருதாநி ஆஹுரபாதகாநி" என்று ஐந்து ஸமயங்களில் பொய் சொல்லலாமென்றும் அதனால் பாதகமில்லை என்றும் சொல்லப்பட்டுள்ளது. விவாஹகாலம் முதலிய ஐந்து ஸமயங்கள் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. அவற்றுள் "ப்ராணாத்யயே" என்பது மொன்று; உயிர்போகுந்தருணமாயிருந்தால் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகப் பொய்சொல்ல நேர்ந்தால் அது பாதகமன்று—என்று ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ளது. தசரதன் கைகேயிக்கு இரண்டு வரம்கொடுத்தது சம்பராஸுரயுத்த ஸமயத்தில் உயிர்க்கு அபாயம் விளைவதாயிருந்த காலத்தில்தான் என்பது இதிஹாஸத்தினால் தெரியவருகின்றது. அந்த வரப்ரதானத்தை அவசியம் நிறைவேற்றியே யாகவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. ஏன் நிர்ப்பந்தமில்லை? உயிர் போகுந் தருணத்தில் பொய்சொன்னால் பாதகமில்லை, என்கிற சாஸ்த்ரம் ஸாமாந்யசாஸ்த்ரமே ஒழிய விசேஷசாஸ்த்ரமன்றே. அதனைப் பின்பற்றியே யாகவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை? ஆகவே கைகேயிக்கு அளித்திருந்த வரத்தின்படி தசரதன் நிறைவேற்றாதிருந்தவனாயின் அது அவனுடைய ஸத்யவாதித்வப் பெருமைக்குப் பெருத்த குறையே யாகுமன்றோ? என்று சிலர் வாதிக்கவுங் கூடும். இங்குத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் கேண்மின்; இராமனுக்கு ராஜ்யம் கொடுப்பதாக ஒருமுறைக்கு இருமுறை கூறினது மறைக்க முடியாததாதலால், இந்த அரசன் கைகேயியிடம் எடுத்துக் கூறி 'கைகேயீ! உனக்கு நான் வெகுகாலத்திற்குமுன் பொதுவாக இரண்டுவரம்கொடுத்திருப்பது உண்மையே; இன்னது செய்யவேணுமென்று அப்போது நீ கேட்டிருக்கவில்லை; இப்போது நான் இராமனுக்கு ராஜ்யம் கொடுப்பதாகச் சொல்லி யானபடியால் அந்த வாக்குத் தவற மாட்டேன்; அதற்கு விரோதமில்லாதபடி நீகேட்கும் வரத்தையே நான் கொடுக்கமுடியும்; முடிந்துபோன விஷயத்தை நீ கேட்பது தகுதியன்று' என்று திண்ணமாகச் சொல்லியிருக்க வேண்டும். இப்படிச் சொல்லுவதனால் ஸத்தியவாதித்வத்திற்கு யாதொரு பங்கமும் விளையாது.

56. அன்றியும் மற்றொரு விஷயமும் இங்குக் குறிக்கொள்ளத்தக்க துண்டு; "ராமோ விக்ரஹவாந் தர்ம:" என்று வடிவெடுத்த ஸித்த தர்மமாகச் சொல்லப்பட்ட இராமனோடு கூடிவாழ்வதை விட்டு ஆபாஸதர்மமான ஸத்யவசனத்தைத் தசரதன் பற்றி நின்றது அவனுக்கு அவத்யமாகவும் சொல்லப்பட்டுள்ளது. முமுக்ஷுப்படியில் சரமச்லோகப்ரகரணத்தில் "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்றவிடத்தில் பிள்ளைலோகாசார்யர் அருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்தி—"சக்ரவர்த்தியைப்போலே இழக்கைக்கு உறுப்பு" என்பதாம்; இங்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு:—"முன்பே வரப்ரதானத்தைப் பண்ணி வைத்து இப்போதாக மறுக்கவொண்ணாதென்று ஆபாஸமான ஸத்யதர்மத்தைப் பற்றி நின்று 'ராமோ விக்ரஹவாந் தர்ம:' என்கிற பெருமாளோடே கூடிவாழவிருந்த பேற்றை இழந்த தசரத சக்ரவர்த்தியைப் போலே..," என்று. ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில் ததிபாண்டனென்னும் இடையனுடைய கதை ப்ரஸித்தமானது. 'தாயெடுத்த சிறுகோ

லுக்கு உளைந்தோடிவந்த கண்ணபிரானை மறைத்திட்டுவைத்து, அவனைப்பிடித்தடிப் பதற்காகத் தொடர்ந்துவந்த யசோதை 'என்மகன் இங்கு வந்ததுண்டோ?' என்று கேட்க, 'அவன் இங்குவரவில்லை, அவனை நானறியேன்' என்று அஸத்யமே சொன்ன ததிபாண்டன் தனது தயிர்த்தாழிக்குமுட்பட மோக்ஷம் பெற்றுப் போனான்; ஸத்யவாதி யென்று பேர்பெற்ற தசரதசக்ரவர்த்தி நரகபர்யாயமான ஸ்வர்க்கத்தையே பெற்று நின்றான். இதனால், தசரதனுடைய ஸத்யவாதித்வம் எம்பெருமானை யிழப்பதற்குறுப்பானபடியாலே அஸத்யத்தின் பலனையே தந்து நின்றதென்று தெரிந்து கொண்டோம்.

57. இராமபிரானுடைய ஸத்யவாதித்வப் பெருமையை இரண்டு வகையாக ஸாதிக்க விரும்புகின்றோமிங்கு. இன்னின்ன சரிதைகளினால் இராமனுடைய ஸத்ய வாதித்வம் விசதமாகத் தெரிகின்றதென்று நிரூபணஞ் செய்தல் முதல்வகை. இன்னின்ன கதைகளினால் இராமனுடைய ஸத்யவாதித்வத்திற்குக் குறை காண்கிறதே யென்று க்ஷேபித்துச் சொல்வாருடைய ஆக்ஷேப வார்த்தைகளை யெடுத்துக் காட்டி அவற்றுக்குப் பரிஹார முணர்த்தும் முகத்தால் அந்த ஸத்யவாதித்வத்தை நிலை நாட்டுவது இரண்டாம்வகை. முதல்வகையில் நிரூபணம்கேண்மின் இராமபிரானுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் நடைபெறப்போகின்றதென்பதையுணர்ந்த கைகேயி மந்தரையினால் மனம்கலக்கப் பெற்றுக் கோபாவேசங் கொண்டு, சக்ரவர்த்திபக்க லிலே இராமனுடைய வன வாஸத்தையும் பரதாபிஷேகத்தையும் பிரஸ்தாவித்த போது, சக்ரவர்த்தி மூர்ச்சித்துக் கிடந்து பிறகு மூர்ச்சை தெளிந்துஅக் கைகேயியைநோக்கிப் பல கூறுகின்றான்; [அயோத்யாகாண்டம்—பன்னிரண்டா வது ஸர்க்கம்] "அடிகொடியவளே! இந்த வம்சத்தைக் கெடுக்க வந்த பாவியே! இராமனாவது நானாவது உனக்குச் செய்த தீங்கு ஏதேனுமுண்டோ? இராமன் பெற்றதாய்க்குப்போலவே உனக்கும் பணிவிடை செய்துகொண்டிருக்கின்றானே! அன்னவன் மீது நீ கொடியமனம் கொண்டனையே! இந்த துர்ப்புத்தி உனக்கு எங்ஙனம் உண்டாயிற்று? உன் தன்மையறியாது உன்னை இவ்வீட்டினுள் கொணர்ந்து சேர்த்துக்கொண்ட எனது புத்தியையன்றோ நிந்திக்க வேண்டும். பறவைகள் விலங்குகள் முதற்கொண்டு ஸகல பிராணிவர்க்கங்களும் புகழும்படி நற்குண நற்செய்கைகள் வாய்ந்த இராமனை எங்ஙனம் நான் வனம் போகவிடுவேன்? இராமனைவிட்டு ஒரு நொடிப் பொழுதாயினும் என்னுடலில் உயிர் தங்கியிருக்குமோ? அடி பாவி! நீ கொண்ட கொள்கை என்னுயிரையே மாய்க்க வல்லதாகவன்றோ இருக்கிறது; இக்கொடிய கருத்தைக் கூசாது நீ என்னிடம் கூறினவளவே போதும்; இவ்வள வோடு இக்கருத்தை விட்டுத் தொலைப்பாயாக: உனக்கு நான் கணவனாக இருந்தா லும் உன் பாதங்களில் என் தலையை மடுத்துவணங்கி வேண்டிக் கொள்ளவும் கூச்ச மற்றிருக்கின்றேன், கலக்கந் தீர்ந்து என்மேல் அருள்புரிவாயாக—என்றினையவார்த் தைகளைச் சொல்லிவரும்போது இராமனுடைய நற்குணங்களை நாலைந்து சுலோ கங்களினால் கல்லும் உருகக் கூறுகின்றான் தயரதமன்னவன்; அவற்றுள் தலை யான [illegible]: "ஸத்யேந லோகாந் ஜயதி தீநாந் தாநேந ராகவ:, குரூந் [illegible] யுதி சாத்ரவாந்." (இதன் பொருளாவது,) இராமன் ஸத்ய [illegible]ஸ் ஸகல லோகங்களையும் தானிட்ட வழக்காக்க் கொண்டிருக் கிறான்; ஏழைகளைக் கொடையினால் கவர்கின்றான்; ஆசிரியர்களைப் பணிவிடை யினால் கவர்கின்றான்; போர்க்களத்தில் வில்லினால் பகைவர்களைக் கவர்கின்றான்; என்பது. இவற்றுள் 'ஸத்யேந லோகாந் ஜயதி' என்பது தலைமைபெற்ற விஷயம். இதற்கு அடுத்த சுலோகத்திலும் ஸத்யம் என்று தொடங்கி இராமனுடைய மெய்ம்மைப் பெருவார்த்தையின் மேன்மை புகழப்படுகின்றது. இங்ஙனே பலப் பலவிடங்களில் இராமபிரானது ஸத்யத்தைப் பற்றிப் புகழ்ந்து பேசியிருந்தாலும் மேலே குறித்த சுலோகத்தில் 'ஸத்யேந லோகாந் ஜயதி' என்றிருப்பது விலை

லுக்கு உளிகேதாடிவந்த கண்ணபிரானை மறைத்திட்டுவைத்து, அவனைப்பிடித்தடிப் பதற்காகத் தொடர்ந்துவந்த யசோதை 'என்மகன் இங்கு வந்ததுண்டோ?' என்று கேட்க 'அவன் இங்குவரவில்லை, அவனை நானறியேன்' என்று அஸத்யமே சொன்ன ததிபாண்டன் தனது தயிர்த்தாழிக்குமுட்பட மோக்ஷம் பெற்றுப் போனான்; ஸத்யவாதி யென்று பேர்பெற்ற தசரதசக்ரவர்த்தி நரகபர்யாயமான ஸ்வர்க்கத்தையே பெற்று நின்றான். இதனால், தசரதனுடைய ஸத்யவாதித்வம் எம்பெருமானை யிழப்பதற்குறுப்பானபடியாலே அஸத்யத்தின் பலனையே தந்து நின்றதென்று தெரிந்து கொண்டோம்.

57. இராமபிரானுடைய ஸத்யவாதித்வப் பெருமையை இரண்டு வகையாக மூதலிக்க விரும்புகின்றோமிங்கு. இன்னின்ன சரிதைகளினால் இராமனுடைய ஸத்ய வாதித்வம் விசதமாகத் தெரிகின்றதென்று நிரூபணஞ் செய்தல் முதல்வகை. இன் னின்ன கதைகளினால் இராமனுடைய ஸத்யவாதித்வத்திற்குக் குறை காண்கிறதே யென்று க்ஷேபித்துச் சொல்வாருடைய ஆக்ஷேப வார்த்தைகளை யெடுத்துக் காட்டி அவற்றுக்குப் பரிஹாரமுணர்த்தும் முகத்தால் அந்த ஸத்யவாதித்வத்தை நிலை நாட்டுவது இரண்டாம்வகை. முதல்வகையில் நிரூபணம்கேண்மின் இராமபிரானுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் நடைபெறப்போகின்றதென்பதையுணர்ந்த கைகேயி மந்தரையினால் மனம்கலக்கப் பெற்றுக் கோபாவேசங் கொண்டு, சக்ரவர்த்திபக்க லிலே இராமனுடைய வன வாஸத்தையும் பரதாபிஷேகத்தையும் ப்ரஸ்தாவித்த போது, சக்ரவர்த்தி மூர்ச்சித்துக் கிடந்து பிறகு மூர்ச்சை தெளிந்துஅக் கைகேயியைநோக்கிப் பல கூறுகின்றான்; [அயோத்யாகாண்டம்—பன்னிரண்டா வது ஸர்க்கம்.] "அடீகொடியவளே! இந்த வம்சத்தைக் கெடுக்க வந்த பாவியே! இராமனாவது நானாவது உனக்குச் செய்த தீங்கு ஏதேனுமுண்டோ? இராமன் பெற்றதாய்க்குப்போலவே உனக்கும் பணிவிடை செய்துகொண்டிருக்கின்றானே! அன்னவன் மீது நீ கடியமனம் கொண்டனையே! இந்த துர்ப்புத்தி உனக்கு எங்ஙனம் உண்டாயிற்று? உன் தன்மையறியாது உன்னை இவ்வீட்டினுள் கொணர்ந்து சேர்த் துக்கொண்ட எனது புத்தியையன்றோ நிந்திக்க வேண்டும். பறவைகள் விலங்குகள் முதற்கொண்டு ஸகல ப்ராணிவர்க்கங்களும் புகழும்படி நற்குண நற்செய்கைகள் வாய்ந்த இராமனை எங்ஙனம் நான் வனம் போகவிடுவேன்? இராமனைவிட்டு ஒரு நொடிப் பொழுதாயினும் என்னுடலில் உயிர் தங்கியிருக்குமோ? அடி பாவீ! நீ கொண்ட கொள்கை என்னுயிரையே மாய்க்க வல்லதாகவன்றோ இருக்கிறது; இக்கொடிய கருத்தைக் கூசாது நீ என்னிடம் கூறினவளவே போதும்; இவ்வள வோடு இக்கருத்தை விட்டுத் தொலைப்பாயாக: உனக்கு நான் கணவனாக இருந்தா லும் உன் பாதங்களில் என் தலையை மடுத்துவணங்கி வேண்டிக் கொள்ளவும் கூச்ச மற்றிருக்கின்றேன். கலக்கந்தீர்ந்து என்மேல் அருள்புரிவாயாக—என்றினியவார்த் தைகளைச் சொல்லிவரும்போது இராமனுடைய நற்குணங்களை நாலைந்து சுலோ கங்களினால் கல்லும் உருகக் கூறுகின்றான் தயரதமன்னவன்; அவற்றுள் தலை யான சுலோகம் இது; "ஸத்யேந லோகாந் ஜயதி தீநாந் தாநேந ராகவ:, குரூந் சுச்ருஷயா வீரோ தநுஷா யுதி சாத்ரவாந்." (இதன் பொருளாவது,) இராமன் ஸத்ய வாக்கின் பெருமையினால் ஸகல லோகங்களையும் தானிட்ட வழக்காகக் கொண்டிருக் கிறான்; ஏழைகளைக் கொடையினால் கவர்கின்றான்; ஆசிரியர்களைப் பணிவிடை யினால் கவர்கின்றான்; போர்க்களத்தில் வில்லினால் பகைவர்களைக் கவர்கின்றான்: என்பது. இவற்றுள் 'ஸத்யேந லோகாந் ஜயதி' என்பது தலைமைபெற்ற விஷயம். இதற்கு அடுத்த சுலோகத்திலும் ஸத்யம் என்று தொடங்கி இராமனுடைய மெய்ம்மைப் பெருவார்த்தையின் மேன்மை புகழப்படுகின்றது. இங்ஙனே பலர் பலவிடங்களில் இராமபிரானது ஸத்யத்தைப் பற்றிப் புகழ்ந்து பேசியிருந்தாலும் மேலே குறித்த சுலோகத்தில் 'ஸத்யேந லோகாந் ஜயதி' என்றிருப்பது விலை

யுயர்ந்த ரத்தனமாகக் குலாவப்படுகின்றது. பகவத்விஷயப் பேராசிரியரான நம்பிள்ளையினுடைய வைபவத்தில் 'ஸத்யேந லோகாந் ஜயதி' என்கிற இந்த ச்லோகத்தின் சார்பான சொற்பெருமை நன்கு சிறந்து விளங்குகின்றது. அதனைச் சிறிது விவரிப்போமிங்கு.



58. பட்டருடைய ஸந்ததியில் தோன்றி மஹாவித்வானாயிருந்த நடுவில்திரு வீதிப்பிள்ளைபட்ட ரென்பவர் நம்பிள்ளை காலத்தில் திருவரங்கப் பெருநகரில் வாழ்ந்தவர். இவரும் ஓரிடத்திலே ஸ்வரூபக்ரந்தங்களைப் ப்ரவசனம் செய்து வந்தார். ஆனாலும் பெரும்பாலோர் நம்பிள்ளை கோஷ்டியிலேயே அந்வயித்ததனால் இவருடைய கோஷ்டியில் மிகச்சிலரே சேர்ந்திருந்தனர். அதனால் இவர்க்கு நம்பிள்ளையிடத்தில் பொறாமை யுண்டாகியிருந்தது. இவர் ஒருநாள் ராஜசபைக்குச் சென்றிருந்தார். அவ்வரசன் மஹாவிவேகியுமாய், தன்னிடம்வருகிற பண்டிதர்களை யெல்லாம் ஸ்ரீராமாயணம் முதலிய நூல்களில் கேள்வி கேட்பவனுமாயிருந்த படியால் இந்தப் பட்டரையும் ஸ்ரீராமாயணத்தில் ஒருகேள்விகேட்டான். அதாவது "ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே இராமபிரானாக வந்து திருவவதாரம் செய்திருந்தும் ஸ்ரீராமன் நாராயணத்வப்ரயுக்தமான பெருமையை அறவே மறைத்துக்கொண்டு மனுஷ்ய பாவனையையே பூர்த்தியாக ஏறிட்டுக்கொண்டு அஜ்ஞரைப் போலவும் அசக்தரைப் போலவுமிருந்தான் என்று தெரியவருகின்றது; ஸ்வாமிகளே! இப்படி நான் கிரஹித்திருப்பது யுக்தமானதுதானே, பிசகல்லவே" என்று கைகூப்பிக்கொண்டு சொன்னான். அது கேட்ட பட்டர் "ஆமாம், நீங்கள் கிரஹித்திருப்பது யுக்தமே; நாராயணத்வப்ரயுக்தமான பரத்வத்தைக் கழற்றிவைத்துவிட்டு மநுஷ்ய பாவனையில்தான் நடனம் செய்திருக்கிறார் ஸ்ரீராமமூர்த்தி; இதில் என்ன ஸந்தேஹம்? இப்படிக்கு இசைந்தால்தான் ஸ்ரீராமாயண கதைகள் பொருந்தும்" என்று விடை கூறினர். இதைக்கேட்ட அரசன் "ஸ்வாமிகளே! அப்படியானால் இராமன் "மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாந் அநுத்தமாந்" என்று சொல்லி ஜடாயுவுக்கு முத்தியளித்ததாகக் கதை காண்கிறதே, இது பொருந்துமாறு என்? அப்போது இராமன் தன்னுடைய மனைவியான பிராட்டி சென்றவிடம் அறியாமல் அதைப் பற்றி அஃறிணைப் பொருள்களையும் கேட்டுத் தளர்கின்ற நிலையாயிரா நின்றது; அந்நிலையில் ஜடாயுவைநோக்கி 'நான் உனக்குக்கட்டளையிடுகிறேன்; மோக்ஷம்போவாயாக' என்று சொன்னார் பெருமாள் என்றால் இது பொருத்தமாக இல்லையே? ஸ்வாமிகள் இதனைப் பொருந்தவிட்டு என் மனம் த்ருப்தியடையும்படி ஸமாதானம் சொல்லமுடியுமோ?" என்றான். கேள்வியோ வலிதாயிருந்தது. பட்டருக்கு ஸமாதானம் ஸ்புரிக்கவில்லை. கூரத்தாழ்வான் அருளிச்செய்த அதிமாநுஷஸ்தவத்தில் "ப்ருச்சாமி கிஞ்சந யதா கில ராகவத்வே" "அக்ஷ்ணோ யோகபதம்" என்று தொடங்கியுள்ள இரண்டு ச்லோகங்களிலும் இதே கேள்வியுள்ளது என்பதை நினைத்துக்கொண்டாரேயல்லது, கேள்விக்கு த்ருப்திகரமான ஸமாதானம் சொல்ல விரகறிந்திலர். இவருடைய அத்ருஷ்டவசத்தால் அப்போது அவ்வரசனுக்கு வேறொரு பணியில் மனவூக்க மேற்பட்டது; அன்றியும், நம்பிள்ளை திருவடிகளில் பழக்கக் கேட்ட வொருபெரியார் யாத்ருச்சிகமாக அவ்வரச சபையில்தென்பட்டார். அவரைக்கண்டவுடனே பெருமகிழ்ச்சி கொண்டு பட்டர் அவரிடத்தில் அரசனுடைய கேள்வியை யெடுத்துரைத்து 'இவ்விஷயம் நம்பிள்ளை கோஷ்டியில் விசாரத்திற்கு வந்திருக்குமே; நம்பிள்ளை நிர்வஹிக்கும் விதம் யாது?' என்று செவியோடு செவியாகக் கேட்டார். கேட்டவுடனே அவர் "ஸத்யேந லோகாந் ஜயதி" என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தைக் கொண்டு நம்பிள்ளை நிர்வஹிக்கக் கேட்டிருந்ததுண்டு" என்று கூற, பட்டர் அதைத் தம் திருவுள்ளத்திலே கொண்டு 'இதுதான் பொருத்தமான ஸமாதானம்' என்று அறுதியிட்டுக்கொண்டார். வேறு பணியில் இருந்த அரசனும் அபிமுகனாகி 'ஸ்வாமிகளே! என் கேள்விக்கு ஸமா

[illegible] ஸம்பரீக்ஷகனில்லையோ' என்றான். அதற்கு பட்டர், 'மஹாப்ரபோ! [illegible] அப்போதே சொல்ல ஸஜ்ஜனாயிருந்தேன்; தாங்கள் அங்ங[illegible] இருந்தபடியாலே நானும் ஸமயம் எதிர்பார்த்திருந்தேன்; இப்போது கேளுங்கள்' என்று பீடிகைபிட்டுக்கொண்டு நம்பிள்ளை சிஷ்யரிடம் கேட்ட நிர்வாஹத்தைப் பன்னியுரைத்தார்; அதாவது, 'இராகவன் ஸத்யவாக்கின் பெருமையினால் ஸகல லோகங்களையும் ஸ்வாதீனமாகவுடையவன்' என்று 'தசரத சக்ரவர்த்தி சொல்லியிருப்பதனால் அந்த ஸத்யவாக்கின் பெருமையே ஜடாயுவுக்கு முக்தியளிக்கக் காரணம்; நாராயணத்வப்ரயுக்தமான பரத்வத்தினால் முக்தியளித்தபடியன்று'. பட்டர் அரசனுக்கு இதை விரிவாக உணர்த்த, அரசன் மேதாவியாகையாலே [illegible]யல்லது வேறுவகையாக ஸமாதானம் சொல்லப் பொருந்தாதென்று அணிந்து உள்குழைந்து பட்டரை விசேஷமாக ஸன்மானித்துப் போகவிட்டான். பட்டர் பரமஸாரிகராகையாலே அந்த ஸத்காரத்தைத் தம்முடைய திருமாளிகைக்குக் கொண்டுபோக மனங்கொள்ளாமல், 'நம்பிள்ளையின் ஸ்ரீஸூக்தி ரத்நாகரத்தில் ஒரு சிறு திவலைக்குப் பெற்ற ஸத்காரமன்றோ இது' என்று உள்ளுருகி அதை நம்பிள்ளை திருவடிவாரத்திலே கொண்டு ஸமர்ப்பித்து 'தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளில் சிந்திப்போன ஒரு சொல்லுக்குப்பெற்ற ஸத்காரமிது; இதுகாறும் அடியேன் அகன்றிருந்து அனர்த்தப்பட்டது போதும்; இனி நிழலும் அடிதாறுமாக அங்கீகரித்து அடியேனை வாழ்வித்தருளவேணும்' என்று வேரற்ற மரம்போலே விழுந்து பிரார்த்தித்து அடிபணிந்து உய்ந்தார் என்பது வரலாறு. இதனால், இராமபிரானுடைய ஸத்யவாக்கின் பெருமையை நம் முன்னோர்கள் நிரூபிக்கும் திறம் அறியலாகும்.

59. இனி இரண்டாவது வகையில் நிரூபணம் கேண்மின். ஸ்ரீராமனுடைய ஸத்யவாதித்வத்திற்கு ஸ்ரீராமாயண கதையைக் கொண்டே குறை சங்கித்து, அதற்குப் பரிஹார முணர்த்துகிறோம். இராமனுக்கு மகுடாபிஷேகஞ் செய்வதாகச் சக்ரவர்த்தி நிச்சயித்து நியமனம் தந்து அதற்குப் பூர்வாங்கமாக ஆகவேண்டிய சடங்குகளும் முடிவுபெற்று அபிஷேகமாக வேண்டிய ஸமயத்தில் கைகேயியின் வாக்குக்குக் கட்டுப்பட்ட மன்னவன் இராமனுக்கு வனவாஸத்தை நியமிக்கவேண்டிவந்த தென்கிற கதாசந்தர்ப்பம் யாவருமறிந்ததே. மகுடாபிஷேகம் கொண்டருள விருந்த இராமனுக்கு, முடிதவிர்ந்து சடைபுனைந்து மரவுரியுடுத்து நல்லுணவுகளை யொழித்துக் காய்கிழங்குகளைப் புசித்துக் கல்லும் முள்ளுமான காட்டு வழிகளிலே திரிந்து பதினான்கு வருஷகாலம் வனவாஸஞ் செய்ய நேர்ந்ததென்றால், உண்மையில் இது வருத்தமாக இருக்கக்கூடுமா? ஆனந்தமாக இருக்கக்கூடுமா? என்று நாம் ஆலோசிக்குமளவில், தலைவிதியென்று ஒப்புக்கொள்ளவேண்டியதாக நேர்ந்த இவ்விஷயத்தில் ஆனந்தம் எப்படியிருக்கக்கூடும்? உள்ளபடி வருத்தந்தானிருக்கும் என்றே பலரும் நினைக்கத்தக்கதும் சொல்லத்தக்கதுமாம். ஆனால், இது தவறான அபிப்பிராயமேயாகும். ராஜ்யாபிஷேகத்திற் காட்டிலும் வனவாஸத்தில் இராமபிரானுக்கு மிக்க மகிழ்ச்சியே யென்று அவன்றனது வாக்கினின்று நன்கு தெரிகின்றது. [அயோத்யா காண். 22-29.]

"மாச லக்ஷ்மண ஸந்தாபம் கார்ஷீர் லக்ஷ்ம்யா விபர்யயே,
ராஜ்யம் வா வநவாஸோ வா வநவாஸோ மஹோதய:"

என்பது இராமபிரான் சோதிவாய் திறந்தருளிய வாசகம். இளையோனை நோக்கிக் கூறிய இவ்வார்த்தையில் "நமக்கு ராஜ்யமானாலென்ன? வனவாஸமானாலென்ன?" என்று முதலிற்சொல்லி, உடனே "வநவாஸோ மஹோதய:" என்று, வனவாஸந்தான் பேரின்பமென்று கூறின இராமபிரான் பொய்யாகக் கூறுமவனல்லன்; நெஞ்சிலுள்ளதை உள்ளபடி யுரைப்பவனன்றோ இராமன். இவ்விஷயத்தைக்

தான மொன்றும் ஸ்புரிக்கவில்லையோ' என்றான். அதற்கு பட்டர், 'மஹாப்ரபோ! ஸ்புரிக்காமலென்ன? அப்போதே சொல்ல ஸஜ்ஜனாயிருந்தேன்; தாங்கள் அந்ய பரராய் இருந்தபடியாலே நானும் ஸமயம் எதிர்பார்த்திருந்தேன்; இப்போது கேளுங்கள்' என்று பீடிகையிட்டுக்கொண்டு நம்பிள்ளை சிஷ்யரிடம் கேட்ட நிர்வாஹத்தைப் பன்னியுரைத்தார்; அதாவது, 'இராகவன் ஸத்யவாக்கின் பெருமையினால் ஸகல லோகங்களையும் ஸ்வாதீனமாகவுடையவன்' என்று தசரத சக்ரவர்த்தி சொல்லியிருப்பதனால் அந்த ஸத்யவாக்கின் பெருமையே ஜடாயுவுக்கு முத்தியளித்ததாம். நாராயணத்வப்ரயுக்தமான பரத்வத்தினால் முத்தியளித்தபடியன்று'. பட்டர் அரசனுக்கு இதை விரிவாக உணர்த்த, அரசன் மேதாவியாகையாலே மிகவுகந்து, இங்ஙனேயல்லது வேறுவகையாக ஸமாதானம் சொல்லப் பொருந்தாதென்று துணிந்து உள்குழைந்து பட்டரை விசேஷமாக ஸன்மானித்துப் போக விட்டான். பட்டர் ப்ராமாணிகராகையாலே அந்த ஸத்காரத்தைத் தம்முடைய க்ருஹத்திற்குக் கொண்டுபோக மனங்கொள்ளாமல், 'நம்பிள்ளையின் ஸ்ரீஸூக்தி ரத்நாகரத்தில் ஒரு சிறு திவலைக்குப் பெற்ற ஸத்காரமன்றோ விது' என்று உள்ளமுருகி அதை நம்பிள்ளை திருவடிவாரத்திலே கொண்டு ஸமர்ப்பித்து 'தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளில் சிந்திப்போன ஒரு சொல்லுக்குப்பெற்ற ஸத்காரமிது; இதுகாறும் அடியேன் அகன்றிருந்து அனர்த்தப்பட்டது போதும்; இனி நிழலுமடிதாறுமாக அங்கீகரித்து அடியேனை வாழ்வித்தருளவேணும்' என்று வேரற்ற மரம்போலே விழுந்து பிரார்த்தித்து அடிபணிந்து உய்ந்தார் என்பது வரலாறு. இதனால், இராமபிரானுடைய ஸத்யவாக்கின் பெருமையை நம் முன்னோர்கள் நிரூபிக்கும் திறம் அறியலாகும்.

59. இனி இரண்டாவது வகையில் நிரூபணம் கேண்மின். ஸ்ரீராமனுடைய ஸத்யவாதித்வத்திற்கு ஸ்ரீராமாயண கதையைக் கொண்டே குறை சங்கித்து, அதற்குப் பரிஹார முணர்த்துகிறோம். இராமனுக்கு மகுடாபிஷேகஞ் செய்வதாகச் சக்கரவர்த்தி நிச்சயித்து நியமனம் தந்து அதற்குப் பூர்வாங்கமாக ஆகவேண்டிய சடங்குகளும் முடிவுபெற்று அபிஷேகமாக வேண்டிய ஸமயத்தில் கைகேயியின் வாக்குக்குக் கட்டுப்பட்ட மன்னவன் இராமனுக்கு வனவாஸத்தை நியமிக்கவேண்டிவந்த தென்கிற கதாசந்தர்ப்பம் யாவருமறிந்ததே. மகுடாபிஷேகம் கொண்டருள ஸித்தனாயிருந்த இராமனுக்கு, முடிதவிர்ந்து சடைபுனைந்து மரவுரி யுடுத்து நல்லுணவுகளை யொழித்துக் காய்கிழங்குகளைப் புசித்துக் கல்லும் முள்ளுமான காட்டு வழிகளிலே திரிந்து பதினான்கு வருஷகாலம் வனவாஸஞ் செய்ய நேர்ந்ததென்றால், உண்மையில் இது வருத்தமாக இருக்கக்கூடுமா? ஆனந்தமாக இருக்கக்கூடுமா? என்று நாம் ஆலோசிக்குமளவில், தலைவிதியென்று ஒப்புக் கொள்ளவேண்டியதாக நேர்ந்த இவ்விஷயத்தில் ஆனந்தம் எப்படியிருக்கக்கூடும்? உள்ளபடி வருத்தந்தானிருக்கும் என்றே பலரும் நினைக்கத்தக்கதும் சொல்லத் தக்கதுமாம். ஆனால், இது தவறான அபிப்பிராயமேயாகும். ராஜ்யாபிஷேகத்திற் காட்டிலும் வனவாஸத்தில் இராமபிரானுக்கு மிக்க மகிழ்ச்சியே யென்று அவன்றனது வாக்கினின்று நன்கு தெரிகின்றது. [அயோத்யா காண். 22-29.]

"மாச லக்ஷ்மண ஸந்தாபம கார்ஷீர் லக்ஷ்ம்யா விபர்யயே,
ராஜ்யம் வா வநவாஸோ வா வநவாஸோ மஹோதய:"

என்பது இராமபிரான் சோதிவாய் திறந்தருளிய வாசகம். இளையோனை நோக்கிக் கூறிய இவ்வார்த்தையில் "நமக்கு ராஜ்யமானாலென்ன? வனவாஸமானாலென்ன?" என்று முதலிற்சொல்லி, உடனே "வநவாஸோ மஹோதய:" என்று, வனவாஸந்தான் பேரின்பமென்று கூறின இராமபிரான் பொய்யாகக் கூறுபவனல்லன்; நெஞ்சிலுள்ளதை உள்ளபடி யுரைப்பவனன்றோ இராமன். இவ்விஷயத்தைக்

கம்பர் கூறுமிடத்து வெகு ஆச்சரியமாகக் கூறுகின்றார்— 'இராமன் திருமுகச் செவ்வினோக்கின்... அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா' என்று. கலக்கிய மாமனத்தனளாய்க் கைகேசி வரம்வேண்ட, மலக்கிய மாமனத்தனனாய மன்னவனும் மறுத்தொழிய, குலக்குமரா! காடுறையப்போவென்று விடைகொடுத்த வளவிலே இராமபிரானுக்குண்டான மனமகிழ்ச்சி, இப்பொழுது எம்மனோரால் இயம்புதற்கெளிதோ? — அப்போது அத்திருமுகமண்டலத்தை நேராகச் சேவிக்கப்பெற்றவர்கள் பேசத் தக்கதேயல்லது அதனைக் கண்ணுற்றுக் காணாத நான் எனது புல்லிய சொல்லைக்கொண்டு அறிவிக்கப் பார்ப்பது பேதைமையன்றோவென்று கையொழிந்து நின்ற கம்பர், மீண்டும் அதனைச் சொல்லுவதாகத் தொடங்கி 'வனவாஸ நியமனம் பெறுதற்கு முன்னே இராமபிரானது திருமுகமண்டலம் தாமரையோடொத்ததாக மாத்திரம் சொல்லலாம்படி யிருந்ததென்றும்; வனவாஸ நியமனம் பெற்றபின்போவென்னில்: அப்போதலர்ந்த செந்தாமரைப்பூவின் செவ்வியிற் காட்டிலும் பன்மடங்கு மேம்பட்ட செவ்வியைப் பெற்றதென்றும் கூறி முடித்தனர்.

60. இங்ஙனே அதிசயமாகக் கூறுதற்குக் காரணம் *வநவாஸோ மஹோதய:" என்று இராமபிரானருளிய சொல்லேயாகும். நன்கு ஆராய்ந்து பார்க்குமிடத்து இது அஸத்யமாகச் சொன்னதே யல்லது ஸத்யமாகச் சொன்னதன்றென்றும், மகுடாபிஷேக மங்களம் தவறிப்போயிற்றே யென்கிற துக்கமே இராமனது அடிவயிற்றில் குடிகொண்டிருந்ததென்றும் கண்டறியும்படியாகவுள்ளது. எங்ஙனே யென்னில்; இராமன் பஞ்சவடியில் ஸீதையைப் பிரிந்த வருத்தத்தினால் புலம்புகையில், [ஆரண்யகாண், 67-25]

"ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸோ நஷ்டா ஸீதா ஹதோ த்விஜ:,
ஈத்ருசீயம் மமாலக்ஷ்மீ: நிர்தஹேதபி பாவகம்"

என்று சொல்லிப் புலம்பியது ஸ்பஷ்டமாகவுள்ளது. இதன் பொருள் யாதெனில்; "கிடைக்கவேண்டிய ராஜ்யம் அந்தோ! கிடைக்காமற் போயிற்று; ராஜ்யம் கிடைக்காமற்போனாலென்ன? நகரத்திலேயே ஒரு மூலையில் வஸிக்கப்பெற்றிருக்கலாமே; அதுவுமில்லாமல் காட்டில் வந்து திண்டாடவேண்டியதாயிற்றே; இப்படிப் பட்டதன்றோ என் தலைவிதி!" என்பதாம். இங்ஙனே புலம்புகின்றபடியை நோக்கினால் ராஜ்யமிழந்து வனவாஸம் பெற்றது பெருந்துயராகவே பெருமானுடைய அடிவயிற்றில் உறைந்து கிடக்கிறதென்று தெரியவில்லையா? உண்மை இப்படியிருக்க 'வநவாஸோ மஹோதய:' என்று அப்போது சொன்ன வார்த்தை அஸத்யமென்றே கொள்ளவேண்டியதாகிறதன்றோ." இங்ஙனே பலர் சங்கிக்க இடமுள்ளது. இனி இதற்குப் பரிஹாரம் கூறுவோம்; "ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸ:" என்று பரிதபித்துச் சொன்னவிது எந்த ஸமயத்தில்? எதனாலே? என்று நன்கு ஆலோசிக்க வேண்டும். பிராட்டியைப் பிரிந்தும் பரமபாகவதோத்தமரான ஜடாயுமஹாராஜரையு மிழந்தும் பரிதாபம் பொறுக்கொணாதிருந்த ஸமயத்தில் வெளிவந்த வார்த்தையிது. வநவாஸக் கட்டளை கிடைத்தபோது "வநவாஸோ மஹோதய:" என்று சொன்னது என்ன திருவுள்ளத்தாலென்னில், கேண்மின்; ஜநகசக்ரவர்த்தி ஸீதாபிராட்டியைத் தாரைவார்த்துக் கொடுக்கும்போது "இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ" என்று சொல்லிக்கொடுத்தார்; ஸ்ரீராமபிரான் தான் செய்யக்கடவதான தருமத்திற்கு அவளைத் துணைவியாகக் கைப்பற்றினது இதனால் விளங்கிற்று. இராமன் தான் செய்யக் கடவதான தருமம் எதுவென்னில்; சரணாகத பரித்ராணமேயாகும். பிராட்டியுடன் காட்டுக் கெழுந்தருளினது சரணாகதஸம்ரக்ஷணமாகிற பரமதர்மத்தை நிறைவேற்றுதற்குப் பாங்காகுமென்ற குதூஹலத்தாலேயாயிற்று. காகாஸுர பரித்ராணம் முதலிய

கம்பர் கூறுமிடத்து வெகு ஆச்சரியமாகக் கூறுகின்றார்—"இராமன் திருமுகச் செவ்வி நோக்கின்,..அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா." என்று கலக்கிய மாமனத்தனளாய்க் கைகேசி வரம்வேண்ட மலக்கிய மாமனத்தனனாய் மன்னவனும் மறுமொழிய, குலக்குமரா! காடுறையப்போவென்று விடைகொடுத்த வளவிலே இராமபிரானுக்குண்டான மனமகிழ்ச்சி, இப்பொழுது எம்மனோரால் இயம்புதற் கெளிதோ? = அப்போது அத்திருமுகமண்டலத்தை நேராகச் சேவிக்கப்பெற்றவர்கள் பேசத் தக்கதேயல்லது அதனைக் கண்ணுற் காணாத நான் எனது புல்லிய சொல்லைக்கொண்டு அறிவிக்கப் பார்ப்பது பேதைமையன்றோ வென்று கையொழிந்து நின்ற கம்பர், மீண்டும் அதனைச் சொல்லுவதாகத் தொடங்கி 'வனவாஸ நியமனம் பெறுதற்கு முன்னே இராமபிரானது திருமுகமண்டலம் தாமரையோடொத்ததாக மாத்திரம் சொல்லலாம்படியிருந்ததென்றும்; வனவாஸ நியமனம் பெற்றபின்போவென்னில்: அப்போதலர்ந்த செந்தாமரைப்பூவின் செவ்வியிற் காட்டிலும் பன்மடங்கு மேம்பட்ட செவ்வியைப் பெற்றதென்றும் கூறி முடித்தனர்.

60. இங்ஙனே அதிசயமாகக் கூறுதற்குக் காரணம் *வநவாஸோ மஹோதய:* என்று இராமபிரானருளிய சொல்லேயாகும். நன்கு ஆராய்ந்து பார்க்குமிடத்து இது அஸத்யமாகச் சொன்னதே யல்லது ஸத்யமாகச் சொன்ன தன்றென்றும், மகுடாபிஷேக மங்களம் தவறிப்போயிற்றே யென்கிற துக்கமே இராமனது அடிவயிற்றில் குடிகொண்டிருந்ததென்றும் கண்டறியும்படியாகவுள்ளது. எங்ஙனே யென்னில்; இராமன் பஞ்சவடியில் ஸீதையைப் பிரிந்த வருத்தத்தினால் புலம்புகையில், [ஆரண்யகாண், 67-25]

"ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸோ நஷ்டா ஸீதா ஹதோ த்விஜ:,
ஈத்ருசீயம் மமாலக்ஷ்மீ: நிர்தஹேதபி பாவகம்"

என்று சொல்லிப் புலம்பியது ஸ்பஷ்டமாகவுள்ளது. இதன் பொருள் யாதெனில்; "கிடைக்கவேண்டிய ராஜ்யம் அந்தோ! கிடைக்காமற் போயிற்று; ராஜ்யம் கிடைக்காமற் போனாலென்ன? நகரத்திலேயே ஒரு மூலையில் வஸிக்கப்பெற்றிருக்கலாமே; அதுவுமில்லாமல் காட்டில் வந்து திண்டாடவேண்டியதாயிற்றே; இப்படிப் பட்டதன்றோ என் தரித்திரம்!" என்பதாம். இங்ஙனே புலம்புகின்றபடியை நோக்கினால் ராஜ்யமிழந்து வனவாஸம் பெற்றது பெருந்துயராகவே பெருமானுடைய அடிவயிற்றில் உறைந்து கிடக்கிறதென்று தெரியவில்லையா? உண்மை இப்படியிருக்க 'வநவாஸோ மஹோதய:' என்று அப்போது சொன்ன வார்த்தை அஸத்யமென்றே கொள்ளவேண்டியதாகிறதன்றோ." இங்ஙனே பலர் சங்கிக்க இடமுள்ளது. இனி இதற்குப் பரிஹாரம் கூறுவோம்; "ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸ:" என்று பரிதபித்துச் சொன்னவிது எந்த ஸமயத்தில்? எதனாலே? என்று நன்கு ஆலோசிக்க வேண்டும். பிராட்டியைப் பிரிந்தும் பரமபாகவதோத்தமரான ஜடாயுமஹாராஜரையு மிழந்தும் பரிதாபம் பொறுக்கொணாதிருந்த ஸமயத்தில் வெளிவந்த வார்த்தையிது. வநவாஸக் கட்டளை கிடைத்தபோது "வநவாஸோ மஹோதய:" என்று சொன்னது என்ன திருவுள்ளத்தாலென்னில், கேண்மின்; ஜநகசக்ரவர்த்தி ஸீதாபிராட்டியைத் தாரைவார்த்துக் கொடுக்கும்போது "இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ" என்று சொல்லிக்கொடுத்தார்; ஸ்ரீராமபிரான் தான் செய்யக்கடவதான தருமத்திற்கு அவளைத் துணைவியாகக் கைப்பற்றினது இதனால் விளங்கிற்று. இராமன் தான் செய்யக் கடவதான தருமம் எது வென்னில்; சரணாகத பரித்ராணமேயாகும். பிராட்டியுடன் காட்டுக் கெழுந்தருளினது சரணாகதஸம்ரக்ஷணமாகிற பரமதர்மத்தை நிறைவேற்றுதற்குப் பாங்காகு மென்ற குதூஹலத்தாலேயாயிற்று. காகாஸுர பரித்ராணம் முதலிய

[illegible] விருந்தது ஸ்வல்பமாகப் பெற்றனை பெருமாளுக்கு [illegible] பிராட்டியைப் பிரிந்த துக்கம் ஒன்று; பரமபாகவதர் [illegible] என்கிற குதூஹலத்தோடே காடேற வந்தவர்க்கு மஹா [illegible] ஜடாயு மஹாராஜரை இழந்த துக்கம் மற்றொன்று; இதுவே [illegible]. இவ்விரண்டு துக்கங்களினாலும் திருவுள்ளம் உடைகுலைப் படவே காட்டுக்கு வந்தது விபலமாகவும் விபரீதபலமாகவுமாயிற்றே என்கிற துயரத்தினால் "ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸ:" என்கிற ச்லோகம் ஆவிர்ப்பவித்ததில் பிசகொன்றுமில்லை; இதனால் 'வநவாஸோ மஹோதய:' என்று முன்னம் சொன்னது பொய்யாக நினைக்க வொண்ணாததே.

61. ஒரு பெரியவர் தேவப்பெருமாளுடைய மஹோத்ஸவத்தை ஸேவிக்கப் பலவருஷங்களாகப் பாரித்து வெகு குதூஹலத்துடன் அவ்விடம் வந்து சேர்ந்தார்; வந்த விடத்தில் ஒரு விதமான ஸௌகரியமும் கிடைக்காமல் வெய்யில் மழை முதலான கஷ்டங்களில் சிக்கித் தெருவில் திண்டாடிப் பெருமாள் ஸேவையும் ப்ராப்தமாகா தொழிந்தால் அப்போது அவரது வாயினின்று பரிதாபவார்த்தை எவ்விதமாக வெளிவரக்கூடுமென்று பாருங்கள்: 'அந்தோ நாம் நம்மூரிலேயே ஸுகமாக வாழ்ந்திருக்கலாமே; எதுக்கு இப்படி வந்து வருந்துகிறோம்! இதுவும் ஒரு விதியா நமக்கு!' என்றிப்படி பலவாறு சொல்லிப் புலம்ப நேர்கின்றது. இது எங்கும் ஸம்பாவிதமே, அஸம்பாவிதமன்று. அதனால் என்ன குறை? ஊரிலிருந்து புறப்பட்டு வரும்போது அவர்க்கிருந்த குதூஹலத்தில் குறைகூறமுடியுமோ? பொய்யான குதூஹலத்தினால் புறப்பட்டாரவர் என்று இது கொண்டு சொல்லமுடியுமோ? எந்த விருப்பத்தினால் முதலில் குதூஹல முண்டாயிற்றோ அந்த விருப்பம் முட்டுப் பட்டவுடன் முன்னிருந்த குதூஹலம் மாறுபடுமன்றோ. இது உலகமெங்கும் காணும் நீதியேயாம். இராமபிரானுடைய திருவாக்கில் 'வநவாஸோ மஹோதய:' என்ற வார்த்தை வெளிவந்தபோது வநவாஸகுதூஹலம் ஸத்யமாகவே யிருந்ததன்றி அதில் பொய்ம்மை சிறிதுமில்லை என்பது இவ்வளவால் நிரூபிக்கப்பட்டது. இங்ஙனே ஸ்ரீராமாயணத்தில் மற்றுஞ் சில சங்கைகளும் தோன்றக்கூடியனவுள; அவற்றுக்கும் இவ்வழியாலே பரிஹாரம் காணத்தக்கது.

## 6. "ஏதத் வ்ரதம் மம"

62. ஒரு காரியத்தைச் செய்து முடிக்கவேணுமென்கிற சங்கற்பத்திற்கு விரதம் என்று பெயர். அந்த சங்கற்பம் சிறிதும் தளராமல் திடமாக இருக்கப் பெறுவது ஒரு சிறந்த குணம். ஏகாதசியன்று உபவாஸமிருத்தல் முதலியன [illegible]போல்வார்க்கு விரதமெனப்படும். ஆனால் நாம் எதிலும் உறுதி யுடையோமல்லோம். ஒரு பணியைத் தொடங்கும்போது அதில் மிகமிக உற்சாகங் கொண்டிருப்போம்; சிலநாள் கழிந்தவாறே அதில் தளர்ச்சியுண்டாகி மற்றொரு பணியில் கை வைப்போம். அதிலும் அப்படியேயாகும். ஆகவே, ஒன்றிலும் உறுதியில்லாதவர்கள் நாம். இராமபிரானோ வென்னில் எதிலும் மிக்க வுறுதி யுடையவன். இவ்வரிய பெரிய குணத்தை இங்கு நாம் விரிவாக அநுபவிக்க விரும்புகின்றோம். இராமன் எல்லாக் காரியங்களிலுமே திண்ணமான ஊக்க முடையவனாயினும், அவன் முக்கியமாகக் கொண்ட காரியம் ஒன்றேயாகும். அது தான் சரணாகதபரித்ராணமென்பது. பிராட்டியும் இராவணனை நோக்கி உபதேசம் செய்யுமிடத்து "விதிதஸ் ஸஹி தர்மஜ்ஞ: சரணாகத வத்ஸல:' என்று கூறியிருத்தலால் [illegible] அடைக்கலம் புகுந்தவர்களை அஞ்சலென்று கூறி அவர்களின் அநிஷ்ட நிவ்ருத்திகளையும் இஷ்டப்ராப்திகளையும் செய்வித்து

தருணங்களில் பிராட்டிகூட விருந்தது ஸபலமாகப் பெற்றதை பெருமாள் நன்கறிந்தவர். அப்படிப்பட்ட பிராட்டியைப் பிரிந்த துக்கம் ஒன்று; பரமபாகவதர்களோடு கூடி வாழலாமென்கிற குதூஹலத்தோடே காடேற வந்தவர்க்கு மஹாபாகவதோத்தமரான ஜடாயு மஹாராஜரை இழந்த துக்கம் மற்றொன்று; இதுவே மிகப்பெரிய துயராம். இவ்விரண்டு துக்கங்களினாலும் திருவுள்ளம் உடைகுலைப்படவே காட்டுக்கு வந்தது விபலமாகவும் விபரீதபலமாகவுமாயிற்றே என்கிற துயரத்தினால் *ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸ:* என்கிற ச்லோகம் ஆவிர்ப்பவித்ததில் பிசகொன்றுமில்லை; இதனால் 'வநவாஸோ மஹோதய:' என்று முன்னம் சொன்னது பொய்யாக நினைக்க வொண்ணாததே.

61. ஒரு பெரியவர் தேவப்பெருமாளுடைய மஹோத்ஸவத்தை ஸேவிக்கப் பலவருஷங்களாகப் பாரித்து-வெகு குதூஹலத்துடன் அவ்விடம் வந்து சேர்ந்தார்; வந்த விடத்தில் ஒரு விதமான ஸௌகரியமும் கிடைக்காமல் வெய்யில் மழை முதலான கஷ்டங்களில் சிக்கித் தெருவில் திண்டாடிப் பெருமாள் ஸேவையும் ப்ராப்தமாகா தொழிந்தால் அப்போது அவரது வாயினின்று பரிதாபவார்த்தை எவ்விதமாக-வெளிவரக்கூடு மென்று பாருங்கள்: 'அந்தோ நாம் நம்மூரிலேயே ஸுகமாக வாழ்ந்திருக்கலாமே; ஏதுக்கு இப்படி வந்து வருந்துகிறோம்! இதுவும் ஒரு விதியா நமக்கு!' என்றிப்படி பலவாறு சொல்லிப் புலம்ப நேர்கின்றது. இது எங்கும் ஸம்பாவிதமே, அஸம்பாவிதமன்று. அதனால் என்ன குறை? ஊரிலிருந்து புறப்பட்டு வரும்போது அவர்க்கிருந்த குதூஹலத்தில் குறைகூறமுடியுமோ? பொய்யான குதூஹலத்தினால் புறப்பட்டாரவர் என்று இது கொண்டு சொல்லமுடியுமோ? எந்த விருப்பத்தினால் முதலில் குதூஹல முண்டாயிற்றோ அந்த விருப்பம் முட்டுப்பட்டால் முன்னிருந்த குதூஹலம் மாறுபடுமன்றோ. இது உலகமெங்கும் காணும் நீதியேயாம். இராமபிரானுடைய திருவாக்கில் 'வநவாஸோ மஹோதய:' என்ற வார்த்தை வெளிவந்தபோது வநவாஸகுதூஹலம் ஸத்யமாகவே யிருந்ததன்றி அதில் பொய்ம்மை சிறிதுமில்லை என்பது இவ்வளவால் நிரூபிக்கப்பட்டது. இங்ஙனே ஸ்ரீராமாயணத்தில் மற்றுஞ் சில சங்கைகளும் தோன்றக்கூடியவையுள; அவற்றுக்கும் இவ்வழியாலே பரிஹாரம் காணத்தக்கது.

## 6. "ஏதத் வ்ரதம் மம"

62. ஒரு காரியத்தைச் செய்து முடிக்கவேணுமென்கிற சங்கற்பத்திற்கு விரதம் என்று பெயர். அந்த சங்கற்பம் சிறிதும் தளராமல் திடமாக இருக்கப் பெறுவது ஒரு சிறந்த குணம். ஏகாதசியன்று உபவாஸ மிருத்தல் முதலியன உலகில் நம்போல்வார்க்கு விரதமெனப்படும். ஆனால் நாம் எதிலும் உறுதியுடையோமல்லோம். ஒரு பணியைத் தொடங்கும்போது அதில் மிகமிக உற்சாகங்கொண்டிருப்போம்; சிலநாள் கழிந்தவாறே அதில் தளர்ச்சியுண்டாகி மற்றொரு பணியில் கை வைப்போம். அதிலும் அப்படியேயாகும். ஆகவே, ஒன்றிலும் உறுதியில்லாதவர்கள் நாம். இராமபிரானோ வென்னில் எதிலும் மிகக வுறுதியுடையவன். இவ்வரிய பெரிய குணத்தை இங்கு நாம் விரிவாக அநுபவிக்க விரும்புகின்றோம். இராமன் எல்லாக் காரியங்களிலுமே திண்ணமான ஊக்கமுடையவனாயினும், அவன் முக்கியமாகக் கொண்ட காரியம் ஒன்றேயாகும். அது தான் சரணாகதபரித்ராண மென்பது. பிராட்டியும் இராவணனை நோக்கி உபதேசம் செய்யுமிடத்து "விதித்ஸ் ஹி தர்மஜ்ஞ: சரணாகத வத்ஸல:' என்று கூறினளாதலால் அடைக்கலம் புகுந்தவர்களை அஞ்சலென்று கூறி அபயமளித்து அநிஷ்ட நிவ்ருத்திகளையும் இஷ்டப்ராப்திகளையும் செய்வித்துக்

காத்தருள்வதே இராமனுக்கு இவ்வவதாரத்தில் மிக முக்கியமான காரியமாயிருந்த தென்று நன்குணரலாகிறது. ஸ்ரீ வேதாந்த தேசிகனும் அபயப்ரதானஸாரத்தின் முகப்பில் "நமஸ்தஸ்மை கஸ்மைசந பவது நிஷ்கிஞ்சநஜந ஸ்வயம்ரக்ஷா தீக்ஷா ஸமதிக ஸமித்தாயசஸே" என்றருளிச்செய்திருப்பது குறிக்கொள்ளத் தக்கது. அகிஞ்சநர்களான ப்ரபன்னர்களைத் தன் பேறாகக் காத்தருள்வதில் தீக்ஷைகொண்டு அதுவே பெரும்புகழாக விளங்குமவன் இராமபிரான் என்பது மேலெடுத்த சுலோகத்தின் கருத்து. "ஸர்வாவஸ்த ஸக்ருத் ப்ரபந்ந ஜநதா ஸம்ரக்ஷணைகவ்ரதீ" என்று தசாவதார ஸ்தோத்ரத்திலருளிச் செய்திருப்பதும் காண்க. அடியார்களைக் காத்தருள்வ தென்பது கிடக்கட்டும்; அதில் திடமான வுறுதியையுடையவன் இராமன் என்பதே இங்கு விஷயம். இதைப் பற்றி ஸ்ரீ ராமாயணத்தில் இரண்டிடங்களை முக்கியமாக எடுத்துக்கொள்வோம். ஆரணிய காண்டத்தில் 6, 9, 10 ஆகிய மூன்று ஸர்க்கங்களின் விஷயங்களை முதலில் நிரூபணம் செய்வோம். அங்கு ஆறுவது ஸர்க்கத்திலுள்ள கதையாவது: சரபங்க முனிவரது ஆச்ரமஞ் சென்றிருந்த இராமபிரான் அம்முனிவர் சுவர்க்கஞ் சென்ற பின் அங்குள்ள முனிவர்களால் இங்ஙனம் வேண்டப்பட்டான், 'ராமா! நீ தேவேந்திரனைப்போல் இந்நிலவுலகுக்கெல்லாம் நாதனாயிருக்கின்றனை; சரபங்கமுனிவரை அநுக்ரஹித்த கீர்த்தியும் விராதனைக் கொன்ற வீரமும் உன்பால் சிறந்து விளங்குகின்றன. தந்தை சொற்பேணி அரசாட்சிப்பெருஞ் செல்வத்தை வெறுத்ததுமன்றி பரதன்வந்து மிகமிக வேண்டினவிடத்தும் மனவூக்கம் குன்றாதிருக்கின்றனை; உன் பக்கல் தருமமும் சத்தியமும் தழைத்தோங்குகின்றன; சரணாகதரக்ஷகனான உன்னிடத்தில் ஒரு விண்ணப்பஞ் செய்கின்றோம்; வருத்தம் தாங்கி நிற்கமுடியாமல் இது சொல்லுகின்றோம்; இங்கு வந்திருப்பவர்கள் யாவரும் அந்தணர்களே; இவர்கட்கு நீ நாதனாயிருந்தும் அந்தோ! இவர்கள் அநாதர்கள்போல் மிக நலிவுறுகின்றனர்; இவர்களது தேகங்கள் அரக்கர்களால் அடிபட்டிருப்பதைக் காண்பாயாக; இங்ஙனம் வனத்தில் அரக்கர்கள் புரியும் நலிவுகளை நாங்கள் பொறுத்திருக்கவும் பரிஹரிக்கவும் வல்லமை அற்றிருக்கின்றோம்; ராமா! இதற்காகவே நாங்களனைவரும் உன்னைச் சரணமடைகின்றோம்—அரக்கர்களிடமிருந்து எங்களைக் காத்தருள்வாயாக' என்று. இவ்வளவுங் கேட்ட இராமன் மிகவும் மனமிரங்கி அவர்களெல்லாரையும் நோக்கி 'முனிவர்காள்! எனக்கு நீங்கள் கட்டளையிட வேண்டுமேயல்லது என்பால் இங்ஙனம் வேண்டலாமோ? உங்களது கஷ்டங்களைத் தீர்ப்பது எனது சொந்தப் பிரயோஜனமாகும். தந்தை சொற்பேணுதலென்னும் வியாஜத்தினால் உங்கள் காரியத்தை நிறைவேற்றுதற்கே இவண் யான் விடைகொண்டு இருக்கின்றேன்; உங்கட்கு இன்னல் விளைக்கின்ற அரக்கர்களையெல்லாம் நான் வதஞ்செய்தொழிப்பது திண்ணம்' என்று சொல்லி அவர்கட்கு அபயமளித்துச் சென்றனன்—என்பது ஆறுவது ஸர்க்கத்திலுள்ள கதை.

63. பிறகு ஒன்பதாவது ஸர்க்கத்திற் கதையாவது,—பிராட்டி இராமனை நோக்கிச் சொல்லலுற்றாள்; "நாதா! உலகில் மூன்று தீய செயல்கள் மிகக் கொடியனவாகச் சொல்லப்படுகின்றன; பொய் சொல்லுதல், பிறர் மனைவியை வேட்டல், பகையின்றிப் பரஹிம்ஸை செய்தல் என்னுமிம்மூன்றும் மிகக் கொடிய செயல்களாம்; இவற்றுள் முதலிரண்டு செயல்களை நீர் நெஞ்சாலும் நினைக்கமாட்டீரென்பதை நன்கறிவேன்; நீர் சத்தியசந்தர், ஏகபத்தினி விரதமுடையீர்; ஆனால், மூன்றாவதான தீய செயல் இப்போது உம்மிடத்தில் இடம் பெறத் தொடங்கியிருப்பது மிக வருந்தத்தக்கது. நீர் முனிவர்களைக் காக்கவேண்டி அரக்கர்களனைவரையும் கொன்றொழிப்பதாக வாக்குறுதியளித்தீர்; இதற்காகவே காட்டுக்கு வந்திருப்பதாகவும் தெரிவித்தீர்; இதுபற்றி நான் மிக வருந்துகிறேன். அரக்கர்கட்கும் உமக்கும் நேராகப் பகையொன்றுமின்றியிருக்க அவர்களை நீர் கொல்ல விரும்புவதை

நான் [illegible] இல்லேன். முனிவர்கட்குத் தீங்கிழைக்கு மரக்கர்களைக் கொல்வது தருமமேயாகுமென்று நீர் கருதக்கூடும்; நீர் ராஜ பதவியை விரும்பி இருப்பீராகில் அப்போது இது தருமமாகும்; க்ஷத்ரிய விருத்தியை விட்டுத் தபோ விருத்தியைக் கைப்பற்றியிருக்கு முமக்கு இது தருமமாகுமோ? "ஆழிசூழ் உலக மெல்லாம் பரதனே யாள நீபோய்த் தாழிருஞ்சடைகள் தாங்கித் தாங்கருந்தவமேற் கொண்டு பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியப்புனல்களாடிவா" வென்று நியமிக்கப் பட்டுக் கானகம் வந்திருக்கின்ற நீர் ஆயுதத்தைக் கையால் தொடுவதே உரிய [illegible] திருந்துத் தவம்புரிதலே தகுந்தது. ஆயுதம் தரிப்பதால் [illegible] ஹிம்ஸை செய்ய நேரிட்டுப் பாபமே சம்பவிக்கும். தருமநெறி யிலே விருப்பமுடைய நீர் தவவொழுக்கத்தை மேற்கொள்வதே நலம்; உமக்குத் தெரியாததொன்றுமில்லை; பெண்பிறந்த நான் உமக்குத் தரும முணர்த்துவதென் பது தகாததாயினும் உம்மீது இருக்குமன்பினால் தெரிவித்துக்கொண்டேன்; நீர் இதனைத் தம்பியோடும் நன்கு ஆலோசித்து இஷ்டமானபடி செய்வீராக" — என்று, மேல் பத்தாவது ஸர்க்கத்தில் பிராட்டிக்கு மறுமாற்ற முரைக்கின்ற இராகவன் சொன்ன சொற்களில் மிகவும் ஸாரமான வொரு ச்லோகத்தையே இங்கெடுத்துக் காட்டுவோம்; (ஆரண். 10—19.) "அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம்வா ஸீதே ஸலக்ஷ்மணாம்; ந து ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத:" ஆச்ரிதரக்ஷணத்தில் இராமபிரான் திடமான விரதமுடையவனென்பதை இந்த ச்லோகம் மிக நன்றாக எடுத்துக் காட்டுகின்றது. நம் போன்ற அகிஞ்சநர்கள் நிச்சலும் சிந்தை செய்யவேண்டிய சுலோகமிது. இந்த சுலோகத்தின் பொருளாவது: "ஸீதே! நான் என்னுயிரைவிட்டாலும் விடுவேன், உன்னையும் இலக்ஷ்மணனை யும் விட்டாலும் விடுவேன்; ஆனால், ஒருவருக்குப் பிரதிக்ஞை செய்து கொடுத்து அதைத் தவறுவதென்பது முடியாது; அதிலும் பிராமணர்கட்குச் செய்த பிரதிக் ஞையென்றால் எள்ளளவும் தவறமாட்டேன்" என்பதாம். இதற்குமேல் மற்றொரு ச்லோகமுமுள்ளது காண்மின்: [10—22] "ஸ்வதர்மம் சாநுரூபஞ்ச குலஸ்ய தவசாத்மந:, ஸதர்மசாரிணீ மே த்வம் ப்ராணேப்யோபி கரீயஸீ." "ஸீதே; நான் செய்ய நினைக்கும் தருமத்தையே நீயும் சங்கற்பிக்கவேண்டும்; வேறொன்றை நீ நினைக்க லாகாது; இப்படிப்பட்ட தருமத்தை அநுஷ்டிக்கத் துணைபுரிவதற்காகவே யன்றோ உன்னை நான் மணம் புரிந்துகொண்டேன்; ஆகவே என்னுயிர்க் காதலியான நீ என் வழியொழுகுவதே உற்றது" — என்னுங் கருத்து மேலெடுத்த சுலோகத்தி லுறையும். ஆக, இராமபிரான் ஆச்ரிதரக்ஷணத்தில் திடமான வுறுதி உடைய வன் என்பது இக் கதாசந்தர்ப்பங்களினால் நன்கு விளங்கிற்று.

64. மேல் யுத்தகாண்டத்தில் விபீஷணசரணாகதி ப்ரகரணத்திலுள்ள கதா சந்தர்ப்பத்தைக்கொண்டும் இதனை நன்கு நிலை நாட்டுவோம். "ஏதத் வ்ரதம் மம" என்பது அவ்விடத்திலன்றோவுள்ள வசனம். இராவணனுடைய மந்திராலோசனைக் குழுவில் விபீஷணன் அவனுக்குப் பலவாறு ஹிதோபதேசங்கள் செய்தும் பலிக்கக் காணாமையாலே இராமபிரானுடைய திருவடி நிழலிலே யொதுங்கித் தான் வாழ்ந்து போக நிச்சயித்துத் தன்னோடொத்த அன்புடைய நால்வருடன் கிளம்பிவந்து வானத்திலே நின்று வானர முதலிகளை நோக்கி, இராமபிரான் தன்னை அங்கீ கரிக்குமாறு செய்யவேணுமென்று பெருமிடறுசெய்து ஓலமிட, அப்போது வானர வீரர்களில் சுக்கிரீவன் முதலானோர் இவனைச் சேர்த்துக்கொள்வது தகுதியற்ற தென்று வலிதாக ஆக்ஷேபிக்க, அப்போது இராகவன் தனக்குள்ள ஆச்ரித ரக்ஷண பக்ஷபாதத்தையும் அதில் திடமான விரதத்தையும் எடுத்துரைக்குந் திறன் மிக வியக்கத் தக்கது. அதனை இங்குச் சிறிது விவரிப்போம். அடைக்கலம் புகுந்த இவ்விபீஷணன் தக்க காலத்தில் வந்திலனென்றாவது நல்லெண்ணத்தோடு வந்தில னென்றாவது கைவிடத் தக்கவனல்ல னென்பதைக் கூறத்தொடங்கின ராமன்

நான் தருமமெனக் கொள்ளகில்லேன். முனிவர்கட்குத் தீங்கிழைக்கு மரக்கர்களைக் கொல்வது தருமமே யாகுமென்று நீர் கருதக்கூடும்; நீர் ராஜ பதவியை வஹித்திருந்தால் அப்போது இது தருமமாகும்; க்ஷத்ரிய விருத்தியை விட்டுத் தாபஸ விருத்தியைக் கைப்பற்றியிருக்கு முமக்கு இது தருமமாகுமோ? "ஆழிசூ ழுலகமெல்லாம் பரதனே யாள நீபோய்த் தாழிருஞ்சடைகள் தாங்கித் தாங்கருந் தவமேற்கொண்டு, பூழிவெங்கான நண்ணிப் புண்ணியப்புனல்களாடிவா" வென்று நியமிக்கப்பட்டுக் கானகம் வந்திருக்கின்ற நீர் ஆயுதத்தைக் கையால் தொடுவதே உரியதன்று; அரண்யவாஸத்திற்குத் தவம்புரிதலே தகுந்தது. ஆயுதம் தரிப்பதால் கோபமுண்டாகிப் பரஹிம்ஸை செய்ய நேரிட்டுப் பாபமே சம்பவிக்கும். தருமநெறியிலே விருப்பமுடைய நீர் தவவொழுக்கத்தை மேற்கொள்வதே நலம்; உமக்குத் தெரியாததொன்றில்லை; பெண்பிறந்த நான் உமக்குத் தரும முணர்த்துவதென்பது தகாததாயினும் உம்மீது இருக்குமன்பினால் தெரிவித்துக்கொண்டேன்; நீர் இதனைத் தம்பியோடும் நன்கு ஆலோசித்து இஷ்டமானபடி செய்வீராக"—என்று. மேல் பத்தாவது ஸர்க்கத்தில் பிராட்டிக்கு மறுமாற்ற முரைக்கின்ற இராகவன் சொன்ன சொற்களில் மிகவும் ஸாரமானதொரு ச்லோகத்தையே இங்கெடுத்துக் காட்டுவோம்; (ஆரண். 10—19.) "அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம்வா ஸீதே ஸலக்ஷ்மணாம்:, ந து ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத:" ஆச்ரிதரக்ஷணத்தில் இராமபிரான் திடமான விரதமுடையவனென்பதை இந்த ச்லோகம் மிக நன்றாக எடுத்துக் காட்டுகின்றது. நம் போன்ற அகிஞ்சநர்கள் நிச்சலும் சிந்தை செய்யவேண்டிய சுலோகமிது. இந்த சுலோகத்தின் பொருளாவது: "ஸீதே! நான் என்னுயிரைவிட்டாலும் விடுவேன், உன்னையும் இலக்குமனையும் விட்டாலும் விடுவேன்; ஆனால், ஒருவருக்குப் பிரதிக்ஞை செய்து கொடுத்து அதைத் தவறுவதென்பது முடியாது; அதிலும் பிராமணர்கட்குச் செய்த பிரதிக்ஞையென்றால் எள்ளளவும் தவறமாட்டேன்" என்பதாம். இதற்குமேல் மற்றொரு ச்லோகமுமுள்ளது காண்மின்: [10—22] "ஸத்ருசம் சாநுரூபஞ்ச குலஸ்ய தவசாத்மந:, ஸதர்மசாரிணீ மே த்வம் ப்ராணேப்யோபி கரீயஸீ." "ஸீதே; நான் செய்ய நினைக்கும் தருமத்தையே நீயும் சங்கற்பிக்கவேண்டும்; வேறொன்றை நீ நினைக்கலாகாது; இப்படிப்பட்ட தருமத்தை அநுஷ்டிக்கத் துணை புரிவதற்காகவே யன்றோ உன்னை நான் மணம் புரிந்துகொண்டேன்; ஆகவே என்னுயிர்க் காதலியான நீ என் வழியொழுகுவதே உற்றது"—என்னுங் கருத்து மேலெடுத்த சுலோகத்தினுறையும். ஆக, இராமபிரான் ஆச்ரிதரக்ஷணத்தில் திடமான வுறுதி உடையவன் என்பது இக் கதாசந்தர்ப்பங்களினால் நன்கு விளங்கிற்று.

64. மேல் யுத்தகாண்டத்தில் விபீஷணசரணாகதி ப்ரகரணத்திலுள்ள கதாசந்தர்ப்பத்தைக்கொண்டும் இதனை நன்கு நிலை நாட்டுவோம். "ஏதத் வ்ரதம் மம" என்பது அவ்விடத்திலன்றோவுள்ள வசனம். இராவணனுடைய மந்திராலோசனைக் குழுவில் விபீஷணன் அவனுக்குப் பலவாறு ஹிதோபதேசங்கள் செய்தும் பலிக்கக் காணாமையாலே இராமபிரானுடைய திருவடி நிழலிலே யொதுங்கித் தான் வாழ்ந்து போக நிச்சயித்துத் தன்னோடொத்த அன்புடைய நால்வருடன் கிளம்பிவந்து வானத்திலே நின்று வானர முதலிகளை நோக்கி, இராமபிரான் தன்னை அங்கீகரிக்குமாறு செய்யவேணுமென்று பெருமிடறுசெய்து ஓலமிட, அப்போது வானர வீரர்களில் சுக்கிரீவன் முதலானோர் இவனைச் சேர்த்துக்கொள்வது தகுதியற்றதென்று வலிதாக ஆக்ஷேபிக்க, அப்போது இராகவன் தனக்குள்ள ஆச்ரித ரக்ஷண பக்ஷபாதத்தையும் அதில் திடமான விரதத்தையும் எடுத்துரைக்குந் திறன் மிக வியக்கத் தக்கது. அதனை இங்குச் சிறிது விவரிப்போம். அடைக்கலம் புகுந்த இவ்விபீஷணன் தக்க காலத்தில் வந்திலனென்றாவது நல்லெண்ணத்தோடு வந்திலனென்றாவது கைவிடத் தக்கவனல்லனென்பதைக் கூறத்தொடங்கின ராமன்

இங்ஙனே கூறுகின்றான் ;—இராவணன் சீதையைக் கவர்ந்து சென்று பலநாள்களாகியும் முன்னமே நம்மிடம் வந்து சேராமல் நாம் எதிரியோடு போர்புரியத் தொடங்கு மிச்சமயத்தில் நம்மிடம் வந்து சேருமிவ்விபீடணன் நம்முடன் கலந்தவன்போலிருந்து நமது மருமங்களையெல்லா முணர்ந்துகொண்டு நம்மை வஞ்சனையாற் கொல்லுதற்காகத்தான் வந்தானோ வென்று நீங்கள் கருதுவதற்கிடமில்லை. நன்மதி கூறித் தமையனை எப்படியாவது திருத்தலாமென்று இத்தனை நாளும் பலபடி முயன்று பார்த்தும் அது பலியாமற்போனதுமன்றி அவ்விராவணன் தன்னைக் கடிந்து கூறுதலுஞ் செய்யவே, இவன் தான் வாழவெண்ணிய நம்மிடம்வந்து சேர்ந்தனன் ; இவனை நான் ஒருவிதத்திலும் கைவிடகில்லேன் ; அடைக்கலம் புகுந்த விவனை அங்கீகரியாது கைவிட்டால் தான் நமக்கு நல்வாழ்வும் வெற்றியுமுண்டாகுமென்று தேறினாலும் அஃது எனக்கு உடன்பாடன்று ; சரணாகதனான விவனை அங்கீகரிப்பதனால் நமக்குத் தோல்வியே உண்டாவதானாலும், அதற்குமேல் மரணமே சேர்வதானாலும் அதுவே எனக்கு உடன்பாடாகும். நமக்கு வெகு நாளைப் பழக்கமில்லாமல் இப்பொழுதுதான் புதியவனாக வந்தானென்றாவது மஹாபாதகன் என்றாவது குறை கூறி இவனை அங்கீகரியாது தள்ளிவிடுதலை ஒருகாலும் நான் மனத்திற் கொள்ளேன் ; இவன் எப்படிப்பட்டவனாயிருந்தாலும் சரணமென்ற சொல்லைச் சொன்னதுவே காரணமாக, நெடுநாளைப் பழக்கமுள்ள நண்பன்போல் விரும்பத்தக்கவனே யாவன். அங்கீகரிக்கப்பட்ட அவன் ஒருகால் நமக்குத் தீங்கிழைத்தானானாலும் அதனால், சரணாகதனுக்கு அபயமளித்தோ மென்னும் புகழ் நம்மை விட்டகலாது ; ஆகவே, இவனை நான் கைவிடகில்லேன் ; அன்றியும், எங்கள் குலத்து இதிகாசமொன்று கேண்மின் ; சிபி சக்கரவர்த்தி அரசாளுகையில் அவனது மேன்மைக் குணத்தைப் பரிசோதிக்கும்பொருட்டு இந்திரன் பெரும் பருந்தாகவும் யமன் சிறு புறவாகவும் வடிவமெடுத்து அப்புறவைப் பருந்து துரத்திவர, அது சக்ரவர்த்தியைச் சரணமடைய, அன்னான் அதற்கு அபயமளிக்க, பின்னே வந்த பருந்து 'என் இரையைக் கொடுத்திடு' என்று கேட்க மன்னவன் 'அடைக்கலம் புகுந்தவரை அங்கீகரியாது விடுதல் அதிபாதகமாதலால் இதையன்றி எதைக் கேட்டாலும் கொடுப்பேன்' என்ன, பருந்து 'இந்தப் புறவின் எடையளவு தசையை உன் உடம்பினின்று அரிந்துகொடு' என்ன, வேந்தன் சம்மதித்து உடனே தனது உடம்பிலுள்ள உறுப்புக்களை யெல்லாம் ஒவ்வொன்றாக அறுத்து வைத்தும் எடை ஒவ்வாதது கண்டு தானே தராசுத்தட்டிலேறி எடையை நிறைக்க, உடனே அத்தேவர்கள் ப்ரத்யக்ஷமாகிச் சக்ரவர்த்தியை மிகக் கொண்டாடி அவனது உடம்பு முன்போல நிறைவுறும்படி வரமளித்துப் போயினரென்று கேட்டிருந்தனமன்றோ ; அன்ன பெருமை வாய்ந்த சக்ரவர்த்தியின் வமிசத்திற் பிறந்த யான் இப்போது உங்களாலோசனையைக் கேட்டுச் சரணாகதனைக் கைவிடுதல் தகுதியன்று ; இவனைச் சேர்த்துக் கொள்வதனால் எவ்விதமான அனர்த்தம் விளைவதாயினும் அஃதெனக்குப் புகழாகுமே யன்றிப் பழியாகாதாதலால் இவனை நான் கைவிடமாட்டேன் ; ஒரு காட்டில் வேடனொருவன் ஒரு பெண் புறாவைப் பிடித்துத் தனது கைகூட்டிலிட்டுக்கொண்டு திரிகையில் பெருமழை வந்து இருட்டிக்கொள்ள அப்போது அவ்வேடன் நடுக்கமெடுத்து ஒரு மரத்தின் சார்பில் வருந்திநிற்க, அச்சமயத்தில் அம்மரத்தின் மேலுள்ள ஆண்புறா தனது பெட்டையின் பிரிவையாற்றாது புலம்ப, அவ்வேடனது கைக்கூட்டில் அகப்பட்டிருந்த பெண்புறா அப்புலம்பலைக் கேட்டு வருந்தி 'இதோ நான் இவ்வேடனது கைக்கூட்டில் முற்பிறவியின் தீவினைப்பயனாகச் சிறைப்பட்டுக் கிடக்கிறேன்; இதற்காக நீ வருந்தவேண்டா; நமது இருப்பிடம் வந்து வருந்தி நிற்கிற இவ்வேடனுக்குக் குளிர் முதலாகிய துன்பத்தை நீக்கி உதவிபுரியவேணும்' என்றுகூற, அதுகேட்ட ஆண்புறா அவ்வேடனுக்கு மனப்பூர்வமாக உபசாரஞ் செய்யவிரும்பி, கொள்ளியொன்றை யெடுத்து வந்து சருகுகளின் மேல்வைத்து மூட்டி வேடனைக் குளிர்காயுமாறு சொல்லி, பின்பு

இங்ஙனே கூறுகின்றான் ;—இராவணன் சீதையைக் கவர்ந்து சென்று பலநாள்களாகியும் முன்னமே நம்மிடம் வந்து சேராமல் நாம் எதிரியோடு போர்புரியத் தொடங்குமிச்சமயத்தில் நம்மிடம் வந்து சேருமிவ்விபீடணன் நம்முடன் கலந்தவன்போன்றிருந்து நமது மருமங்களையெல்லா முணர்ந்துகொண்டு நம்மை வஞ்சனையாற் கொல்லுதற்காகத்தான் வந்தானோ வென்று நீங்கள் கருதுவதற்கிடமில்லை. நன்மதி கூறித் தமையனை எப்படியாவது திருத்தலாமென்று இத்தனை நாளும் பலபடி முயன்று பார்த்தும் அது பலியாமற்போனதுமன்றி அவ்விராவணன் தன்னைக் கடிந்து கூறுதலுஞ் செய்யவே, இவன் தான் வாழவெண்ணிய நம்மிடம் வந்து சேர்ந்தனன் ; இவனை நான் ஒருவிதத்திலும் கைவிடகில்லேன் ; அடைக்கலம் புகுந்த விவனை அங்கீகரியாது கைவிட்டால் தான் நமக்கு நல்வாழ்வும் வெற்றியு முண்டாகுமென்று தேறினாலும் அஃது எனக்கு உடன்பாடன்று ; சரணாகதனை விவனை அங்கீகரிப்பதனால் நமக்குத் தோல்வியே உண்டாவதானாலும், அதற்குமேல் மரணமே நேர்வதானாலும் அதுவே எனக்கு உடன்பாடாகும். நமக்கு வெகு நாளைப் பழக்கமில்லாமல் இப்பொழுதுதான் புதியவனாக வந்தானென்றாவது மஹாபாதகன் என்றாவது குறை கூறி இவனை அங்கீகரியாது தள்ளிவிடுதலை ஒருகாலும் நான் மனத்திற் கொள்ளேன் ; இவன் எப்படிப்பட்டவனாயிருந்தாலும் சரணமென்ற சொல்லைச் சொன்னதுவே காரணமாக, நெடுநாளைப் பழக்கமுள்ள நண்பன்போல் விரும்பத்தக்கவனே யாவன். அங்கீகரிக்கப்பட்ட அவன் ஒருகால் நமக்குத் தீங்கிழைத்தானானாலும் அதனால், சரணாகதனுக்கு அபயமளித்தோ மென்னும் புகழ் நம்மை விட்டகலாது ; ஆகவே, இவனை நான் கைவிடகில்லேன் ; அன்றியும், எங்கள் குலத்து இதிகாசமொன்று கேண்மின் ; சிபி சக்கரவர்த்தி அரசாளுகையில் அவனது மேன்மைக் குணத்தைப் பரிசோதிக்கும்பொருட்டு இந்திரன் பெரும் பருந்தாகவும் யமன் சிறு புறாவாகவும் வடிவமெடுத்து அப்புறாவைப் பருந்து துரத்திவர, அது சக்ரவர்த்தியைச் சரணமடைய, அன்னான் அதற்கு அபயமளிக்க, பின்னே வந்த பருந்து 'என் இரையைக் கொடுத்திடு' என்று கேட்க மன்னவன் 'அடைக்கலம் புகுந்தவரை ஆதரியாது விடுதல் அதிபாதகமாதலால் இதையன்றி எதைக் கேட்டாலுங் கொடுப்பேன்' என்ன, பருந்து 'இந்தப் புறாவின் எடையளவு தசையை உன் உடம்பினின்று அரிந்துகொடு' என்ன, வேந்தன் சம்மதித்து உடனே தனது உடம்பிலுள்ள உறுப்புக்களையெல்லாம் ஒவ்வொன்றாக அறுத்து வைத்தும் எடை ஒவ்வாதது கண்டு தானே தராசுத்தட்டிலேறி எடையை நிறைக்க, உடனே அத்தேவர்கள் ப்ரத்யக்ஷமாகிச் சக்ரவர்த்தியை மிகக் கொண்டாடி அவனது உடம்பு முன்போல நிறைவுறும்படி வரமளித்துப் போயினரென்று கேட்டிருந்தோமன்றோ ; அன்ன பெருமை வாய்ந்த சக்ரவர்த்தியின் வமிசத்திற் பிறந்த யான் இப்போது உங்களாலோசனையைக் கேட்டுச் சரணாகதனைக் கைவிடுதல் தகுதியன்று ; இவனைச் சேர்த்துக் கொள்வதனால் எவ்விதமான அனர்த்தம் விளைவதாயினும் அஃதெனக்குப் புகழாகுமே யன்றிப் பழியாகாதாதலால் இவனை நான் கைவிடமாட்டேன் ; ஒரு காட்டில் வேடனொருவன் ஒரு பெண் புறாவைப் பிடித்துத் தனது கைக்கூட்டிலிட்டுக்கொண்டு திரிகையில் பெருமழை வந்து இருட்டிக்கொள்ள அப்போது அவ்வேடன் நடுக்கமெடுத்து ஒரு மரத்தின் சார்பில் வருந்திநிற்க, அச்சமயத்தில் அம்மரத்தின் மேலுள்ள ஆண்புறா தனது பெட்டையின் பிரிவையாற்றாது புலம்ப, அவ்வேடனது கைக்கூட்டில் அகப்பட்டிருந்த பெண்புறா அப்புலம்பலைக் கேட்டு வருந்தி 'இதோ நான் இவ்வேடனது கைக்கூட்டில் முற்பிறவியின் தீவினைப்பயனாகச் சிறைப்பட்டுக் கிடக்கிறேன்; இதற்காக நீ வருந்தவேண்டா; நமது இருப்பிடம் வந்து வருந்தி நிற்கிற இவ்வேடனுக்குக் குளிர் முதலாகிய துன்பத்தை நீக்கி உதவிபுரியவேணும்' என்று கூற, அதுகேட்ட ஆண்புறா அவ்வேடனுக்கு மனப்பூர்வமாக உபசாரஞ் செய்யவிரும்பி, கொள்ளியொன்றை யெடுத்து வந்து சருகுகளின் மேல்வைத்து மூட்டி வேடனைக் குளிர்காயுமாறு சொல்லி, பின்பு

அவன் பசியால் வருந்துவதைப் பார்த்து 'அப்பா! நான் பறவையாயிருப்பதனால் உன்பசிக்கு ஏற்ற பொருள் என்னிடமில்லையே; துன்பத்திற்கு இடமாய் எதற்கும் உதவாமலிருக்கிற இவ்வுடலைக் கொண்டு உன் ஆத்மாவைத் திருப்திசெய்து கொள்' என்று சொல்லிக்கொண்டே மூண்டெரிகிற நெருப்பில் ஆனந்தத்தோடு விழுந்து அவனுக்கு உணவாகி முடிந்ததென்கிற கபோதோபாக்கியானம் சுருதிகளி லுள்ளது. ஓர் அற்பப் பிராணியாகிய புறாவே தன்னிடம் வந்தடைந்தது காரண மாக, தன்மனைவியைக் கவர்ந்ததையும் பாராட்டாமல் தன்னையும் கவரக்கூடிய வேடனொருவனுக்கு [illegible] உயிரையுங் கொடுத்து உதவிசெய்ததென்றால், பெரியவரென்று பேர்வைத்துக்கொண்டிருக்கிற நாம், நமக்கு யாதொரு தீங்கு நினைக்காமல் நம்மைச் சரணமென்றடைந்துள்ள இவனை 'ஒருகால் நமது உயிர்க்கு ஏதேனும் தீங்கு நேருமோ?'' என்று அஞ்சிக் காவாது கைவிடுதல் தகுதியோ? தகாது; இவனை எவ்வகையிலும் கைவிடமாட்டேன்; ஒருவன் செய்த நன்றியை மறந்த பாவியும், உண்மைப் பரம் பொருளான கடவுளை இல்லையென்று சாதிக் கின்ற நாஸ்திகனும் போலவே சரணமடைந்தாரைப் பாதுகாவாதவனும் நரகத்தில் நிச்சயமும் வீழ்ந்து வருந்துவானென்பது நூற்கொள்கையாயிருக்க நானோ இவனைக் கைவிடுவேன்? ஒருகாலும் கைவிடமாட்டேன்; இராவணாதியரைக் கொல்வதாக நான் தேவர்கட்கு அபயமளித்தது இராவணன் சீதையைக் கவர்வானென்பதை முன்னமே அறிந்தன்று; நம்மைச் சரண மடைந்தாரைக் காப்பதே நமது கடமை என்ற கருத்தினாலேயே யாகும்; தண்டகாரணிய வாசிகளான 'முனிவர்களிடத்து "அடைக்கலம் புகுந்தவர்களைப் பாதுகாப்பதே எனது கடமை'' என்று அப்போது சொல்லிவிட்டு இப்போது அதற்குமாறாக அபயம் வேண்டிவந்த இவ்விபீஷணனைக் கைவிடுதல் எனக்கு உற்றதாகுமோ? ஆகாது; ஆதலால் இவனை நான் கைவிடில் லேன்' என்றிங்ஙனே பலவாறுகூறி ஸ்ரீராமன் தனது விரதவுறுதியை வெளி [illegible]

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர் எழுதிய**

**சக்ரவர்த்திதிருமகனறுபத்துநான்கு முற்றிற்று**



— இராமபிரான் வாழ்க —

அவன் பசியால் வருந்துவதைப் பார்த்து 'அப்பா! நான் பறவையாயிருப்பதனால்
உன்பசிக்கு ஏற்ற பொருள் என்னிடமில்லையே; துன்பத்திற்கு இடமாய் எதற்கும்
உதவாமலிருக்கிற இவ்வுடலைக் கொண்டு உன் ஆத்மாவைத் திருப்திசெய்து கொள்'
என்று சொல்லிக்கொண்டே மூண்டெரிகிற நெருப்பில் ஆனந்தத்தோடு விழுந்து
அவனுக்கு உணவாகி முடிந்த தென்கிற கபோதோபாக்கியானம் சுருதிகளி
லுள்ளது. ஓர் அற்பப் பிராணியாகிய புறாவே தன்னிடம் வந்தடைந்தது காரண
மாக, தன்மனைவியைக் கவர்ந்ததையும் பாராட்டாமல் தன்னையும் கவரக்கூடிய
வேடனொருவனுக்கு உடலையு முயிரையுங் கொடுத்து உதவிசெய்த தென்றால்,
பேரறிவாளரென்று பேர்வைத்துக்கொண்டிருக்கிற நாம், நமக்கு யாதொரு தீங்கு
பிழைக்காமல் நம்மைச் சரணமென்றடைந்துள்ள விவனை 'ஒருகால் நமது உயிர்க்கு
ஏதேனும் தீங்கு நேருமோ?'' என்று அஞ்சிக் காவாது கைவிடுதல் தகுதியோ?
தகாது; இவனை எவ்வகையினும் கைவிடமாட்டேன்; ஒருவன் செய்த நன்றியை
மறந்த பாவியும், உண்மைப் பரம் பொருளான கடவுளை இல்லையென்று சாதிக்
கின்ற நாஸ்திகனும் போலவே சரணமடைந்தாரைப் பாதுகாவாதவனும் நரகத்தில்
நிச்சயம் விழ்ந்து வருந்துவானென்பது நூற்கொள்கையாயிருக்க நானோ இவனைக்
கைவிடுவேன்? ஒருகாலும் கைவிடமாட்டேன்; இராவணாதியரைக் கொல்வதாக
நான் தேவர்கட்கு அபயமளித்தது இராவணன் சீதையைக் கவர்வா னென்பதை
முன்னமே அறிந்தன்று; நம்மைச் சரண மடைந்தாரைக் காப்பதே நமது கடமை
என்ற கருத்தினாலேயே யாகும்; 'தண்டகாரணிய வாசிகளான 'முனிவர்களிடத்து
"அடைக்கலம் புகுந்தவர்களைப் பாதுகாப்பதே எனது கடமை'' என்று அப்போது
சொல்லிவிட்டு இப்போது அதற்குமாறாக அபயம் வேண்டிவந்த இவ்விபீஷணனைக்
கைவிடுதல் எனக்கு உற்றதாகுமோ? ஆகாது; ஆதலால் இவனை நான் கைவிடகில்
லேன்; என்றிங்ஙனே பலவாறுகூறி ஸ்ரீராமன் தனது விரதவுறுதியை வெளி
யிட்டமைகாண்க.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர் எழுதிய**

**சக்ரவர்த்திதிருமகனறுபத்துநான்கு முற்றிற்று**

— இராமபிரான் வாழ்க —

# அறுபத்து நான்கு நன்மொழிகள்.

[பல சுவைகள் பொருந்திய உணவுப்பொருள்களை யுண்ணக் குதூஹலிக்கின்றோம்; அதுபோல பல ரஸங்கள் மலிந்த விலக்ஷண விஷயங்களை யநுபவிக்க விரும்புமவர்களுக்கு விருந்தளிப்பதாமிது.]

——(o)——

(ஸ்ரீ காஞ்சீ ப்ர. அண்ணங்கராசார்யர்)

1. எம்பெருமான், சேதனர்களையும் அசேதநங்களையும் சரீரமாகக் கொண்டவன்; அவன் பெருமையில் தலைநின்றவன். நாம் சிறுமையில் தலைநிற்பவர்கள். நாம் அப்பெருமானை வழிபடுவதற்கு உரியோம். அப்பெருமான் திறத்து நாம் செய்யக்கூடிய வழிபாடுகள் பலவகைப் பட்டிருக்கும். அவற்றைப் பற்றின விரிவுகள் சாஸ்திரங்களில் விசதமாகக் காணக் கிடைக்கும். அந்த வழிபாடுகளெல்லாம் ஒரு புறமிருக்கட்டும். அவாப்த ஸமஸ்த காமனான பெருமானுக்கு நாம் செய்யும் வழிபாடுகள் என்ன பயனைத் தரப்போகின்றன! நம்முடைய ஸ்வரூபம் நிறம் பெறுதற்காகவே நாம் வழிபடுவோமத்தனை.

2. எம்பெருமான் அல்பஸந்துஷ்டன்; அநாதிகாலமாக அவனோடு எதிரம்பு கோக்கின்ற (அதாவது—விவாதப்படுகின்ற) கொடிய ஸம்ஸாரிகள் நாம். அந்த நிலைமையில் நின்றும் நாம் நீங்கி அவனோடு நமக்குண்டான ஒழிக்க வொழியாத உறவுகளைத் தெரிந்து கொண்டோமாயின் இதுவே பரம பூஜையாகும். ஸம்பந்த ஜ்ஞான மாத்திரமே நமக்கு மேலான நன்மைகளுக்கு எல்லை. அஃது உண்டானால் நாம் எம்பெருமானோடு விவாதப்படமாட்டோம். விவாதம் தொலைந்ததென்னில் எவ்விதப் பணிவிடைகளும் நாம் செய்தோமாவோம். விவாதமற்றிருப்பதே பெரிய பணிவிடையாம்.

3. மநுஸ்ம்ருதியில் (8—92) "यमो वैवस्वतो राजा यस्तवैष हृदि स्थितः । तेन चेदविवादस्ते मा गङ्गां मा कुरून् गमः = யமோ வைவஸ்வதோ ராஜா யஸ் தவைஷ ஹ்ருதி ஸ்தித:, தேநசேத் அவிவாதஸ் தே மா கங்காம் மா குரூந் கம:." என்று சொல்லிற்று. இதன் கருத்தாவது:— ஸர்வநியாமகனையும் தண்டதரனையும் (அல்லது ஸூர்ய வம்சத்திற் பிறந்தவனையும், அல்லது ஆதித்ய மண்டல வாஸியாயும்) எல்லார்க்கும் இனியனுமிருக்கிற எம்பெருமான் உனது உள்ளத்திலுள்ளேயுளன்; அவனோடு விவாதம் நெடுநாளாக அநுவர்த்தித்துக் கொண்டு வருகிறது; அதாவது, இந்த ஆத்மவஸ்துவை அவன் தன்னுடையதாக அபிமானித்தால் அதற்கு இசையாதே 'இது என்னுடையதுதான்' என்று செருக்கியிருப்பதுவே விவாதம். இது தொலைந் தொழியுமாகில், கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் நீராடப் போகவும் வேண்டா; குரு க்ஷேத்ரம் முதலிய புண்ய க்ஷேத்ரங்களை ஸேவிக்கப் போகவும் வேண்டா. அஹங்கார மமகாரங்களை உள்ளே வைத்துக்கொண்டு பிராயச்சித்தம் பண்ணுகை

ஸ்ரீரஸ்து

# அறுபத்துநான்கு நன்மொழிகள்.

[பல சுவைகள் பொருந்திய உணவுப் பொருள்களை யுண்ணக் குதூஹலிக்கின்றோம்; அதுபோல பல ரஸங்கள் மலிந்த விலக்ஷண விஷயங்களை யநுபவிக்க விரும்புமவர்களுக்கு விருந்தளிப்பதாமிது.]

——— (o) ———

(ஸ்ரீ காஞ்சீ ப்ர. அண்ணங்கராசார்யர்)

1. எம்பெருமான், சேதனர்களையும் அசேதநங்களையும் சரீரமாகக் கொண்டவன்; அவன் பெருமையில் தலைநின்றவன், நாம் சிறுமையில் தலைநிற்பவர்கள். நாம் அப்பெருமானை வழிபடுவதற்கு உரியோம். அப்பெருமான் திறத்து நாம் செய்யக்கூடிய வழிபாடுகள் பலவகைப் பட்டிருக்கும். அவற்றைப் பற்றின விரிவுகள் சாஸ்திரங்களில் விசதமாகக் காணக் கிடைக்கும். அந்த வழிபாடுகளெல்லாம் ஒரு புறமிருக்கட்டும். அவாப்த ஸமஸ்த காமனான பெருமானுக்கு நாம் செய்யும் வழிபாடுகள் என்ன பயனைத் தரப்போகின்றன! நம்முடைய ஸ்வரூபம் நிறம் பெறுதற்காகவே நாம் வழிபடுவோமத்தனை.

2. எம்பெருமான் அல்பஸந்துஷ்டன்; அநாதிகாலமாக அவனோடு எதிரம்பு கோக்கின்ற (அதாவது—விவாதப்படுகின்ற) கொடிய ஸம்ஸாரிகள் நாம். அந்த நிலைமையில் நின்றும் நாம் நீங்கி அவனோடு நமக்குண்டான ஒழிக்க வொழியாத உறவுகளைத் தெரிந்து கொண்டோமாயின் இதுவே பரம பூஜையாகும். ஸம்பந்த ஜ்ஞான மாத்திரமே நமக்கு மேலான நன்மைகளுக்கு எல்லை. அஃது உண்டானால் நாம் எம்பெருமானோடு விவாதப்படமாட்டோம். விவாதம் தொலைந்ததென்னில் எவ்விதப் பணிவிடைகளும் நாம் செய்தோமாவோம். விவாதமற்றிருப்பதே பெரிய பணிவிடையாம்.

3. மநுஸ்ம்ருதியில் (8—92) "यमो वैवस्वतो राजा यस्तवैष हृदि स्थितः। तेन चेदविवादस्ते मा गङ्गां मा कुरून् गमः = யமோ வைவஸ்வதோ ராஜா யஸ் தவைஷ ஹ்ருதி ஸ்தித:, தேநசேத் அவிவாதஸ் தே மா கங்காம் மா குரூந் கம:." என்று சொல்லிற்று. இதன் கருத்தாவது:— ஸர்வநியாமகனும் தண்டதரனும் (அல்லது ஸூர்ய வம்சத்திற் பிறந்தவனும், அல்லது ஆதித்ய மண்டல வாஸியாயும்) எல்லார்க்கும் இனியனுமிருக்கிற எம்பெருமான் உனது உள்ளத்தினுள்ளேயுளன்; அவனோடு விவாதம் நெடுநாளாக அநுவர்த்தித்துக் கொண்டு வருகிறது; அதாவது, இந்த ஆத்மவஸ்துவை அவன் தன்னுடையதாக அபிமானித்தால் அதற்கு இசையாதே 'இது என்னுடையதுதான்' என்று செருக்கியிருப்பதுவே விவாதம். இது தொலைந் தொழியுமாகில், கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் குடைந்தாடப் போகவும் வேண்டா; குரு க்ஷேத்ரம் முதலிய புண்ய க்ஷேத்ரங்களை ஸேவிக்கப் போகவும் வேண்டா. அஹங்காரமமகாரங்களை உள்ளே வைத்துக்கொண்டு பிராயச்சித்தம் பண்ணுகை

[illegible] மாத்திரத்திலுள்ளே அசுத்த வஸ்துவை யிட்டுவைத்து மேலே பளபளவென்று [illegible] செய்வது போலாதலால், உள்ளே எம்பெருமானோடு விவாதத்தை வைத்துக் கொண்டே க்ஷேத்ர தீர்த்த யாத்திரை செய்வது எதற்கு? அந்த விவாதம் தொலைந்துவிடின் இருந்த விடத்திலேயே பரம சுத்தியுண்டாதலால் ஒரு க்ஷேத்திரத்தையும் ஒரு தீர்த்தத்தையும் தேடிப் போகவேண்டா என்றபடி. ஆகவே விவாதம் நீங்குமளவே வேண்டுவது.

4. கூரத்தாழ்வானும் வரதராஜ ஸ்தவத்தில் "त्वद्दास्यमस्य हि मम स्वरसप्रसक्तं तच्चोरय-त्ययमहं किल चस्खल प्राक्। त्वं मामकीन इति मामभिमन्यसे स हस्तीश संशमय नस्तमिमं विवादम् — த்வத்தாஸ்யமஸ்ய ஹி மம ஸ்வரஸப்ரஸக்தம் தச்சோரயத்யயமஹம் கில சஸ்கல ப்ராக், த்வம் மாமகீந இதி மாம் அபிமந்யஸேஸ்ம ஹஸ்தீச ஸம்சமய நஸ் தமிமம் விவாதம்" என்ற ச்லோகத்தினால் இதனைத் தெரிவித்தருளினார். இந்த ச்லோகத்தின் கருத்தாவது, பேரு ளாளனே! மஹாபாபியான எனக்கு உன் பக்கலில் அடிமையா யிருப்பதன்றோ உற்றது. அப்படியிருந்தும் நான் நெடுகாளாக ஆத்மாபஹாரக் கள்வனாகி அடிமைச்சுவடுதன்னை இழந்து போனேன்; அதுவே வாய்த்துக் கொள்கின்ற காதலனாகிய நீ 'இவன் நம்முடையவன்' என்று கொண்டு ஸ்வயமேவ அபிமானித்தருளினாய். ஆனாலும் உனக்கும் நமக்கும் அடிக்கடி யொரு விவாதம் நடந்து போருவதுண்டு; 'நான் உன்னுடையவனல்லேன் காண்' என்று ஸம்ஸாரி யான நான் அகன்று போவதும், 'நீ என்னுடையவன் காண்' என்று நீ பின் தொடர்வதுமான அந்த விவாதம் இனியொருகாலும் தலையெடுக்க வொண்ணாதபடி ஸமூலசாந்தி செய்தருள வேணுமென்பதாம்.

5. பட்டருளிச்செய்த "த்வம் மேஹம் மே குதஸ் தத் ததபி குத் இதம் வேத மூல ப்ரமாணாத்" என்கிற திருமஞ்சனக் கவியான ச்லோகரத்னம் நம்முடைய விரிவான வியாக்யானத்தோடு அநுபவிக்கத் தக்கது. ஸர்வேச்வரனுக்கும் சேதநனுக்கு முண்டான விவாதத்தின் ப்ரகாரம் அதில் வெகு அற்புதமாக நிரூபிக்கப்பட்டிருப்பது காண்க.

6. ஸம்பந்தவுணர்ச்சி உறைப்பாக உண்டாவதுதான் விவாதம் தொலைந்தபடியாகக் கருதத்தக்கது. ஸம்பந்தஜ்ஞான முண்டான வளவிலேயே நாம் வாழ்ச்சி பெற்றோமாவோம். இதுபற்றி ஈடு முப்பத்தாறாயிரப் படியில் (1—2—7) ஒரு இதிஹாஸம் காட்டப்பட்டுள்ளது. அதனைத் தெளிய உரைப்போமிங்கு:- ஒரு நகரத்தில் ஒரு வணிகர் தலைவனிருந்தனன். அவன் வெளிநாடுகளில் நீண்டகாலம் வஸித்து வர்த்தகஞ் செய்து விசேஷமாகப் பொருள் படைக்க விரும்பி த்வீபாந்தர யாத்திரை செய்ய முயன்றான். அந்தருணம் அவனது மனைவி கருவுற் றிருந்தாள். அப்போதே அவன் புறப்பட்டு த்வீபாந்தரம் சென்று சேர்ந்தனன். பிறகு இரண் டொரு மாதம் கடந்தபின் அவனது மனைவி ஊரில் ஒரு புதல்வனை யீன்றாள். அம்மகன் சீரொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாகச் சுக்கில பக்ஷச் சந்திரன் போன்று வளர்ந்து வருகின்றான். த்வீபாந்தரத்தில் வர்த்தகஞ் செய்து வாழ்ந்து கொண்டிருக்கும் அவ்வணிகன் மகப்பேறு உண்டான செய்தியை யறிந்து பெருமகிழ்ச்சி கொண்டு விரைவிலேயே ஊர்வந்து சேர்தற்குப் பெருமுயற்சி செய்தும், மேன்மேலும் வர்த்தகத்தில் மீதூர்ந்துசென்ற மிலைப்பினால் கடுக மீண்டுவர முடியாமல் நெடுங்காலம் அங்கேயே தங்கிவிட்டான். மகன் தானும் உரிய வயது வாய்ந்தவளவில் தனது குலத் தொழிலாகிய வர்த்தகத்தையே தானும் கைப்பற்றி வந்தான். [illegible] முதிர்ச்சியளவிலும் இவனது தகப்பன் த்வீபாந்தரத்திலேயே வாழ்கிறான். பின்பொரு

யாவது ஒரு பாத்திரத்தினுள்ளே அசுத்த வஸ்துவை யிட்டுவைத்து மேலே பளபளவென்று சுத்தி செய்வது போலாதலால், உள்ளே எம்பெருமானோடு விவாதத்தை வைத்துக் கொண்டே க்ஷேத்ர தீர்த்த யாத்திரை செய்வது எதற்கு? அந்த விவாதம் தொலைந்துவிடின் இருந்த விடத்திலேயே பரம சுத்தியுண்டாதலால் ஒரு க்ஷேத்திரத்தையும் ஒரு தீர்த்தத்தையும் தேடிப் போகவேண்டா என்றபடி. ஆகவே விவாதம் நீங்குமளவே வேண்டுவது.

4. கூரத்தாழ்வானும் வரதராஜ ஸ்தவத்தில் "त्वद्दास्यमस्य हि मम स्वरसप्रसक्तं तच्चोरयं स्वयमहं किल चस्खल प्राक्। त्वं मामकीन इति मामभिमन्यसे स हस्तीश संशमय नस्तमिमं विवादम् — த்வத்தாஸ்யமஸ்ய ஹி மம ஸ்வரஸப்ரஸக்தம் தச்சோரயந்ஸ்வயமஹம் கில சஸ்கல ப்ராக், த்வம் மாமகீந இதி மாம் அபிமந்யஸேஸ்ம ஹஸ்தீச ஸம்சமய நஸ் தமிமம் விவாதம்" என்ற ச்லோகத்தினால் இதனைத் தெரிவித்தருளினார். இந்த ச்லோகத்தின் கருத்தாவது, பேரருளாளனே! மஹாபாபியான எனக்கு உன் பக்கலில் அடிமையா யிருப்பதன்றோ உற்றது. அப்படியிருந்தும் நான் நெடுநாளாக ஆத்மாபஹாரக் கள்வனாகி அடிமைச்சுவடுதன்னை இழந்து போந்தேன். நடுவே வந்துய்யக் கொள்கின்ற நாதனாகிய நீ 'இவன் நம்முடையவன்' என்று கொண்டு ஸ்வயமேவ அபிமானித்தருளினாய். ஆனாலும் உனக்கும் நமக்கும் அடிக்கடியொரு விவாதம் நடந்து போருவதுண்டு; 'நான் உன்னுடையவனல்லேன் காண்' என்று ஸம்ஸாரியான நான் அகன்று போவதும், 'நீ என்னுடையவன் காண்' என்று நீ பின் தொடர்வதுமான அந்த விவாதம் இனியொருகாலும் தலையெடுக்க வொண்ணாதபடி ஸமூலசாந்தி செய்தருள வேணுமென்பதாம்.

5. பட்டருளிச்செய்த "த்வம் மேஹம் மே குதஸ் தத் ததபி குத இதம் வேத மூல ப்ரமாணாத்" என்கிற திருமஞ்சனக் கவியான ச்லோகத்தின் நம்முடைய விரிவான வியாக்கியானத்தோடு அநுபவிக்கத் தக்கது. ஸர்வேச்வரனுக்கும் சேதநனுக்கு முண்டான விவாதத்தின் ப்ரகாரம் அதில் வெகு அற்புதமாக நிரூபிக்கப்பட்டிருப்பது காண்க.

6. ஸம்பந்தவுணர்ச்சி உறைப்பாக உண்டாவதுதான் விவாதம் தொலைந்தபடியாகக் கருதத்தக்கது. ஸம்பந்தஜ்ஞான முண்டான வளவிலேயே நாம் வாழ்ச்சி பெற்றோமாவோம். இதுபற்றி ஈடு முப்பத்தாறாயிரப் படியில் (1—2—7) ஒரு இதிஹாஸம் காட்டப்பட்டுள்ளது. அதனைத் தெளிய உரைப்போமிங்கு:- ஒரு நகரத்தில் ஒரு வணிகர் தலைவனிருந்தனன். அவன் வெளிநாடுகளில் நீண்டகாலம் வஸித்து வர்த்தகஞ் செய்து விசேஷமாகப் பொருள் படைக்க விரும்பி த்வீபாந்தர யாத்திரை செய்ய முயன்றான். அத்தருணம் அவனது மனைவி கருவுற்றிருந்தாள். அப்போதே அவன் புறப்பட்டு த்வீபாந்தரம் சென்று சேர்ந்தனன். பிறகு இரண்டொரு மாதம் கடந்தபின் அவனது மனைவி ஊரில் ஒரு புதல்வனை யின்றாள். அம்மகன் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாகச் சுக்கில பக்ஷச் சந்திரன் போன்று வளர்ந்து வருகின்றான். த்வீபாந்தரத்தில் வர்த்தகஞ் செய்து வாழ்ந்து கொண்டிருக்கும் அவ்வணிகன் மகப்பேறு உண்டான செய்தியை யறிந்து பெருமகிழ்ச்சி கொண்டு விரைவிலேயே ஊர்வந்து சேர்தற்குப் பெருமுயற்சி செய்தும், மேன்மேலும் வர்த்தகத்தில் மீதூர்ந்துசென்ற மிலைப்பினால் கடுக மீண்டுவர முடியாமல் நெடுங்காலம் அங்கேயே தங்கிவிட்டான். மகன் தானும் உரிய வயது வாய்ந்தவளவில் தனது குலத் தொழிலாகிய வர்த்தகத்தையே தானும் கைப்பற்றி வந்தான். வயது முதிர்க்க வளவிலும் இவனது தகப்பன் த்வீபாந்தரத்திலேயே வாழ்கிறான். பின்பொரு

நாள் அவ்வணிகன்மகன் தொழில் முறையில் வெளிநாட்டிற்குச் சென்றிருந்து பல சரக்குக்களுடன் கடல் வழியாய் ஊர்த்துறைமுகம் வந்து சேர்ந்தான். அவன் வந்த கப்பலிலேயே அவனது தந்தையும் த்வீபாந்தரத்திலிருந்து பல மூட்டைகளுடன் ஊர்வந்தனன். அந்தக் கப்பல் துறைமுகஞ் சேர்ந்தவுடனே குமாரன் தனது மூட்டைகளை இறக்குவதாக உத்தேசித்த ஓர் இடத்திலேயே தகப்பனும் தான் கொணர்ந்த மூட்டைகளை இறக்க நினைத்தனன். இவ்விருவரும் தங்களுக்குள்ள பித்ரு புத்ரபாவ ஸம்பந்தத்தை அறியாதவர்கள்; 'இவன் நம் மகன்' என்று தந்தை அறியான். 'இவர் நம் தகப்பனார்' என்று மகனுமறியான். உண்மையில் இவர்கட்கு இவ்வுறவுமுறை தெரிவதற்கு ப்ரஸக்தியில்லையே. இக்குமாரன் பிறப்பதற்கு முன்னமே யன்றோ அவ்வணிகன் வெளிநாடு சென்றிட்டான். ஆகவே 'இவன் வெளிநாட்டு வர்த்தகன்' என்று மகன் பாவிக்கலானான். தந்தையும் மகனை அங்ஙனமே பாவித்தான். இறக்குமதி யிடத்தைப்பற்றிய விவாதம் இவர்கட்கு முற்றிவிட்டது. 'இவ்விடத்தை நானே முதலில் உத்தேசித்தேன்' என்று இருவரும் நெடும்போதாக வாதாடுகின்றனர். அப்போது இவ்விருவருடையவும் உறவுமுறையை உணர்ந்திருப்பானொரு கிழவன் கண்டு 'அந்தோ! உறவு அறியாமல் இது என்ன விவாதம்?' என வருந்தி 'இவன் உன் தந்தை, நீ அவனது மகன்; ஆயிருக்க எதற்கு இங்ஙனே வீண் விவாதம்?' என்றறிவித்தனன். அதன் பிறகு அங்கு என்ன நடந்திருக்கவேணும்! ஸம்பந்தவுணர்ச்சி யுண்டானவுடனே இழந்த நாளைக்குச் சோகித்து, இருவர் சரக்கும் ஒரு சரக்காய், தந்தை ரக்ஷகனாய், மகன் ரக்ஷ்யனாய் விவாதம் தொலைந்து பரம ரஸம் தலைப்பற்றி வாய்க்கொண்டவாறு பேச்சுக்கு நிலமாமோ?

7. அதுபோலவே நாமும் நிருபாதிக பிதாவாகிய ஸ்ரீமந் நாராயணனுடைய "உன்றன்னோடுறவேல் நமக்கு இங்கொழிக்க வொழியாது" என்னும்படியான உறவின் உறுதியை உற்று நோக்கி ஈச்வரன் "த்வம் மே" [நீ எனக்கு அடியன்] என்றால், "அஹம் மே" (நான் எனக்கே உரியேன்) என்னும்படியான விவாதத்தை விட்டொழித்தால் "பொன்னுலகாளீரோ புவனி முழுதாளீரோ" என்னும்படியாக உபய விபூதியும் நாம் தாராளமாக அநுபவிக்கும் செல்வமாகுமன்றோ.

8. மாலைப் பொழுதில் விஹாரார்த்தமாக வெளியே சென்ற ராஜகுமாரன் அழகியதொரு தோட்டத்தைக் கண்டு உள்ளே புகுந்து திளைக்க நினைத்தும் கட்டுங்காவலுமாயிருந்தது கண்டு அஞ்சி நிற்குமளவில் 'இஃது உன் தகப்பனாருடைய தோட்டங்காண்' என்று ஒரு பெரியார் தெரிவிக்கவே, பிறகு தேங்காதே புக்கிருந்து திளைக்கலாயிற்று என்றவொரு கதையு[illegible]ங் காட்டுவர்கள்.

9. எம்பெருமானுக்கும் நமக்குமுள்ள ஸம்பந்தம் ஒன்றன்று, இரண்டன்று; ஒன்பது வகையான ஸம்பந்தங்கள் திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்திலிருந்து கிடைக்கின்றன. அத்திருமந்திரம் நமக்கு மங்கலஸூத்ரம் போன்றது என்று ஆசார்யர்கள் அருளிச்செய்கிறார்கள். உலகில் ஒரு கன்னிகையின் கழுத்தில் தாலி ஏறினவாறே தம்பதிகளுக்கு பர்த்ரு பார்யாஸம்பந்தம் என்ற ஒரு உறவு ஏற்பட்டதாகும். திருமந்திரமாகிற மங்கள ஸூத்ரம் நமது கழுத்தில் ஏறினவாறே ஒரு உறவு அல்ல; ஒன்பது உறவுகள் ஏற்பட்டனவாகும்.

10. எங்ஙனே யென்னில்; அதில் முதல் பதம் ப்ரணவம். அது அகாரமென்றும் உகாரமென்றும் மகாரமென்றும் [மூன்றக்ஷரமான] மூன்று பதங்கொண்டது. முதற்பதமான அகாரத்தில் மூன்று உறவுகள் தோன்றும். 1. பிதா புத்ரபாவம், 2. ரக்ஷ்ய ரக்ஷகபாவம்,

3. சேஷ சேஷிபாவம். அந்த ஒரு அக்ஷரத்தில் இந்த மூன்று உறவுகள் எங்ஙனே தோன்றுகின்றன வென்னில்; அகாரத்திற்கு ப்ரக்ருதிசக்தியென்றும் (धातुशक्ति) தாது சக்தி யென்றும் இரண்டுவகையான சக்திகளுண்டு. "अकारो वै सर्वा वाक्— அகாரோ வை ஸர்வா வாக்." என்றும் "அகர முதலவெழுத்தெல்லாம்" என்றும் சொல்லுகிறபடியே அகாரமானது எல்லா எழுத்துக்களுக்கும் முதன்மையாயிருந்துகொண்டு; தனக்கு அர்த்தமான எம்பெருமான் உலகுக்கெல்லாம் முதல்வன் என்று காட்டுதலாகிறவிது ப்ராக்ருதி சக்தியெனப்படும். "ஆதிபகவன் முதற்றே யுலகு" என்ற குறளும் இதனையே காட்டிற்றாகும். ஆகவே, அகாரத்தில் ப்ராக்ருதி சக்தியினால் ஏற்பட்ட வுறவு கார்ய காரண பாவம் (அல்லது) ஜந்ய ஜநகபாவம், (அல்லது) பிதா புத்ர பாவம்.

11. அந்த அகாரமானது अव-रक्षणे. (அவ-ரக்ஷணே) என்கிற தாதுவிலிருந்து தேறினதாகையாலே எம்பெருமான் ஸர்வரக்ஷகன் என்றதாகும். இதனால் (ரக்ஷ்ய ரக்ஷக பாவமாகிற வுறவு தேறிற்றாகிறது. இதுதான் தாது ஶக்திஸித்தமெனப்படும்.

12. இந்த அகாரத்தின்மேல் வியாகரண ஶாஸ்த்ரப்படி (வைதிக ப்ரக்ரியையில்) சதுர்த்தி விபக்தியிருந்து லோபித்ததாகக் கொள்ளப்படுகிறது. இல்லாவிடில் அங்வயிக்கவே மாட்டாது. அந்த விபக்தியானது 'அவனுக்கு ஶேஷப்பட்டது' என்கிற பொருளைக் காட்டுதலால் (3) சேஷசேஷி பாவம் என்கிற வுறவு தேறிற்று.

13. இனி அடுத்துள்ள உகாரமானது அவதாரணப் பொருள்தாய் எம்பெருமானுக்கே சேஷப்பட்டது என்று காட்டுதலால் "கண்டாரிகழ்வனவே காதலன் தான் செய்திடினும், கொண்டானை யல்லாலறியாக் குலமகள் போல்" (பெருமாள் திருமொழி) என்கிறபடியே (4) பதிபத்நீபாவமாகிற உறவு தேறுகின்றது.

14. அதற்கு அடுத்துள்ள மகாரமானது "मन-ज्ञाने" "மந-ஜ்ஞாநே" "मन अवबोधने" "மந அவபோதநே" என்கிற தாதுக்களிலிருந்து நிஷ்பந்நமாகி ஜ்ஞாதாவான ஆத்மாவைச் சொல்லுதலால் (5) ஜ்ஞாத்ருஜ்ஞேய பாவமென்கிற உறவு தேறிற்று. எம்பெருமான் அறியப்படுமவன், ஆத்மா அறிகின்றவன் என்றவாறு "ஒண்தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்கிற பொய்கையார் பாசுரம் இங்கு அநுஸந்தேயம்.

15. அதற்குப்பிறகு உள்ள நம: பதத்தினால், தன்னை ரக்ஷித்துக்கொள்வதில் தனக்கு எவ்விதமான உரிமையும் இல்லையென்று காட்டுகிறமுகத்தினால் ஆத்மவர்க்கமெல்லாம் எம்பெருமானுடைய ஸொத்து என்று காட்டுதலால் (6) ஸ்வஸ்வாமி பாவம் என்கிற வுறவு தேறிற்று. ஸொத்தை ரக்ஷிக்குமுரிமை ஸ்வாமிக்கேயன்றோவுள்ளது.

16. இனி நாராயண பதத்தை யெடுத்துக்கொண்டால் இதற்குத் தத்புருஷ ஸமாஸமென்றும் பஹுவ்ரீஹி ஸமாஸமென்றும் இருவகையான வ்யுத்பத்தி மார்க்கங்கள் கொள்ளப்பட்டு, நாரபதார்த்தமான ஸகல வஸ்துக்களுக்கும் எம்பெருமான் ஆதாரமென்றும், அந்த ஸகல வஸ்துக்களையும் தான் ஆதாரமாகவுடையவனென்றும் தெரிந்துகொள்ளுகிறோம். ஆதலால் நாராணாம் அயநம் என்கிற தத்புருஷனால் (7) ஆதாராதேயபாவமென்கிற உறவு தேறுகின்றது. நாரா: அயநம் யஸ்ய ஸ: என்கிற பஹுவ்ரீஹியால் (8) சரீரசரீரி பாவமென்கிறவுறவு தேறுகின்றது. நாரங்கள் பகவானிடத்திலே யிருக்கின்றன என்பது தத்புருஷ ஸித்தம். நாரங்களிலே பகவானுள்ளான் என்பது பஹுவ்ரீஹி ஸித்தம். அவற்றிலே இவனிருப்பதாவது அவற்றை

3. சேஷ சேஷிபாவம். அந்த ஒரு அக்ஷரத்தில் இந்த மூன்று உறவுகள் எங்ஙனே தோன்றுகின்றன வென்னில்; அகாரத்திற்கு ப்ரக்ருதிசக்தியென்றும் (धातुशक्ति) தாது சக்தி யென்றும் இரண்டுவகையான சக்திகளுண்டு. "अकारो वै सर्वा वाक्-- அகாரோ வை ஸர்வா வாக்." என்றும் "அகர முதலவெழுத்தெல்லாம்" என்றும் சொல்லுகிறபடியே அகாரமானது எல்லா எழுத்துக்களுக்கும் முதன்மையாயிருந்துகொண்டு, தனக்கு அர்த்தமான எம்பெருமான் உலகுக்கெல்லாம் முதல்வன் என்று காட்டுதலாகிறவிது ப்ரக்ருதி சக்தியெனப்படும். "ஆதிபகவன் முதற்றே யுலகு" என்ற குறளும் இதனையே காட்டிற்றாகும். ஆகவே, அகாரத்தில் ப்ரக்ருதி சக்தியினால் ஏற்பட்ட வுறவு கார்ய காரண பாவம் (அல்லது) ஜந்ய ஜநகபாவம், (அல்லது) பிதா புத்ர பாவம்.

11. அந்த அகாரமானது अव-रक्षणे. (அவ-ரக்ஷணே) என்கிற தாதுவிலிருந்து தேறினதாகையாலே எம்பெருமான் ஸர்வரக்ஷகன் என்றதாகும். இதனால் (ரக்ஷ்ய ரக்ஷக பாவமாகிற வுறவு தேறிற்றாகிறது. இதுதான் தாது ஶக்திவிஷித்தமெனப்படும்.

12. இந்த அகாரத்தின்மேல் வியாகரண ஶாஸ்த்ரப்படி (வைதிக ப்ரக்ரியையில்) சதுர்த்தி விபக்தியிருந்து லோபித்ததாகக் கொள்ளப்படுகிறது. இல்லாவிடில் அந்வயிக்கவே மாட்டாது. அந்த விபக்தியானது 'அவனுக்கு ஶேஷப்பட்டது' என்கிற பொருளைக் காட்டுதலால் (3) சேஷ சேஷி பாவம் என்கிற வுறவு தேறிற்று.

13. இனி அடுத்துள்ள உகாரமானது அவதாரணப் பொருள்தாய் எம்பெருமானுக்கே சேஷப்பட்டது என்று காட்டுதலால் "கண்டாரிகழ்வனவே காதலன் தான் செய்திடினும், கொண்டானை யல்லாலறியாக் குலமகள் போல்" (பெருமாள் திருமொழி) என்கிற படியே (4) பதிபத்நீபாவமாகிற உறவு தேறுகின்றது.

14. அதற்கு அடுத்துள்ள மகாரமானது "मन-ज्ञाने" "மந-ஜ்ஞாநே" "मन अवबोधने" "மந அவபோதநே" என்கிற தாதுக்களிலிருந்து நிஷ்பந்நமாகி ஜ்ஞாதாவான ஆத்மாவைச் சொல்லுதலால் (5) ஜ்ஞாத்ருஜ்ஞேய பாவமென்கிற உறவு தேறிற்று. எம்பெருமான் அறியப்படுமவன், ஆத்மா அறிகின்றவன் என்றவாறு "ஒண்தாமரையாள் கேள்வனொருவனையே நோக்கு முணர்வு" என்கிற பொய்கையார் பாசுரம் இங்கு அநுஸந்தேயம்.

15. அதற்குப்பிறகு உள்ள நம: பதத்தினால், தன்னை ரக்ஷித்துக்கொள்வதில் தனக்கு எவ்விதமான உரிமையும் இல்லையென்று காட்டுகிறமுகத்தினால் ஆத்மவர்க்கமெல்லாம் எம்பெருமானுடைய ஸொத்து என்று காட்டுதலால் (6) ஸ்வஸ்வாமி பாவம் என்கிற வுறவு தேறிற்று. ஸொத்தை ரக்ஷிக்குமுரிமை ஸ்வாமிக்கேயன்றோவுள்ளது.

16. இனி நாராயண பதத்தை யெடுத்துக்கொண்டால் இதற்குத் தத்புருஷ ஸமாஸமென்றும் பஹுவ்ரீஹி ஸமாஸமென்றும் இருவகையான வ்யுத்பத்தி மார்க்கங்கள் கொள்ளப்பட்டு, நாரபதார்த்தமான ஸகல வஸ்துக்களுக்கும் எம்பெருமான் ஆதாரமென்றும், அந்த ஸகல வஸ்துக்களையும் தான் ஆதாரமாகவுடையவனென்றும் தெரிந்துகொள்ளுகிறோம். ஆதலால் நாராணாம் அயநம் என்கிற தத்புருஷனால் (7) ஆதாராதேயபாவமென்கிற உறவு தேறுகின்றது. நாரா: அயநம் யஸ்ய ஸ: என்கிற பஹுவ்ரீஹியால் (8) சரீரசரீரி பாவமென்கிறவுறவு தேறுகின்றது. நாரங்கள் பகவானிடத்திலே யிருக்கின்றன என்பது தத்புருஷ வித்தம். நாரங்களிலே பகவானுள்ளான் என்பது பஹுவ்ரீஹி விதம். அவற்றிலே இவனிருப்பதாவது அவற்றை

உடலாகக்கொண்டு தான் அவற்றுக்கு உயிராக இருப்பதேயாதலால் இதனைச் சரீராத்மபாவம் விளக்கித்ததென்னக் குறையில்லை.

17. இனி அந்த நாராயண பதத்தின் மீதுள்ள சதுர்த்தீவிபக்தியானது, காகாக்ஷிந்யாயத்தாலே தன்னிடத்திலும் அந்வயிக்கின்ற நமஸ்ஸினால் பரிஷ்காரம் பெற்று, நாராயணனுக்குச் செய்யப்படுகின்ற கைங்கரியத்தின் போகமும் அவனுக்கேயன்றி இந்த ஜீவனுக்கில்லையென்று நிஷ்கர்ஷித்துக் காட்டுதலால் (9) போக்த்ரு போக்யபாவம் என்கிற உறவைத் தெரிவிக்கின்றது. எம்பெருமான் போக்தா, ஜீவாத்மா போக்யன் என்றவாறு. ஜீவாத்மாவை போக்தாவாகவும் எம்பெருமானை போக்யனாகவுங் கொள்வதும் ஒருபுடையுண்டெனினும் திருமந்திரத்தில் வடிக்கட்டின பொருள் முந்துறப் பணித்ததேயாகும். ஆகத் திருமந்திரத்தினால் நவவித ஸம்பந்தங்கள் தெரியவந்தன. இவற்றைச் சிந்தையில் பதிய வைத்துக் கொள்வதற்காக "पिता च रक्षकश्शेषी भर्ता ज्ञेयो रमापतिः । स्वाम्याधारो ममात्मा च भोक्ता चाद्यमनूदितः —பிதா ச ரக்ஷகச் சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி:. ஸ்வாம்யாதாரோ மமாத்மா ச போக்தா சாத்யமநூதித:." என்கிற ச்லோகத்தைப் பெரியார் காட்டியுள்ளார்.

18. இந்த நவவித ஸம்பந்தங்களையும் நாம் உணரப்பெறுவிடினும் "அவன் சேஷி, நாம் சேஷபூதர்" என்று இந்நிலையேனும் அறிய ப்ராப்தம். இவ்வளவையே எம்பெருமான் எதிர்பார்த்திராநின்றான்.

19. ஸகல சாஸ்த்ரங்களாலும் நாம் அறியவேண்டிய பொருள்கள் ஐந்தேயாகும். அவையே அர்த்த பஞ்சகம் என்று ஸம்ப்ரஸித்தமாக வழங்கப்பெறுகின்றன. (1) பரமாத்மாவின் ஸ்வரூபம். (2) ஜீவாத்மாவின் ஸ்வரூபம். (3) உபாயஸ்வரூபம். (4) விரோதிஸ்வரூபம். (5) புருஷார்த்த ஸ்வரூபம் என்கிற இவையே அர்த்தபஞ்சகமாம். இவற்றுள் ஜீவாத்ம ஸ்வரூபமே ஸ்வஸ்வரூபமெனப்படுகின்றது. நம்முடைய பூருவாசார்யர்களுக்குப் பரமநிதியாக விளங்கின இதிஹாஸச்ரேஷ்டமான ஸ்ரீ ராமாயணத்தில் தேறுகின்ற முறையைக் கொண்டு ஸ்வஸ்வரூபத்தை நாம் தெளிந்துகொள்ளும் வழி காட்டுகிறோம்.

20. சேஷத்வமும் பாரதந்த்ரியமும் ஸ்வஸ்வரூபம் என்பது உலகமறிந்ததேயாகும். இவை யிரண்டும் எம்பெருமான் விஷயத்திலும் பாகவதர்களின் விஷயத்திலும் ப்ராப்தம். இவற்றை அநுஷ்டான முகத்தால் காட்டுவதற்காகவே இளையபெருமாளும் பரதாழ்வானும் சத்ருக்நாழ்வானும் அவதரித்தார்கள்.

21. சேஷத்வமாவது என்ன? பாரதந்திரியமாவது என்ன? என்பதை முந்துற முன்னம் தெரிந்துகொள்ளவேணும். "கட்டிப் பொன்போலே சேஷத்வம்; பணிப்பொன் போலே பாரதந்த்ரியம்" என்பர் நம் பூருவாசாரியர்கள். இஷ்டமானபடி உபயோகப்படுவதற்கு உரித்தாயிருக்கும் நிலைமையே கட்டிப்பொன். உபயோகப்படுவதற்கு உரித்தாயிருக்குமளவேயல்லாமல் உபயோகப்பட்டுத் தீருகின்ற நிலைமையே பணிப்பொன். வேலை செய்யப்பட்டு ஒரு பூஷணமாக முடிந்த பொன் பணிப்பொன் எனப்படும். ஆக, யதேஷ்டமாக விநியோகப்படுவதற்கு ஸ்வரூப யோக்யதாமாத்ரம் சேஷத்வமென்றும் அவ்வளவேயன்றிக்கே யதேஷ்டமாக விநியோகப்பட்டுத் தீர்தமை பாரதந்த்ரியமென்றும் சொல்லிற்றாயிற்று.

22. இளையபெருமாளுடையது சேஷத்வம்; பரதாழ்வானுடையது பாரதந்த்ரியம். எங்ஙனேயென்னில்; பெருமாள் பித்ருவாக்ய பரிபாலநார்த்தமாகக் காட்டுக்குப் புறப்படு

விருக்கையில் இளையபெருமாள் தம்மையும் உடனழைத்துக்கொண்டு செல்லும்படி வேண்டினர். அப்போது பெருமாள் "காட்டுக்கு விதியாகச் செல்லவேண்டிய நிர்ப்பந்தம் எனக்குப்போலே உனக்கு இல்லாமையாலே நீ திருவயோத்தியிலேயே இருந்து தாய் தந்தையர்க்குப் பணிவிடை செய்துகொண்டு வாழ்வாயாக" என்று நியமித்தருளச் செய்தேயும் இளையபெருமாள் அதற்கு உடன்படாது நிர்ப்பந்தித்துப் பின்தொடர்ந்து அடிமைசெய்தார்.

23. பரதாழ்வானோவென்னில்; சித்ரகூட பரிஸரத்திலே பெருமாள் பக்கலிலே விடைகொண்டு திருவயோத்திக்கு மீண்டெழுந்தருளி மகுடாபிஷேகம் கொண்டருளவேணும் என்று பலவாறு பிரார்த்தித்தவிடத்திலும் பெருமாள் அதற்கு இசையாதொழியவே பரதாழ்வானுடைய பாரதந்த்ரிய ஸ்வரூபத்தை நோக்கி அவர் திருவுள்ளமானபடியே நடந்து கொள்வதுதான் நமக்கு உற்றது என்று துணிந்து "அதிரோஹார்ய! பாதாப்யாம் பாதுகே ஹேமபூஷிதே, ஏதே ஹி ஸர்வலோகஸ்ய யோகக்ஷேமம் விதாஸ்யத:." என்று பிரார்த்தித்து ஸ்ரீராம பாதுகைகளை மஹாப்ரஸாதமாகப் பெற்றுக்கொண்டு "ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:" என்று மகிழ்ந்து மீண்டனன்.

24. பெருமாள் பிராட்டியைச் சிறைமீட்டுத் திருவயோத்திக்கு மீண்டெழுந்தருளி மகுடாபிஷேகம் கொண்டருளும்போது, யுவராஜபட்டாபிஷேகம் செய்துகொள்ளும்படி இளைய பெருமாளை நிர்ப்பந்தித்தும் அவர் இசைந்திலர்; பரதாழ்வானை நியமித்தவாறே அவர் இசைந்து போந்தார். ஆக இப்படிப்பட்ட தன்மைகளை நோக்குமிடத்தில் இளையபெருமாளுடைய படி வெறும் சேஷத்வமென்றும், பரதாழ்வானுடைய படி அதனிலும் சிறந்த பாரதந்த்ரியமென்றும் அறியப்படும்.

25. சேஷத்வத்திற்காட்டில் பாரதந்த்ரியமே மிகச் சிறந்ததென்றும் அதுவே திருமந்த்ரத்தில் வடிக்கட்டினதாகத் தேறின ஸ்வரூப யாதாத்மியமென்றும் கூறினோம். சாஸ்த்ரங்களில் ஆஜ்ஞாகைங்கர்யமென்றும் அநுஜ்ஞாகைங்கர்யமென்றும் இருவகைப் பணிவிடைகள் கூறப்படும். ஸ்வாமி நியமித்த கட்டளையை மறுக்காமல் அப்படியே நிறைவேற்றுவது ஆஜ்ஞா கைங்கர்யமென்று சொல்லப்படும். எந்த கைங்கர்யத்தைச் செய்யாமற் போனால் ப்ரத்யவாயம் புகுமோ, அது ஆஜ்ஞாகைங்கர்யமென்று கொள்க. இனி அநுஜ்ஞாகைங்கர்யமாவது, 'செய்யாவிடில் ப்ரத்யவாயம்' என்பதில்லாமல், சேஷியின் முகவிகாஸத்தை விரும்பி அத்தாணிச் சேவகமாகச் செய்யும் கைங்கர்யமாகும். ஆகவே இளையபெருமாள் அநுஜ்ஞாகைங்கர்ய நிஷ்டரென்றும், பரதாழ்வான் ஆஜ்ஞாகைங்கர்ய நிஷ்டரென்றும் கொள்ளத்தகுவர்.

26. எம்பெருமானளவில் அடிமைப்பட்டிருப்பதிலுங் காட்டில் அவனடியார்களான பாகவதர்கள் பக்கலில் அடிமைப்பட்டிருப்பதானது இன்னமும் மிகச்சிறந்தது. இது சத்ருக்நாழ்வான் பக்கலிலே காணத்தகும். பாகவதோத்தமனை பரதாழ்வானை யல்லது அறியாதேயிருப்பர் சத்ருக்நாழ்வான். ஸ்ரீ வால்மீகிமுனிவர் இவரைப்பற்றிக் கூறுமிடத்தில் "சத்ருக்நோ நித்யசத்ருக்ந:." என்கிறார். நம்முடன் கூடப்பிறந்து நம்மைவிட்டு அகலாதிருக்கும் இந்திரியங்களே நித்ய சத்ருவெனப்படும். சத்ருக்நாழ்வான் தமது இந்திரியங்களைப் பட்டிமேய வொண்ணாதபடி அடக்கி ஆள்பவர் என்ற கருத்துப்பட நித்யசத்ருக்ந: எனப்பட்டது. அவருடைய கருத்தின்படி இந்திரியங்களுக்குப் பட்டிமேய்தலாவது என்னென்னில்; தமக்கு உத்தேச்யமான பரதாழ்வானிடத்தை விட்டுப் பிறிதோரிடத்தில் செல்லுதல் பட்டிமேய்தலாம். ஆகவே அவர்பகவத்விஷயத்தையும் விஷயாந்தரத்தோடொக்க நினைத்திருப்பர். எப்போதாவது

ஸ்ரீராமபிரானையும் அவர் ஸேவிக்க நேருமாகில் தமக்கு உத்தேச்யமாக ஸேவிக்கமாட்டார், தமக்கு உத்தேச்யரான பாதாழ்வானுக்கு உத்தேச்யர் என்று இவ்வழியாலே ஸேவிப்பாராம்.

27. இப்படிப்பட்ட நிஷ்டை விளைவது மிகவும் அரிது. விஷயாந்தரங்கள் தோஷங்களே வடிவெடுத்திருக்கிறபடியால் அந்த தோஷங்களை ஆராய்ந்து பார்த்து அவற்றை விட்டுத் தொலைக்கமுடியும். பகவத்விஷயம் அங்ஙனன்றிக்கே * ஸமஸ்த கல்யாணகுண அம்ருதோததியாக இருப்பதனாலும் * பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம் * என்கிறபடியே ஆண்களையும் பெண்ணுடையுடுக்கச் செய்யுமதாக இருப்பதனாலும் அதைவிடுவது மிகவும் அரிது. ஆனால் குணக்கடலான பகவத் விஷயத்தை விடவேண்டுவானென்னென்னில்; விடவேணுமென்று சொல்லுகிறதன்று. உலகத்தில் ஒருவஸ்துவிலே ஒருவனுக்கு ப்ரேமமுண்டானால் தத்ஸம்பந்த ஸம்பந்த ஸம்பந்திகள் பக்கலிலும் அந்த ப்ரேமம் பெருகிச் செல்லும்படியைக் காணாநின்றோம். மனைவியினிடத்திலே ஆராத காதல்கொண்ட வொருவன் அந்த மனைவிக்கு யார் யார் உற்றாராயினரோ அவர்கள் பக்கலிலும் ப்ரேமம் பெருகிச் செல்லப் பெறுகின்றானன்றோ. இஃது என்? என்று யாரை யார் கேட்பது? ப்ரேமத்தின் ப்ரவாஹஸரணி அப்படிப்பட்டது என்றே சொல்லவேணும். அதுபோல பகவானிடத்தில் வைக்கின்ற அன்பு அதிசயித்ததாக இருக்குமாகில் "அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கடியாரடியார் தம், அடியாரடியோங்களே!" என்றும் "த்வத்ப்ருத்யப்ருத்ய பரிசாரக ப்ருத்ய ப்ருத்ய ப்ருத்யஸ்ய ப்ருத்ய இதி மாம் ஸ்மர லோகநாத!" என்றும் சொல்லுகிறபடியே பகவத் பக்த ஸந்தானங்களிலே அது பெருகிச் சென்று திரும். அந்த ப்ரேமத்தை ஒருமடை செய்யவேண்டியதான முறைமையில் பகவத் விஷயத்தை உபேக்ஷிக்கும்படியான நிலைமையும் வந்துவிடும்.

28. எம்பெருமான் தானே அஷ்டவித பக்திகளை அருளிச்செய்யுமிடத்தில் * மத்பக்தஜநவாத்ஸல்யம் * என்று, முந்துற முன்னம் பாகவதர்கள் பக்கலில் ப்ரேமம் கனத்திருப்பதுவே தன் பக்கலில் பக்தி முதிர்ந்தபடி என்று காட்டுகிறான். ஆகவே பகவச்சேஷத்வத்திற் காட்டிலும் பாகவத சேஷத்வமே சீரியதென்றும், அது, ராமாயண புருஷர்களில் சத்ருக்னாழ்வானுடைய அநுஷ்டானத்தாலே ஸித்தமென்றும் தேறிற்று.

29. ஸ்ரீராமபிரான் பரமபுருஷனா யிருக்கச்செய்தேயும் மனிசர்களிலே ஒருவனாய் வந்து பிறந்து தன்னுடைய நியாமகத்வம் முதலியவற்றை மறைத்துக்கொண்டு நியாம்யர்களிலே தானும் ஒருவனாக ஆசரித்துக் காட்டினபடியாலே அப்பெருமான் தானும் ஸ்வஸ்வரூபத்தை ஒருவாறு காட்டியே யிருக்கின்றான். பெரியோர் சொல்லிற்றைச் சிறியோர் கேட்பது என்று ஒரு ஸாமாந்ய தர்மமுண்டு; இதுவும் ஆத்மஸ்வரூபத்தில் ஒன்றாகும். இதனை ஸ்ரீராமபிரான் ஸ்வாநுஷ்டானமுகத்தாலே காட்டியுள்ளான். பெருமாள் செய்த செயல்களைக் கூறுமிடங்களில் வான்மீகி பகவான் * விச்வாமித்ரஸ்ய ஶாஸநாத் * என்றும் * அகஸ்த்யவசநாத் * என்றும், * பிதுர்வசநநிர்த்தேஶாத் * என்றும் * பாரத்வாஜஸ்ய ஶாஸநாத் * என்றும் இப்படியே பெரியோர்களுடைய நியமனங்களைக் காரணமாகக் கூறி யிருத்தல் காணலாம். பெருமாள் முந்துற முன்னம் தாடகையை வதம் பண்ணினார்; ஸ்திரீவதம் பண்ணலாமா? என்று சிலர் தர்மஹாநி சங்கிப்பதற்கு இடமில்லாதபடி, "விச்வாமித்ர முனிவர் நியமிக்கவே பெரியோருடைய நியமனமென்று பெருமாள் செய்தார்" என்று வான்மீகி முனிவர் விளக்கி வைத்தார். இங்ஙனமே மற்றும் கண்டுகொள்வது. ஆகவே, பெருமாள் அநுட்டித்துக் காட்டினது ஸாமாந்ய தர்மம்; இளையபெருமான் அநுட்டித்துக் காட்டினது அதனிலும் சிறந்த விசேஷதர்மம். பாதாழ்வான்

அநுஷ்டித்துக் காட்டினது அதனினும் மிகச் சிறந்த தருமம். சத்ருக்நாழ்வான் அநுஷ்டித்துக் காட்டினது எல்லாவற்றினும் மிகச் சிறந்த தருமம்.

30. கைங்கர்யத்தில் ஊற்றமுற்றிருப்பதே ஆத்மாவுக்கு மிக முக்கியமாகும். மாநஸிகம், வாசிகம், காயிகம் என்று கைங்கரியம் மூவகைப்படும். இவற்றுள் காயிக கைங்கரியமே மிகவும் சிறப்புப் பெறும். எந்த வஸ்துவிலே நாம் அதிகமான ப்ரேமம் பாராட்டுகின்றோமோ, அந்த வஸ்துவைக்கொண்டு கைங்கரியம் செய்வதன்றோ எம்பெருமானுக்கு உகப்பை விளைக்கும். நாம் நம்முடைய உடலில் எவ்வளவு ப்ரேமம் பாராட்டிவருகின்றோமென்பது ஒவ்வொருவர்க்கும் தெரிந்ததேயாம். பணத்தைக் காட்டிலும் நாம் உடலிலே அதிகமான பற்று வைத்திருக்கிறோம். ராஜஸ்தானத்தில் ஒரு குற்றம் செய்ததற்காகத் தண்டனை விதிக்கப்படும்போது "ஒருநாள் சிறைவாஸம்; அல்லது ஆயிரம்ரூபாய் அபராதம் செலுத்துதல்" என்றால் சரீத்தினுள்ள அன்பினால், அதற்குக் கஷ்டம் தருவதான சிறைவாஸத்தை வெறுத்துப் பணத்தையே செலுத்தப் பார்க்கின்றவர்கள் பணத்தைவிட உடலிலேயே அதிகமான அன்பு பாராட்டியிருக்கிறார்களென்பது எளிதாகத் தெரியவரும். ஆகவே, நாம் பணத்தைக் கொண்டு கைங்கரியம் செய்வதிற் காட்டிலும் மிக விருப்பமான உடலைக்கொண்டு கைங்கரியம் செய்வதே உத்தமமாகும்.

31. இதுவும் இளையபெருமாளுடைய அநுஷ்டானத்தாலே ஸித்தம். இவர் "பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஃ ஸ்வபதச் ச தே." என்று விண்ணப்பம்செய்து அப்படியே ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமைசெய்து ஸ்வரூபம் நிறம்பெற்றார். இதைப்பற்றி ஸ்ரீவசநபூஷணத்தில் அருளிச்செய்யுமிடத்து "பசியாயிருப்பார் அட்டசோறு முண்ணவேணும் அடுகிறசோறு முண்ணவேணும் என்னுமாபோலே காட்டுக்குப் போகிறபோது இளையபெருமாள் பிரியில் தரியாமையை முன்னிட்டு அடிமைசெய்யவேணும் எல்லாவடிமையும் செய்யவேணும் ஏவிக்கொள்ளவும் வேணுமென்றார்; படைவீட்டில் புகுந்தபின்பு காட்டில் தனியிடத்தில் ஸ்வயம்பாகத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே ஒப்பூணுண்ணமாட்டாதே ஒரு திருக்கையாலே திருவெண்கொற்றக் குடையையும் ஒரு திருக்கையாலே திருவெண்சாமரத்தையும் தரித்து அடிமை செய்தார்" என்றருளியுள்ள திவ்யஸூக்திகளும் அவ்விடத்து மணவாளமாமுனிகளின் வியாக்யான ஸ்ரீ ஸூக்திகளும் ஸேவிக்கத்தக்கன.

32. ஸகலஜகத்காரணபூதனாய், ஸர்வலோகரக்ஷகனாய், ஸர்வசேஷியாய், ஸர்வஸ்வாமியாய், ஸர்வாதாரபூதனாய், ஸகலசேதநாசேதந சரீரகனாய், அகிலஹேய ப்ரத்யநீக கல்யாண குணகண நிலயனாய், உபயவிபூதிநாதனாய், லக்ஷ்மீபதியாயிருப்பன் பரமபுருஷன். மேலே குறிக்கப்பட்ட விசேஷணங்களில் ஒவ்வொன்றிலும் உட்புகுந்து தெரிந்துகொள்வதே பரஸ்வரூபஜ்ஞானமாகும். அவ்வளவு விஸ்தாரத்திற்கு இங்கு அவகாசமில்லாமையாலே முக்கியமாகச் சில விஷயங்களை இங்கு நிரூபிக்கிறோம்.

33. எம்பெருமானுடைய ஸ்வரூபம் பரம் வ்யூஹம் விபவம் அந்தர்யாமி அர்ச்சாவதாரம் என்று ஐவகைப்பட்டிருக்கும். நம்மாழ்வார் * விண்மீதிருப்பாய் மலைமேல் நிற்பாய் கடல்சேர்ப்பாய் மண்மீதுழல்வாய் இவற்றுளெங்கும் மறைந்துறைவாய் * என்ற பாசுரத்தினால் இந்த ஐவகைகளையும் நிரூபித்துக்காட்டியருளினார். விண்மீதிருப்பாய் என்றது பரத்வம்; கடல் சேர்ப்பாய் என்றது வியூஹம்; மண்மீதுழல்வாய் என்றது, ஸ்ரீராமக்ருஷ்ணாத்யவதாரரூபமான விபவம்; இவற்றுளெங்கும் மறைந்துறைவாய் என்றது அந்தர்யாமித்வம்; மலைமேல்

நிற்பாய் என்றது திருமலை முதலான திவ்யதேசங்களிலெழுந்தருளியிருக்கும் நிலையாகிய அர்ச்சாவதாரம்.

34 எம்பெருமானைப் பேசப்புகுந்த நம்மாழ்வார் திருவாய்மொழியில் முதலடியிலே * உயர்வற வுயர்நல முடையவன் * என்று ஸகலகல்யாண குணாகரத்வத்தையிட்டு உபக்ரமிக்கையாலும், இதிஹாஸச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணமும் * कोन्वस्मिन् साम्प्रतं लोके गुणवान् कश्च वीर्यवान् ।........मुने वक्ष्याम्यहं बुद्ध्वा तैर्युक्तः श्रूयतां नरः * என்று திருக்கல்யாண குணங்களைக் கொண்டே அவதரித்திருக்கையாலும், மேன்மேலும் * बहवो नृप कल्याणगुणाः पुत्रस्य सन्ति ते * என்றும், * तरुणौ रूपसंपन्नौ सुकुमारौ महाबलौ * என்றும் * धातूनामिव शैलेन्द्रो गुणानामाकरो महान् * என்றும் * विदितस्स हि धर्मज्ञः शरणागतवत्सलः * என்றும் திருக்குணங்களின் ப்ரஸ்தாவமே பெருகிச் செல்லுகையாலும் அப்பெருமானது கடல்போன்ற திருக்குணங்களை ஸதா அநுபவிப்பதே நமக்குப் ப்ராப்தம்.

35. ‘ஈரச்சொற்கள்’ என்றும் ‘செவிக்கினிய செஞ்சொல்’ என்றும் போற்றப்படுகின்ற திவ்யப் பிரபந்தங்கள் வேத வேதாந்த வேதாங்கஸாரமென்று உலகம் கொண்டாடநின்றன. இவை தமிழ்ப் பாஷையிலே அவதரித்திருக்கின்றமையால் வடமொழியில் பரிசயமும் பரிசய யோக்யதையும் இல்லாதவர்கள் மாத்திரமே இவற்றைக்கொண்டு போதுபோக்கவேணுமென்றும், ஸம்ஸ்க்ருத வித்வான்களாகவுள்ளவர்கள் உபநிஷத்துக்கள் முதலானவற்றைக் கொண்டே போதுபோக்க வேணுமென்றும் சிலர் வரம்பிட்டுப் பேசுவர்கள். வடமொழிப் பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்தவரான நம்தேசிகனுடைய திருவுள்ளம் இவ்விஷயத்தில் எப்படிப்பட்டது? என்பதைப்பற்றி ஆராயப்புகுந்து ரஸிகர்களுக்குச் சில விஷயங்களை உணர்த்துகிறோம். இவ்வாசார்யஸார்வபௌமர் தென்மொழியிலும் வடமொழியிலும் ஆழ்வாரைப்பற்றியும் அருளிச்செயல்களைப்பற்றியும் அருளிச்செய்திருக்கின்ற திவ்யஸூக்திகள் பலபல. பாதுகாஸஹஸ்ரமென்கிற ஒரு திவ்ய சாஸ்திரத்தில் ஆழ்வார் விஷயமாக அருளிச்செய்துள்ள ச்லோகரத்நங்களை ஆராய்ந்தாலோ, ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை அநுசந்தித்த வாயினால் மற்றொரு ஸரஸ்வதியைப் பேசவும் கூசவேண்டும்படி, அருளிச்செயல்களின் பெருமை அற்புதமாக அறையப்பட்டுளது. அந்த பாதுகா ஸஹஸ்ரத்திற்கு ஆழ்வார் பெருமையையும் திவ்யப்ரபந்த மஹிமையையும் பேசுவதுதான் ஜீவநாடி.

36. ஆளவந்தார், ஸ்தோத்ர ரத்நத்தில் “மாதா பிதா யுவதய:” என்கிற ச்லோகத்தினால் ஆழ்வாரை இறைஞ்சினார். அங்கு ஸ்தோத்ரபாஷ்யத்தில் தேசிகன் அருளிச்செய்துள்ள அவதாரிகா ஸ்ரீஸூக்திகள் ஆஸ்திகர்களுக்கு அநவரதம் அநுஸந்தேயமாகக் கண்டபாடம் செய்யத்தக்கவை. “ अथ पराशरप्रबन्धादपि वेदान्तरहस्यवैशद्यातिशयहेतुभूतैः सद्यः परमात्मनि चित्तरञ्जकतमैः सर्वोपजीव्यैरुपबृंहणैः मधुरकविप्रभृति संप्रदायपरम्परया नाथमुनेरप्युपकर्तारम्, कालविप्रकर्षेऽपि परमपुरुषसङ्कल्पात् कदाचित् प्रादुर्भूय साक्षादपि सर्वोपनिषत्सारोपदेष्टारम् पराङ्कुशमुनिं - * मातापिताभ्रातेत्याद्युपनिषत्प्रसिद्धभगवत्स्वभावदृष्ट्या प्रणमति मातेति ” ॥ என்பவை அங்கு ஸ்ரீஸூக்திகள். பராசர மஹர்ஷிபணித்த ஸ்ரீவிஷ்ணு புராணத்திற் காட்டிலும் வேதாந்த ரஹஸ்யார்த்தங்களை மிகத் தெளிவாகக் காட்டுகின்றவை ஆழ்வாரருளிச் செயல்கள் — என்பது மேற்குறித்த ஸ்தோத்ர பாஷ்ய ஸ்ரீஸூக்திகளில் செவ்வனே கூறப்பட்டதாம்.

37. யதிராஜ ஸப்ததியில் நம்மாழ்வாரைப்பற்றி ஒரு ச்லோகம் அருளிச்செய்கிறார் காண்மின் :— "यस्य सारस्वतं स्रोतो वकुलामोदवासितम् । श्रुतीनां विश्रमायालं शठारिं तमुपास्महे ॥' என்பதாமது. இதில் பிற்பாதியின் தாற்பரியம் யாதெனில்; ஸம்ஸ்கிருத வேதங்கள் தத்வஹித புருஷார்த்தங்களைத் தெளிய வெளியிடவேணுமென்று மிகவும் சிரமப்பட்டன; ஆனால் சிரமத்திற்குத் தகுதியான பலன் கிடைக்கவில்லை. 'அந்தோ! நமக்கு ச்ரமமே மிக்கதே!' என்று அந்த வேதங்கள் விடாய்த்தனவாம். அந்த நிலைமையில் மகிழ்மாலை மார்பினரான ஆழ்வார் திருவவதரித்து ஈரச்சொற்களாலே வேதங்களுக்கு உத்தேச்யமான பொருள்களைத் தெளிய வெளியிட்டருளினமையால் வேதங்களுக்கு உண்டாயிருந்த விடாய் தொலைந்ததாம் என்பதே. அன்றி, 'பகவத் ஸ்வரூப ரூபகுணவிபூதிகளை ப்ரதிபாதிக்கும் திறத்தில், வேதங்களே! நீங்கள் ஏன் வீணாக ச்ரமப்படுகின்றீர்கள்? அந்தத் தொழிலை நான் வஹிக்கக்கடவேன்; நீங்கள் இளைப்பாறலாம்" என்று சொல்லி ஆழ்வார் திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்வாராயினர் — என்பதும் கருத்தாகும். அதிகம்பீரமான தேசிக திவ்யஸூக்திகளிலே இன்னமும் விசேஷ தாத்பர்யங்களை ஊஹித்து உணரலாம்.



38. தேசிகனுடைய திருவுள்ளத்தில் திவ்யப்ரபந்தங்களின் பெருமை இடைவிடாது குடிகொண்டிருந்ததென்று நன்கு புலப்படுகின்றது. இதிஹாஸ புராணாதிகளைக்கொண்டு உபநிஷத்துக்களின் தாற்பரியத்தை உணர்வதிற் காட்டிலும் ஆழ்வார் திவ்ய ஸூக்திகளைக்கொண்டு அறிவதே மிகச் சிறந்தது என்கிற திருவுள்ளத்தை த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளியில் மிக விரிவாக அருளியுள்ளார். அதில் நான்காவது ச்லோகத்தில்—

"यत्कृत्यं श्रुतीनां मुनिगणविहितैस्सेतिहासैः पुराणैः तत्रासौ तत्त्वसीम्नः शठमथनमुनेः संहिता सार्वभौमी" என்றுள்ளது. வேதங்களுக்கு உபப்ரும்ஹணமாக மஹர்ஷிகள் இயற்றிய இதிஹாஸ புராணங்களைக்கொண்டு நாம் எந்த உபயோகத்தை அடைகின்றோமோ அந்த உபயோகமே திருவாய்மொழியினாலுமுள்ளது; ஆனால் அந்த புராணாதிகள் ராஜஸ தாமஸத்வ ஹேதுக்களாலே தீப்ராஜ்யங்களாகவுமாகின்றன. இங்கு அப்படியில்லை. ஸத்வகுணத்திற்கு எல்லை நிலமான ஆழ்வாராலே அருளிச்செய்யப்பட்டதாகையாலே கேவலம் ஸாத்விகமாயிருக்கின்ற இத் திருவாய்மொழியாகிற த்ராவிட ப்ரஹ்ம ஸம்ஹிதையானது வேதோப ப்ரும்ஹணங்களில் தலைமை பெற்றதாகும்—என்பது மேற்குறித்த ஸ்ரீஸூக்தியின் பொருள்.

39. அம்ருதாஸ்வாதினி யென்னும் ப்ரபந்தத்திலுள்ள — "அந்தமிலாப் பேரின்ப மருந்தவேட்கும் அடியோமை யறிவுடனே யென்றுங்காத்து, முந்தைவினை நிரைவழியி லொழுகா தெம்மை முன்னிலையாந் தேசிகர்தம் முன்னே சேர்த்து, மந்திரமும் மந்திரத்தின் வழியுங்காட்டி வழிப்படுத்தி வானேற்றி யடிமைகொள்ளத் தந்தையென நின்ற தனித் திருமால் தாளில் தலைவைத்தோம் சடகோபனருளினாலே. (28) என்ற ஒரு பாசுரமே போதும்.

40. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் சிறந்த மெய்யடியார்களாகக் கொண்டாடப் படுகின்ற 'பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசையையன் அருள்மாறன் சேரலர்கோன் துய்யபட்ட நாதன் அன்பர்தாள் தூளி நற்பாணன் நன்கலியன்' என்னும் ஆழ்வார்கள் பிறந்து வளர்ந்தகாலம் எது? என்பதைப் பலர் ஆராயப்புகுந்து பல பல வகையாக வரைந்திருக்கின்றார்களென்பது இவ்வுலகில் பிரசித்தமானதே. இவ்வாராய்ச்சி விஷயமாகச் சிலருடைய கட்டுரைகள் அச்சாகி வெளிவந்துள்ளன; வேறு சிலருடைய கட்டுரைகள் அச்சிடப் பெறாது எழுத்தளவிலே நிற்கின்றன. இத்தகைய புத்தகங்களை நாம் பெரும்பாலும் பார்த்திருக்

37. யதிராஜ ஸப்ததியில் நம்மாழ்வாரைப்பற்றி ஒரு ச்லோகம் அருளிச்செய்கிறார் காண்மின்; *"यस्य सारस्वतं स्रोतो वकुलामोदवासितम् । श्रुतीनां विश्रमायालं शठारिं तमुपास्महे ॥' என்பதாமது. இதில் பிற்பாதியின் தாற்பரியம் யாதெனில்; ஸம்ஸ்கிருத வேதங்கள் தத்வஹித புருஷார்த்தங்களைத் தெளிய வெளியிடவேணுமென்று மிகவும் சிரமப்பட்டன; ஆனால் சிரமத்திற்குத் தகுதியான பலன் கிடைக்கவில்லை. 'அந்தோ! நமக்கு ச்ரமமே மிக்கதே!' என்று அந்த வேதங்கள் விடாய்த்தனவாம். அந்த நிலைமையில் மகிழ்மாலை மார்பினரான ஆழ்வார் திருவவதரித்து நாச்சொற்களாலே வேதங்களுக்கு உத்தேச்யமான பொருள்களைத் தெளிய வெளியிட்டருளினமையால் வேதங்களுக்கு உண்டாயிருந்த விடாய் தொலைந்ததாம் என்பதே. அன்றி, 'பகவத் ஸ்வரூப ரூபகுணவிபூதிகளை ப்ரதிபாதிக்கும் திறத்தில், வேதங்களே! நீங்கள் ஏன் வீணாக ச்ரமப்படுகின்றீர்கள்? அந்தத் தொழிலை நான் வஹிக்கக்கடவேன்; நீங்கள் இளைப்பாறலாம்" என்று சொல்லி ஆழ்வார் திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்வாராயினர்—என்பதும் கருத்தாகும். அதிகம்பீரமான தேசிக திவ்யஸூக்திகளிலே இன்னமும் விசேஷ தாத்பர்யங்களை ஊஹித்து உணரலாம்.

38. தேசிகனுடைய திருவுள்ளத்தில் திவ்யப்ரபந்தங்களின் பெருமை இடைவிடாது குடிகொண்டிருந்ததென்று நன்கு புலப்படுகின்றது. இதிஹாஸ புராணாதிகளைக்கொண்டு உபநிஷத்துக்களின் தாற்பரியத்தை உணர்வதிற் காட்டிலும் ஆழ்வார் திவ்ய ஸூக்திகளைக்கொண்டு அறிவதே மிகச் சிறந்தது என்கிற திருவுள்ளத்தை த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் மிக விரிவாக அருளியுள்ளார். அதில் நான்காவது ச்லோகத்தில்—

"यत्तत्कृत्यं श्रुतीनां मुनिगणविहितैस्सेतिहासैः पुराणैः तत्रासौ सत्त्वसीम्नः शठमथनमुनेः संहिता सार्वभौमी" என்றுள்ளது. வேதங்களுக்கு உபப்ரும்ஹணமாக மஹர்ஷிகள் இயற்றிய இதிஹாஸ புராணங்களைக்கொண்டு நாம் எந்த உபயோகத்தை அடைகின்றோமோ அந்த உபயோகமே திருவாய்மொழியினாலுமுள்ளது; ஆனால் அந்த புராணாதிகள் ராஜஸ தாமஸத்வ ஹேதுக்களாலே த்யாஜ்யங்களாகவுமாகின்றன. இங்கு அப்படியில்லை, ஸத்வகுணத்திற்கு எல்லை நிலமான ஆழ்வாராலே அருளிச்செய்யப்பட்டதாகையாலே கேவலம் ஸாத்விகமாயிருக்கின்ற இத்திருவாய்மொழியாகிற த்ராவிட ப்ரஹ்ம ஸம்ஹிதையானது வேதோப ப்ரும்ஹணங்களில் தலைமை பெற்றதாகும்—என்பது மேற்குறித்த ஸ்ரீஸூக்தியின் பொருள்.

39. அம்ருதாஸ்வாதினி யென்னும் ப்ரபந்தத்திலுள்ள — "அந்தமிலாப் பேரின்பமருந்தவேட்கும் அடியோமை யறிவுடனே யென்றுங்காத்து, மூன்றைதவினை நிரைவழி யொழுகாதெம்மை முந்நிலையாத் தேசிகர்தம் முன்னே சேர்த்து, மந்திரமும் மந்திரத்தின் வழியுங்காட்டி வழிப்படுத்தி வானேற்றி யடிமைகொள்ளத் தந்தையென நின்ற தனித் திருமால் தாளில் தலைவைத்தோம் சடகோபனருளினாலே. (28) என்ற ஒரு பாசுரமே போதும்.

40. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் சிறந்த மெய்யடியார்களாகக் கொண்டாடப்படுகின்ற 'பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசையையன் அருள்மாறன் சேரலர்கோன் துய்யபட்ட நாதன் அன்பர்தாள் தூளி நற்பாணன் நன்கலியன்' என்னும் ஆழ்வார்கள் பிறந்து வளர்ந்தகாலம் எது? என்பதைப் பலர் ஆராயப்புகுந்து பல பல வகையாக வரைந்திருக்கின்றார்களென்பது இவ்வுலகில் பிரசித்தமானதே. இவ்வாராய்ச்சி விஷயமாகச் சிலருடைய கட்டுரைகள் அச்சாகி வெளிவந்துள்ளன; வேறு சிலருடைய கட்டுரைகள் அச்சிடப் பெறாது எழுத்தளவிலே நிற்கின்றன. இத்தகைய புத்தகங்களை நாம் பெரும்பாலும் பார்த்திருக்

கின்றோம். ஒவ்வொருவர் எழுதியிருப்பதும் மிக மிக விசித்திரமாகவே யுள்ளது. ஆழ்வார்களினுடைய வரிசைக்கிரமம் பூருவாசிரியர்களால் அநுஸந்திக்கப்பட்டவிதம் மணவாளமாமுனிகளால் உபதேச ரத்தினமாலையில் "ஈதிவர் தோற்றத்தடைவாமிங்கு" என்று காட்டப்பட்டிருக்கின்றது. புதிய ஆராய்ச்சியாளர்கள் இவ்வரிசைக் கிரமத்தையும் மாறுபடக் கூறுகின்றனர். ஆழ்வார்களெல்லார்க்கும் பிந்தியே நம்மாழ்வார் அவதரித்தாரென்றும், மதுரகவிகள் நம்மாழ்வார்க்கும் ஆசாரியரே யல்லது சிஷ்யரல்லர் என்றும், ஸ்ரீ ராமாநுஜரென்கிற உடையவருடைய காலத்திற்குப் பிறகும் சில ஆழ்வார்கள் தோன்றினர் என்றும் இப்புடைகளிலே அவரவர்கள் எழுதிவைத்திருப்பவை எடுத்துக் கழிக்கவும் தகாதவை.

41. சிலர், தாங்கள் மிகவும் பிராமாணிகமாக ஆராய்ச்சி செய்வதாகவும், தகுந்த சான்றுகள் காட்டுவதாகவும் கூறி, கி. பி. நாலைந்து நூற்றாண்டுகட்குப் பிறகே ஆழ்வார்கள் அவதரிக்க ஆரம்பித்தார்களென்றும், இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரத்தைந்நூறு ஆண்டுகட்கு முன் ஒரு ஆழ்வாரும் இருந்ததில்லையென்றும் வரைகின்றார்கள். ஆங்காங்குச் சில சிலாசாசனங்களும் செப்பேடுகளும் மற்றுஞ் சில ஆதாரங்களும் தங்கட்குத் துணைபுரிகின்றனவாகத் தெரிவிக்கின்றார்கள். இருளும் மருளுமே வடிவெடுத்த இவர்களது கட்டுரைகளை நேரிய நெறியிலே களைந்தொழிக்கவேணுமென்று பல பெரியார்கள் அடியேனுக்குப் பலகாலும் தெரிவிப்பதுண்டு. ஆனாலும் இந்த மறுப்புத் துறையிலே இறங்க எனது மனம் இசையவில்லை; ஏனெனின், ஆழ்வார்கள் எக்காலத்தில் அவதரித்தவர்களாயினுமாகுக; பல்லாயிரம் வருடங்கட்கு முற்பட்டவர்கள் என்கிற காரணத்தினாலேயே ஒரு ஏற்றமும், சில நூற்றாண்டுகட்குள்ளாகவே தோன்றியவர்கள் என்கிற காரணத்தினால் ஒரு தாழ்வும் எண்ணுவாரில்லை. "புராணமித்யேவ ந ஸாது ஸர்வம் நசாபி காவ்யம் நவமித்யவத்யம்" என்றார் காளிதாஸ மஹாகவி. உப்புக்கிணறு தொன்று நாலாயிரமாண்டுகட்கு முற்பட்டதெனினும் அதில் தண்ணீரருந்தார்கள்; அமுதக் கிணறு இன்று நேற்றே தோன்றிற்றெனினும் அதனை ஆதரிக்கப் பின்வாங்குவார் ஒருவருமிருக்கவில்லார். விடு பற்றுக்களுக்குக் குற்றமும் நற்றமும் காரணமேயல்லது பழைமையும் புதுமையும் காரணமல்லவென்பது விவேகிகளுக்குத் தெரிவரிதன்று.

42. ஆனால் சிலர் சொல்லக்கூடும்; நூதனமாக அமைக்கப்படுகின்ற ஆலயங்களுக்குப் பெருமையில்லாமையும் புராதனங்களென்று புகலப்படுகின்ற ஆலயங்களுக்கே பெருமையிருப்பதும் காண்கின்றோம்; அதுபோல, திவ்வியப் பிரபந்தங்கட்கும் புராதனமென்கிற காரணத்தினால் பெருமையுண்டாகவேணுமென்று கருதியே சிலர் ஆழ்வார்களின் காலத்தை வெகு பண்டைக்காலமென்று காட்டப் புகுந்தார்கள்—என்று. இந்த வாதமே பெரும்பாலும் நமது செவியில் விழுகின்றது. இதற்கு நாம் கூறும் விடையை நடு நிலைமையிலுள்ளவர்கள் குறிக்கொள்ளவேணும், ஆழ்வார்களுக்கும் அவர்களது திவ்வியப் பிரபந்தங்களுக்கும் பெருமை ஏற்பட்டிராத காலம் யாருடைய புத்திக்காவது புலப்படுகின்றதா? என்று பார்க்கவேணும். வடமொழிப் புலவர்களாக மிக்க பிரசித்தி பெற்றிருந்த ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் ஸ்ரீராமாநுஜர் முதலான பூருவாசாரியர்கள் தாங்கள் உபநிஷத்துக்கள் முதலியவற்றால் போது போக்குவதை விட்டிட்டு திவ்வியப் பிரபந்தங்களையே ஓவாத ஊணாக்கொண்டிருந்தார்களென்பது ஒருவராலும் அபலாபம் செய்ய முடியாத விஷயம். உடையவர் காலம் இற்றைக்குச் சற்று ஏறக்குறைய ஆயிரமாண்டு ஆகிறது. அப்போது எழுந்தருளியிருந்தவரான ஸ்ரீ பட்டர் [கூரத்தாழ்வான் திருக்குமாரர்] தாம் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் முதல் சதகத்தில்,

"பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸ: நிஷேதிவாம்ஸோ தச மாம் தயேரந்" என்றருளியுள்ளார். இதனால், அக்காலத்திலேயே ஆழ்வார்கள் பதின்மர்க்கும் திருவரங்கம் பெரிய கோயிலில் விக்ரஹப் ப்ரதிஷ்டை நடந்து முடிந்திருக்கிறதென்பது ஸ்பஷ்டமாகத் தெரியவருகின்றது. இப்போது ஒவ்வொரு ஆழ்வார்க்கும் தனித்தனி ஆலயம் காணப்படுவதுபோலன்றி அக்காலத்தில் பதின் ஆழ்வார்களும் ஓரிடத்தில் ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருந்தார்களென்பது மேலெடுத்துக்காட்டிய ச்லோகத்தினால் நன்கு விளங்குகின்றது. இந்த ஸந்நிவேசம் ஸ்ரீரங்கத்தில் நாளைக்கும் சந்திரபுஷ்கரிணியருகில் ப்ரத்யக்ஷ ஸித்தம். இதனால், ஆயிரமாண்டுகட்கு முந்தியே ஆழ்வார்கட்கு விக்ரஹ ப்ரதிஷ்டை நடைபெற்றிருக்கின்றமை விளங்கிற்று.

43. இனி ஆழ்வார்களுடைய திவ்யப் பிரபந்தங்களுக்குத் தேவாலயங்களில் பாராயணம் எக்காலத்தில் ஏற்பட்டதென்று பார்ப்போம். கம்பரென்னும் கவிசக்ரவர்த்தியானவர் தாம் இயற்றிய சடகோபரந்தாதியில் "அந்தமிலா மறையாயிரத்தாழ்ந்த வரும்பொருளைச் செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத்தேவர்களும், தந்தம் விழாவுமழகுமென்னும் தமிழார்கவியின் பந்தம் விழாவோழுகுங் குருகூர்வந்த பண்ணவனே." என்று ஒரு பாசுரம் பாடியுள்ளார். ஆழ்வாருளிச்செயல் அவதரியாதிருந்தால் ஸ்ரீ வைஷ்ணவர்களின் கதி என்னாகுமென்றும், ஆலயங்களில் நடைபெறும் உத்ஸவங்களின் கதிதான் என்னாகுமென்றும் உருகிப் பேசுகின்றாரிதில். கம்பர் தாம் கண்கூடாகக் கண்ட விஷயத்தை யன்றோ வரைந்துள்ளார். அக்காலத்து ஸ்ரீ வைஷ்ணவ பிராமணர்கள் ஆழ்வாருளிச் செயல்கொண்டே பெருமை பெற்றிருந்ததும், தேவாலய உத்ஸவங்கள் தமிழ்வேத பாராயணத்தினாலேயே பெருமை பொலிய நின்றதுமாகிய உண்மைகளை ஸ்பஷ்டமாகக் கம்பர் காட்டியிருக்கின்றாராதலால், முற்காலத்திலே ஆழ்வார்களுடைய பெருமை உலகில் பரவிவந்து வந்ததென்பது தமிழுலகில் மறுக்கத்தகாத விஷயமாகும். திவ்யப் பிரபந்தங்கட்குத் தமிழ்வேதமென்னும் சிறப்புப் பெயர் கம்பர் காலத்திலேயே நிகழ்ந்து வந்ததென்றால், அக்கம்பருக்குப் பிற்பட்டவர்களான சில ஸ்ரீ வைஷ்ணவாசாரியர்கள் ஆழ்வார்கட்கும் அருளிச்செயல்கட்கும் ஒரு பெருமையை ஸாதிக்கவேண்டி, புதிய காலத்தைப் பழைய காலமாக்கி யெழுதி வைத்திட்டார்கள் என்று வாதிப்பது சிறிதேனும் பொருத்தமுடைத்தோ?



44. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஸ்ரீமந்நாதமுனிகட்கு முன் ஒரு ஆசாரியரும் சிறப்பெற்று விளங்கினராக நமக்குப் புலப்படவில்லை. நம்மாழ்வார்க்கும் நாதமுனிகட்கும் இடையே வெகுகாலம் சென்றிருக்கின்றதென்பது ஸ்ரீ வைஷ்ணவர்களின் கொள்கை. ஸ்ரீமத் வேதாந்த தேசிகரும் தாம் இயற்றியருளின குருபரம்பராஸாரமென்னும் ரஹஸ்ய நூலில் நாதமுனிகள் நம்மாழ்வாரை யோக தசையிலே ஸாக்ஷாத்கரித்து அருள் பெற்றதாகவே அருளிச்செய்துள்ளார். இதெல்லாம் பொய்யாக எழுதிவைத்தவை என்பது நவீன ஆராய்ச்சியாளர்களின் ஆதாரமற்ற வாதம். திவ்யப் பிரபந்தங்களில் காணும் சில அரசர்களின் செய்திகளைப் பிடித்துக்கொண்டு, சாஸனங்களின் உதவியையுங் கொண்டு தங்களுடைய ஆராய்ச்சியை ஆதாரமுடையதாகச் செய்யப் பார்க்கின்றனர், புதிய ஆராய்ச்சியாளர்கள். ஆதியந்த மற்றதாகப் பெரும்பாலோரால் இசையப்பட்டுள்ள வடமொழி வேதத்திலும் காண்கின்ற பல கதைகளைப் பற்றிக்கொண்டால் அந்த வேதமும் கி. பி. இத்தனையாவது நூற்றாண்டில் தோன்றியது என்று வாதிக்க இடமேற்படும் போலும். 'நமக்குத் தந்தை தாயர் இன்னார்' என்பதை ருஜுவான ப்ரமாணத்தினால் திண்ணமாகக் கண்டறிந்து நிஷ்கர்ஷிக்கமாட்டாதவர்கள் பலவகைகளாலும்

"பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸ: நிக்ஷேதிவாம்ஸோ ந்ச மாம் தயேரந்" என்றருளியுள்ளார். இதனால், அக்காலத்திலேயே ஆழ்வார்கள் பதின்மர்க்கும் திருவரங்கம் பெரிய கோயிலில் விக்ரஹப் பிரதிஷ்டை நடந்து முடிந்திருக்கிறதென்பது ஸ்பஷ்டமாகத் தெரியவருகின்றது. இப்போது ஒவ்வொரு ஆழ்வார்க்கும் தனித்தனி ஆலயம் காணப்படுவதுபோலன்றி அக்காலத்தில் பதின் ஆழ்வார்களும் ஓரிடத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தார்களென்பது மேலெடுத்துக்காட்டிய சுலோகத்தினால் நன்கு விளங்குகின்றது. இந்த ஸந்நிவேசம் ஸ்ரீரங்கத்தில் நாளைக்கும் சந்திரபுஷ்கரிணியருகில் ப்ரத்யக்ஷ ஸித்தம். இதனால், ஆயிரமாண்டுகட்கு முந்தியே ஆழ்வார்கட்கு விக்ரஹ ப்ரதிஷ்டை நடைபெற்றிருக்கின்றமை விளங்கிற்று.

43. இனி ஆழ்வார்களுடைய திவ்வியப் பிரபந்தங்களுக்குத் தேவாலயங்களில் பாராயணம் எக்காலத்தில் ஏற்பட்டதென்று பார்ப்போம். கம்பரென்னும் கவிசக்ரவர்த்தியானவர் தாம் இயற்றிய சடகோபரந்தாதியில் "அந்தமிலா மறையாயிரத்தாழ்ந்த வரும்பொருளைச் செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத்தேவர்களும், தந்தம் விழாவுமழதுமேன்னும் தமிழார்கவியின் பந்தம் விழாவொழுகுங் குருகூர்வந்த பண்ணவனே." என்று ஒரு பாசுரம் பாடியுள்ளார். ஆழ்வாரருளிச்செயல் அவதரியாதிருந்தால் ஸ்ரீ வைஷ்ணவர்களின் கதி என்னாகுமென்றும், ஆலயங்களில் நடைபெறும் உத்ஸவங்களின் கதிதான் என்னாகுமென்றும் உருகிப் பேசுகின்றுரிதில். கம்பர் தாம் கண்கூடாகக் கண்ட விஷயத்தை யன்றோ வரைந்துள்ளார். அக்காலத்து ஸ்ரீவைஷ்ணவ பிராமணர்கள் ஆழ்வாருளிச் செயல்கொண்டே பெருமை பெற்றிருந்ததும், தேவாலய உத்ஸவங்கள் தமிழ்வேத பாராயணத்தினாலேயே பெருமை பொலிய நின்றதுமாகிய உண்மைகளை நிஷ்பக்ஷபாதமாகக் கம்பர் காட்டியிருக்கின்றாராதலால், முற்காலத்திலே ஆழ்வார்களுடைய பெருமை உலகிற் பொலிந்து வந்ததென்பது தமிழுலகில் மறுக்கத்தகாத விஷயமாகும். திவ்வியப் பிரபந்தங்கட்குத் தமிழ்வேதமென்னும் சிறப்புப் பெயர் கம்பர் காலத்திலேயே நிகழ்ந்து வந்ததென்றால், அக்கம்பருக்குப் பிற்பட்டவர்களான சில ஸ்ரீவைஷ்ணவாசாரியர்கள் ஆழ்வார்கட்கும் அருளிச்செயல்கட்கும் ஒரு பெருமையை ஸாதிக்கவேண்டி, புதிய காலத்தைப் பழைய காலமாக்கி யெழுதி வைத்திட்டார்கள் என்று வாதிப்பது சிறிதேனும் பொருத்தமுடைத்தோ?

44. ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஸ்ரீமந்நாதமுனிகட்கு முன் ஒரு ஆசாரியரும் சிறப்பெற்று விளங்கினாராக நமக்குப் புலப்படவில்லை. நம்மாழ்வார்க்கும் நாதமுனிகட்கும் இடையே வெகுகாலம் சென்றிருக்கின்றதென்பது ஸ்ரீ வைஷ்ணவர்களின் கொள்கை. ஸ்ரீமத் வேதாந்த தேசிகரும் தாம் இயற்றியருளின குருபரம்பராஸாரமென்னும் ரஹஸ்ய நூலில் நாதமுனிகள் நம்மாழ்வாரை யோக தசையிலே ஸாக்ஷாத்கரித்து அருள் பெற்றதாகவே அருளிச்செய்துள்ளார். இதெல்லாம் பொய்யாக எழுதிவைத்தவை என்பது நவீன ஆராய்ச்சியாளர்களின் ஆதாரமற்ற வாதம். திவ்வியப் பிரபந்தங்களில் காணும் சில அரசர்களின் செய்திகளைப் பிடித்துக்கொண்டு, சாசனங்களின் உதவியையுங் கொண்டு தங்களுடைய ஆராய்ச்சியை ஆதாரமுடையதாகச் செய்யப் பார்க்கின்றனர், புதிய ஆராய்ச்சியாளர்கள். ஆதியந்த மற்றதாகப் பெரும்பாலோரால் இசையப்பட்டுள்ள வடமொழி வேதத்திலும் காண்கின்ற பல கதைகளைப் பற்றிக்கொண்டால் அந்த வேதமும் கி. பி. இத்தனையாவது நூற்றாண்டில் தோன்றியது என்று வாதிக்க இடமேற்படும் போலும். 'நமக்குத் தந்தை தாயர் இன்னார்' என்பதை ருஜுவான பிரமாணத்தினால் திண்ணமாகக் கண்டறிந்து நிஷ்கர்ஷிக்கமாட்டாதவர்கள் பலவகைகளாலும்

அதீந்த்ரியமான விஷயங்களை அநுமானங்களாலும் குயுக்திகளாலும் நிர்ணயிக்கப் புகுவது ஸாஹஸமான காரியமாகும். இவர்கள் காட்டுகிற சாசனங்கள் முதலியன எவ்வளவுதூரம் நம்பத்தகுந்தவை யென்பதும் அவற்றில் இவர்களுடைய மருள்மயக்கங்கள் எப்படிப்பட்டவை யென்பதும் இவர்கள் தாங்களே ஒருவரையொருவர் மறுத்து எழுதும் கட்டுரைகளினால் நன்கு அறியத்தக்கன. அதையும் சிறிது ஈண்டு விவரிக்கின்றோம்.

45. “தஞ்சாவூர்—கரந்தைத் தமிழ்ச் சங்கம் வெள்ளிவிழா நினைவு மலர்” என்று ஸ்ரீமான். த. வே. உமாமகேசுவரனவர்கள் (சங்கத் தலைவர்.) ஒரு புத்தகம் தயாரித்தார். அதில் திரு. கே. ஜி. சேஷையர், B.A., B.L., அவர்கள் (முன் உயர்நீதிமன்ற நீதிபதி. திருவனந்தபுரம்) எழுதிய கட்டுரையொன்று நம்மாழ்வார் காலவாராய்ச்சி. இதில் இப்பெரியார், ஸ்ரீமான் கோபிநாதராயர் என்பாரொருவர் ‘ஸ்ரீ வைஷ்ணவரின் சரித்திரம்’ என்று ஒரு நூல் ஆங்கிலத்தில் எழுதியிருப்பதாகவும், அதில் ஆனைமலைச் சிலாசாசனமொன்றை ஆதாரமாகக்கொண்டு நம்மாழ்வார் கி. பி. ஒன்பதாவது நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தனராகக் காட்டப்பட்டிருப்பதாகவும் கூறி, அதற்கு மறுப்பு எழுதி வருகையில் அந்த கோபிநாதராயரவர்கள் சிலாசாசனத்திலுள்ள வாசகங்களின் பொருளை உள்ளபடி உணரகில்லாது மருண்டு தவறாக எழுதிவிட்டாரென்று நிரூபணம் செய்திருக்கின்றார். *மயர்வற மதிநலமருளப் பெற்றவராகத் தம்மை நினைத்துக்கொண்டு “நம்மாழ்வார் காலம் கி. பி. ஆறாவது நூற்றாண்டின் முற்பகுதி யென்று கொள்ளுதல் தகும்” என்று நிகமனஞ் செய்கிறார் அப்பெரியார். திருவாளர் சிவஞானமூர்த்தியார் என்கிற மற்றொரு பெரியார் அந்த சேஷையரவர்களது கட்டுரையையும் மறுத்து நம்மாழ்வார் காலத்தை இன்னும் இரண்டு மூன்று நூற்றாண்டுகட்கு முன்னே தள்ளலாம் என்றெழுதுகிறார். “முள்ளைக்கொண்டே முள்ளைக்களைவது” என்னும் பழமொழியும், வத்ஸாஸுரனைக்கொண்டு கபித்தாஸுரனை மோதி இருவரையும் தொலைத்த கண்ணபிரானது சரிதையும் நமக்கு நினைவுக்கு வருகின்றன.

46. இருள் துயக்கு மயக்கு மறப்பென்கிறவற்றுக்கெல்லாம் கொள்கலமாகிய நம்போலியர் தகர்க்குமளவிலே நிற்பதன்று உண்மைப்பொருள். ஆயினும் இவர்கள் சித்தாந்தம் செய்கிறபடியே ஆழ்வார்கள் மிகவும் பிற்காலத்தவர்களென்றே வைத்துக் கொள்வோம். கி. பி. ஆறாவது நூற்றாண்டிலிருந்தவர் நம்மாழ்வார் என்கிறார்கள். பதினாறாவது நூற்றாண்டிலென்றும் வைத்துக்கொள்வோம். நிகழும் நூற்றாண்டில் என்றும் வைத்துக்கொள்வோம். அருமருந்தன்ன திவ்வியப் பிரபந்தங்கள் “தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்” என்றபடி அநுபவரஸிகர்களுக்குத் தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதுமாக அமைந்திருக்கின்றமை அபலபிக்க முடியாத விஷயம். பதினாயிரமாண்டுகட்கு முற்பட்டவை யென்று வேறு சில நூற்கள் கிடைத்தாலும் அவற்றை ஒரு பொருளாக மதிப்பாரில்லை.

47. திருவாய்மொழியின் ஈற்றுப் பாசுரத்தின் வியாக்கியானத்தாலே (ஈடு முப்பத்தாறாயிரப்படியில்) நம்பிள்ளை அருளியுள்ள ஒரு அற்புதமான ஸ்ரீஸூக்தி காண்மின்; “ஆழ்வார்க்குப்பின்பு நூறாயிரம் கவிகள் போருமுண்டாய்த்து; அவர்கள் கவிகளோடு கடலோசையோடு வாசியற்று அவற்றைவிட்டு இவற்றைப்பற்றித் துவளுகைக்கடி இவருடைய பக்தியபிநிவேசம் வழிந்து புறப்பட்ட சொல்லாகையிறே.” என்கிற இந்த ஸ்ரீஸூக்திகள் விலையுயர்ந்தவை. இங்ஙனமாக நம்பூருவாசாரியர்கள் விசேஷித்து ஈடுபட்டிருந்ததற்கு இலக்கான

திவ்யப்ரபந்தங்கள் உபய விபூதிக்கும் பரமபோக்யமாக அமைந்திருக்குமழகு வேறு எந்த நூலுக்கும் அமையமாட்டாதது. இப்படிப்பட்ட திவ்யப் பிரபந்தங்களும் இவற்றுக்கு வக்தாக்களான ஆழ்வார்களும் என்றைக்கு அவதரித்தாலென்ன?

48. ஆழ்வார்களுடைய அவதாரம் ஏற்கெனவே மஹர்ஷிகளாலும் புராணங்களிலே காட்டப்பட்டிரா நின்றது. வடமொழிப் புராணங்களில் ஸ்ரீபாகவதமென்பது மிகவும் ப்ரஸித்தமாகவும் பெருமை பெற்றதாகவும் விளங்குகின்றது. அதில் பதினோராவது ஸ்கந்தத்தில் ஐந்தாவது அத்தியாயத்தில் 38, 39, ஆம் ச்லோகங்கள் ஸ்மார்த்தர் மாத்வர் வைஷ்ணவர் சைவர் என்னும் வாசியின்றி ஸகல ஜனங்களாலும் நிர்விவாதமாகப் பாராயணம் செய்யப்பட்டு வருகின்றன; அந்த ச்லோகங்களாவன :—

"கலௌ கலு பவிஷ்யந்தி நாராயண பராயணா:, க்வசித்க்வசித் மஹாபாகாத்ரமிடேஷு சபூரிச:,
தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ, காவேரீ ச மஹாபுண்யா ப்ரதீசீ ச மஹாநதீ. ஸுபரவர்த்மகா."

என்பனவாம்.

கலியுகத்திலும் ஸ்ரீநாராயணனையே உபாயோபேயமாகக்கொண்ட பரம பக்தர்கள் சிற்சிலவிடங்களில் அவதரிக்கப்போகிறார்களென்றும், தமிழ்நாடுகளிலே (அதாவது) தாமிரபர்ணி, க்ருதமாலை, பாலாறு, காவேரி முதலிய புண்ணிய நதிகள் பெருகுமிடங்களிலே விசேஷித்து பக்தர்கள் அவதரிக்கப் போகிறார்களென்றும் இந்த ச்லோகங்களில் கூறப்பட்டுள்ளது., மேற்கூறிய புண்ணிய நதிகளின் கரைகளிலே ஆழ்வார்கள் பதின்மர்தாம் அவதரித்துள்ளார்கள் என்பது கையிலங்கு நெல்லிக்கனி போன்றதாகும். இங்ஙனே மஹாமுனிவர்களின் அகக்கண்ணுக்கு இலக்காகி நின்ற பேராசிரியர்கள் எக்காலத்தில் அவதரித்தவர்களானாலும் அவர்களது ஒப்புயர்வற்ற பெருமைக்கும் அவர்களது திவ்ய ஸ்ரீஸூக்திகளின் மஹிமைக்கும் ஒருவாலும் ஒருநாளும் ஒருகுறையும் சொல்லப்போகாதென்பது திண்ணம். ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் மிகச் சிறந்ததோர் வார்த்தையை அருளியுள்ளார். அதாவது, "ததாத்வே நூதநம் ஸர்வம் ஆயத்யாஞ்ச புராதநம்" என்பதாம். எதுவுமே தோன்றும்போது புதிதாயும் நாளடைவில் பழையதாயும் ஆய்விடுமென்பது இதன் கருத்து. இந்த ரீதியிலே நோக்குமவர்கள் காலவிசாரத்தில் சிறிதும் கைவைக்க மாட்டார்கள்.

49. சிலர் எழுதியுள்ளார்கள்—"நம்மாழ்வார் காலத்தில் சைவ வைணவ சம்வாதமில்லை யென்பதற்குத் திருவாய் மொழியே சான்று பகரும்; அக்காலத்தில் வைணவரும் திருநீறிட்டு வந்தார் போலும்; "கரிய மேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும்" (4-5-6) என்றும், "நீறு செவ்வே யிடக்காணில் நெடுமாலடியாரென்றோடும்" (4-4-7) என்றும் நம்மாழ்வார் கூறியிருக்கின்றார்". என்று. நமது திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையை, அல்லது பூருவாசாரியர்களின் வியாக்கியானத்தைச் சிறிதேனும் நோக்கி யிருப்பரேல் இங்ஙனம் எழுதத் துணிந்திரார். எமது தீபிகையுரை வாக்கியங்களை அப்படியே யிங்கெடுத்துக் காட்டுகின்றோம். "[கரியமேனி மிசை வெளிய நீறு சிறிதேயிடும்] இதற்குப் பலவகையாகப் பொருள் பணிப்பர்கள். மேலே * பெரிய கோலத் தடங்கண்ணன் * என்று திருக்கண்களின் ப்ரஸ்தாவமிருக்கையாலே கரியமேனிமிசை என்றது—திருக்கண்களில் கருவிழியினுடைய கறுத்த நிறத்தால் வந்த அழகுக்குமேலே என்றபடி. வெளியநீறு சிறிதேயிடும்—அஞ்சன சூர்ணத்தை மங்கலமாகச் சிறிது அணிந்து கொள்ளுகிற என்றபடி. 'வெளியம்—அஞ்சனம்.' என்று பன்னீராயிரம். வேதாந்த தேசிகன் தாத்பர்ய ரத்நாவளியில் இப்பாசுரத்திற்காக * கர்ப்பூராலேப சோபே* என்று

திவ்யப்ரபந்தங்கள் உபய விபூதிக்கும் பரமபோக்யமாக அமைந்திருக்குமழகு வேறு எந்த நூலுக்கும் அமையமாட்டாதது. இப்படிப்பட்ட திவ்யப் பிரபந்தங்களும் இவற்றுக்கு வக்தாக்களான ஆழ்வார்களும் என்றைக்கு அவதரித்தாலென்ன?

48. ஆழ்வார்களுடைய அவதாரம் ஏற்கனவே மஹர்ஷிகளாலும் புராணங்களிலே காட்டப்பட்டிரா நின்றது. வடமொழிப் புராணங்களில் ஸ்ரீபாகவதமென்பது மிகவும் ப்ரஸித்தமாகவும் பெருமை பெற்றதாகவும் விளங்குகின்றது. அதில் பதினோராவது ஸ்கந்தத்தில் ஐந்தாவது அத்தியாயத்தில் 38, 39, ஆம் ச்லோகங்கள் ஸ்மார்த்தர் மாத்வர் வைஷ்ணவர் சைவர் என்னும் வாசியின்றி ஸகல ஜனங்களாலும் நிர்விவாதமாகப் பாராயணம் செய்யப்பட்டு வருகின்றன; அந்த ச்லோகங்களாவன :—

"கலௌ கலு பவிஷ்யந்தி நாராயண பராயணா:, க்வசித்க்வசித் மஹாபாகாத்ரமிடேஷு ச பூரிச:,
தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ, காவேரீ ச மஹாபுண்யா ப்ரதீசீ ச மஹாநதீ."

என்பனவாம்.

கலியுகத்திலும் ஸ்ரீநாராயணனையே உபாயோபேயமாகக்கொண்ட பரம பக்தர்கள் சிற்சில விடங்களில் அவதரிக்கப்போகிறார்களென்றும், தமிழ்நாடுகளிலே (அதாவது) தாமிரபர்ணி, க்ருதமாலை, பாலாறு, காவேரி முதலிய புண்ணிய நதிகள் பெருகுமிடங்களிலே விசேஷித்து பக்தர்கள் அவதரிக்கப் போகிறார்களென்றும் இந்த ச்லோகங்களில் கூறப்பட்டுள்ளது., மேற்கூறிய புண்ணிய நதிகளின் கரைகளிலே ஆழ்வார்கள் பதின்மர்தாம் அவதரித்துள்ளார்கள் என்பது கையிலங்கு நெல்லிக்கனி போன்றதாகும். இங்ஙனே மஹாமுனிவர்களின் அகக்கண்ணுக்கு இலக்காகி நின்ற பேராசிரியர்கள் எக்காலத்தில் அவதரித்தவர்களானாலும் அவர்களது ஒப்புயர்வற்ற பெருமைக்கும் அவர்களது திவ்ய ஸ்ரீஸூக்திகளின் மஹிமைக்கும் ஒருவராலும் ஒருநாளும் ஒருதுறையும் சொல்லப்போகாதென்பது திண்ணம். ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் மிகச் சிறந்ததோர் வார்த்தையை அருளியுள்ளார். அதாவது, "நதாத்வே நூதநம் ஸர்வம் ஆயத்யாஞ்ச புராதநம்" என்பதாம். எதுவுமே தோன்றும்போது புதிதாயும் நாளடைவில் பழையதாயும் ஆய்விடுமென்பது இதன் கருத்து. இந்த ரீதியிலே நோக்குமவர்கள் காலவிசாரத்தில் சிறிதும் கைவைக்க மாட்டார்கள்.

49. சிலர் எழுதியுள்ளார்கள்—"நம்மாழ்வார் காலத்தில் சைவ வைணவ சம்வாதமில்லை யென்பதற்குத் திருவாய் மொழியே சான்று பகரும்; அக்காலத்தில் வைணவரும் திருநீறிட்டு வந்தார் போலும்; "கரிய மேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும்" (4-5-6) என்றும், "நீறு செவ்வே யிடக்காணில் நெடுமாலடியாரென்றோடும்" (4-4-7) என்றும் நம்மாழ்வார் கூறியிருக்கின்றார்". என்று. நமது திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையை, அல்லது பூருவாசாரியர்களின் வியாக்கியானத்தைச் சிறிதேனும் நோக்கியிருப்பரேல் இங்ஙனம் எழுதத் துணிந்திரார். எமது தீபிகையுரை வாக்கியங்களை அப்படியே யெடுத்துக் காட்டுகின்றோம். "[கரியமேனி மிசை வெளிய நீறு சிறிதேயிடும்] இதற்குப் பலவகையாகப் பொருள் பணிப்பர்கள்.. மேலே * பெரிய கோலத் தடங்கண்ணன் * என்று திருக்கண்களின் ப்ரஸ்தாவமிருக்கையாலே கரியமேனிமிசை என்றது—திருக்கண்களில் கருவிழியினுடைய கறுத்த நிறத்தால் வந்த அழகுக்குமேலே என்றபடி. வெளியநீறு சிறிதேயிடும்—அஞ்சன சூர்ணத்தை மங்கலமாகச் சிறிது அணிந்து கொள்ளுகிற என்றபடி. 'வெளியம்—அஞ்சனம்.' என்று பன்னீராயிரம். வேதாந்த தேசிகன் தாத்பர்ய ரத்நாவளியில் இப்பாசுரத்திற்காக * கர்ப்பூராலேப சோபே* என்று

அருளிச் செய்திருக்கக்காண்கையாலே, சாமளமான திருமேனியிலே பச்சைக்கருப்பூர தூளியை அணிந்து கொள்ளுகிற என்றும் பொருள் கொள்ளலாம். வெளிய என்றது வெள்ளிய என்றபடி. கரி அம்மேனிமிசை வெளிய, நீறு சிறிதேயிடும் என்று கொண்டு, கரி-குவலயாபீட யானை யானது, அம்மேனிமிசை-கண்ணபிரானது அந்தத் திருமேனியிலே, வெளிய-சிறிப்பாய்ந்த வளவிலே, சிறிதே-க்ஷணகாலத்திறகுள், நீறு இடும்-அந்த யானையைப் பொடிபடுத்தின, என்றுமாம் ஒரு தமிழன்."

50. இனி, * நீறு செவ்வேயிடக்காணில் * என்றவிடத்தும் எம்முடைய தீபிகையுரை வாக்கியங்களை யெடுத்துக்காட்டுகின்றோம் ;—" நீறு செவ்வேயிடக்காணில் நெடுமாலடியாரென்றோடும்—திருமாலடியார்களுக்கு பஸ்மதாரணம் சாஸ்த்ர ஸித்தம் என்னுமிடம் ஆழ்வாரறியாததன்று ; நீறு இடுமவர்களை நெடுமாலடியாரென்று பிரதிபத்திபண்ண ப்ரஸக்தியில்லை ; அப்படியிருக்க இங்கு அருளிச்செய்வதற்குக் கருத்து என்னென்னில் ; இங்கே ஆறுயிரப்படி யருளிச்செயல்—' த்ரவ்யம் ஏதேலுமாகிலும் ஊர்த்த்வமாக இடக்காணில் நெடுமாலடியா ரென்றோடும் ' என்பதாம். இதனை அடியொற்றிய மற்ற வியாக்யானங்களுமுள்ளன. பஸ்மதாரணம் பண்ணினவர்களேயாயினும் அந்த பஸ்மத்தைக் குறுக்கே பூசாதே நெடுக இட்டால், ' ஊர்த்வ புண்ட்ரதாரிகளிவர்கள் ' என்று அவ்வளவுக்காக ப்ரதிபத்தி பண்ணுமென்றபடி. ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் அருளிச்செய்த ஸச்சரித்ர ரக்ஷையில் ஊர்த்வ புண்ட்ரதாரண விதிப்ரகரணத்தில் * நநு ஸமஸ்தபாகவத ஸார்த்த ஸங்க்ருஹீத....... * என்று தொடங்கி அருளிச்செய்யப் பட்டிருக்கும் விஷயங்களும் குறிக்கொள்ளத் தக்கவை. (அவற்றின் சுருக்கம் வருமாறு ;) ஸகல பாகவதர்களாலும் சிரமேற்கொள்ளப்பட்ட தமிழ் வேதமாகிய திருவாய்மொழியில் ' நீறு செவ்வேயிடக் காணில் நெடுமாலடியா ரென்றோடும் ' என்கிற பாசுரத்தினால் பகவத் பக்தர்களுக்கு பஸ்மதாரணம் லக்ஷணம்போல் தெரிவிக்கப்பட்டிருக்கிறதே, இது எப்படி? என்று சோத்யம்பித்துக் கொண்டு சில ஸமாதானங்கள் அருளிச்செய்யப்பட்டுள்ளன ; மேலே நாம் காட்டிய வகையிலே ஒரு ஸமாதானம். மற்றொரு ஸமாதானமாவது-நீறு என்னுஞ்சொல் பஸ்மத்தையே சொல்லும் என்கிற நியதியில்லை ; ஆழ்வார்தாமே ' மாயன்தமரடி நீறு கொண்டு அணிய முயலில் ' என்று வேறோரிடத்தில் அருளிச் செய்திருக்கையாலே பாகவதர்களின் திருவடிப் பொடியையும் பொருளாகக் கொள்ளலாமென்பதாம். பஸ்மதாரணம் பண்ணுகிறவர்கள் குறுக்கே பூசக் காண்பதொழிய ஊர்த்த்வமாக இடுவது முண்டோவென்று சிலர் முற்காலத்திலேயே சங்கித்தார்கள் ; அதற்குப் பரிஹாரமும் நம்பிள்ளை யருளிச்செய்தார். ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின் :— ' அவர்கள் செவ்வேயிடுவர்களோ வென்னில் அதுவுமன்றிக்கே இதுவுமன்றிக்கே மசகப்ராயரா யிருப்பவர்கள் தரிப்பர்களிறே.' (அதாவது) இரண்டுங் கெட்டான் என்று சொல்லப்படுகிற சிலர் பஸ்மத்தையே ஊர்த்வ புண்ட்ரமாகவும் தரிப்பர்கள் என்றபடி.

51. நம்மாழ்வார் தமது திருநெற்றியில் விஷ்ணு பாதாகாரமான திருமண்காப்பையே தாம் அணிந்து கொண்டிருந்தமையைத் திருவாய்மொழியிலே * நெற்றியுள் நின்று என்னை யாளும் நிறை மலர்ப்பாதங்கள் சூடி * என்கிற பாசுரத்தினால் ஐயந்திரிபறக் காட்டியிருக்க, அபார்த்தம் கொள்ளுதற்கு அவகாச லேசமுமில்லை யென்றுணர்க. சிவபிரான் முதலான தெய்வங்களுங்கூட விஷ்ணு பாதாகாரமான திவ்யோர்த்வ புண்ட்ரத்தை அணிந்து கொண்டிருந்ததாக நம்மாழ்வார் அப்பாசுரத்தில் காட்டியிருக்கின்றா ரென்பதையும் அறிவுடையார் கண்டு தெளிக.

52. ' சாப்பிடுதல் ' என்னுஞ் சொல்லை நாம் புராதன நூல்களில் கண்டதோ தென்றே நினைக்கிறோம். இக்காலத்தவர்கள் எழுதும் சில சிறு சுவடிகளிலும் வியாஸங்களி

லுமே இச்சொல் பெரும்பாலும் காணப்பட்டு வருகின்றது. இந்தச் சொல் எவ்விதமாக உண்டாயிற்றென்று கண்டுபிடிக்க நாம் சிறிது முயலவேண்டாவோ? முயன்றால், 'சாப்பிடுதல்' அல்ல; 'சாப்படுதல்' தான்—என்று விவேகிகளுக்குப் புலனாகும். பழைய குருபரம்பராப்ரபாவம் முதலிய நூல்களில், புஜித்து என்று சொல்ல வேண்டு மிடங்களில் 'ப்ரஸாதப்பட்டு' என்று அடிக்கடி எழுதப்பட்டிருப்பதை யாவரும் காணலாம். 'ப்ரஸாதப்படுதல்' என்னுஞ் சொல்லில் (ப்ர) என்கிற உபஸர்க்கம் விடுபட்டது. அதன் பிறகு 'ஸாதப்படுதல்' என்பது 'ஸாப்படுதல்' என மருவிற்று. தமிழில் ஸகாரம் கிடையாதாதலால் சாப்படுதல் ஆயிற்று. ஆகவே, சாப்படுகிறான், சாப்படுதல் என்று சொல்லவும் எழுதவும் தகுதியுண்டேயல்லது 'பிடு' என வருதற்கு ப்ரஸக்தியேயில்லை. கூப்பாடு, கூப்பீடு என இரண்டு வகையான சொல் வடிவங்களுமுண்டாதலால் கூப்படுதல், கூப்பிடுதல் என்பன பொருந்தும். 'சாப்பாடு' உண்டேயல்லது 'சாப்பீடு' கிடையாதாதலால் சாப்பிடுதலுக்கு ப்ரஸக்தி கிடையாது.

53. ஹவ்யகவ்யவைதிக கருமங்களை நடத்திவைக்கும் புரோஹிதர்களை நமது நாட்டில் உபாத்யாயர்களென வழங்குவதுண்டு. இவர்கள் பெரும்பாலும் ஸம்ஸ்க்ருத வ்யுத்பத்தியில்லாதவர்களாயும் வேதத்தை ஆநுபூர்வியாக ஓதாதவர்களாயுமிருப்பார்கள். அதனால் அவர்கள் உச்சரிக்கும் மந்த்ரங்களிலும் ப்ரயோக வாக்யங்களிலும் பலவகையான பிறழ்வுகள் இடம் பெறுகின்றன. காவ்ய நாடகங்கள் வாசித்து வ்யுத்பத்தி பெற்றவர்களுங்கூட கவனிப்பு இல்லாமலே பல பிழைகளைக் கையாண்டு வரக் காண்கிறோம். உதாஹரணமாக இரண்டொரு விஷயங்களை இங்கெடுத்துக்காட்டுவோம். "அசேஷே ஹே பரிஷத்!" என்று தொடங்குகிற வாக்கியத்தை முடிக்கும்போது எவ்விதமாகச் சொல்லி முடிக்கிறார்களென்பதை விவேகிகள் பராமர்சிக்க வேண்டும். [யோக்யதாஸித்திமநுக்ரஹாண] என்றே எந்த ஊரிலும் எந்த உபாத்தியாயரும் சொல்லிவரக் காண்கிறோம். அநுக்ரஹம் என்று சொல் வடிவமிருப்பதால் 'அநுக்ரஹாண' என்றுதான் க்ரியாபதமான சொல் வடிவம் தேறும் என்று நினைத்துவிடுகிறார்கள். अनुगृह्णन्तु (அநுக்ர்ஹ்ணந்து) என்பதுபோல अनुगृहाण (அநுக்ர்ஹாண) என்றுதான் சொல்ல வேண்டுமென்பதை ஒருவரும் விமர்சிப்பாரில்லை. गकार-த்தின் மேல் ऋकार மேயொழிய रेफ மில்லையென்பதை இனியாகிலும் அவரவர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேணும். இது மிகச் சிறு விஷயமென்று விட்டுவிடக்கூடாது; அபசப்தத்தில் சிறுமை பெருமையுண்டோ?

54. மற்றொன்றுங் கேண்மின்; ச்ராத்த ப்ரயோகத்தில் "இதம் க்ஷேத்ரம் கயாக்ஷேத்ர ஸத்ருசம் பூத்வா" என்று சொல்லுவது எங்குமுள்ளது. இதில் [பூத்வா] என்பது எங்கே அந்வயிக்கிறதென்பதைப் பண்டிதர்கள் பராமர்சிக்கவேணும். இப்படிப்பட்ட அவ்யயங்கள் க்ரியாபதத்திலேயே நியமேந அந்வயிக்கவேண்டியவைகள். ஸமாநகர்த்ருகத்வமும் இருக்க வேண்டும். ப்ரக்ருத ஸ்தலத்தில் இந்த நியமங்களுக்குச் சிறிதும் உபபத்தி இல்லையாகிறது. ரகுவம்சத்தில் நான்காவது ஸர்க்கத்தில் இரண்டாவது ச்லோகமாகிய "திலீபாநந்தரம் ராஜ்யே தம் நிசம்ய ப்ரதிஷ்டிதம், பூர்வம் ப்ரதூமிதோ ராஜ்ஞாம் ஹ்ருதயே அக்நிரிவோத்திதः." என்கிற ச்லோகத்தில் (நிசம்ய) என்கிற அவ்யயம் எங்கே அந்வயிக்கிறது? அங்கே ஸமாநகர்த்ருகத்வமில்லையே! என்று சிலர் பிரதிவாதம் செய்யக்கூடும்; அவர்கள் அவ்விடத்தில் மல்லிநாதருடைய வியாக்கியானத்தை ஆழ்ந்து நோக்குக. "கயாக்ஷேத்ரஸத்ருசம் பூத்வா" என்கிற வாக்கியம் அநாதிகாலமாக அனைத்திடங்களிலும் அவிகீதமாக ப்ரசாரத்தில் வந்திருக்கும்போது இதைப் பிசகென்று சொல்லலாமோ? என்று ஆக்ஷேபிக்கக்கூடியவர்களும் பலர் இருப்பர்கள்,

னுமே இச்சொல் பெரும்பாலும் காணப்பட்டு வருகின்றது. இந்தச் சொல் எவ்விதமாக உண்டாயிற்றென்று கண்டுபிடிக்க நாம் சிறிது முயலவேண்டாவோ? முயன்றால், 'சாப்பிடுதல்' அல்ல; 'சாப்படுதல்' தான்—என்று விவேகிகளுக்குப் புலனாகும். பழைய குருபரம்பராப்ர பாவம் முதலிய நூல்களில், புஜித்து என்று சொல்ல வேண்டு மிடங்களில் 'ப்ரஸாதப்பட்டு' என்று அடிக்கடி எழுதப்பட்டிருப்பதை யாவரும் காணலாம். 'ப்ரஸாதப்படுதல்' என்னுஞ் சொல்லில் (ப்ர) என்கிற உபஸர்க்கம் விடுபட்டது. அதன் பிறகு 'ஸாதப்படுதல்' என்பது 'ஸாப்படுதல்' என மருவிற்று. தமிழில் ஸகாரம் கிடையாதாதலால் சாப்படுதல் ஆயிற்று. ஆகவே, சாப்படுகிறான், சாப்படுதல் என்று சொல்லவும் எழுதவும் தகுதியுண்டேயல்லது 'பிடு' என வருதற்கு ப்ரஸக்தியேயில்லை. கூப்பாடு, கூப்பீடு என இரண்டு வகையான சொல் வடிவங் களு முண்டாதலால் கூப்படுதல், கூப்பிடுதல் என்பன பொருந்தும். 'சாப்பாடு' உண்டே யல்லது 'சாப்பீடு' கிடையாதாதலால் சாப்பிடுதலுக்கு ப்ரஸக்தி கிடையாது.

53. ஹவ்யகவ்ய வைதிக கருமங்களை நடத்திவைக்கும் புரோஹிதர்களை நமது நாட்டில் உபாத்யாயர்களென வழங்குவதுண்டு. இவர்கள் பெரும்பாலும் ஸம்ஸ்க்ருத வ்யுத் பத்தியில்லாதவர்களாயும் வேதத்தை ஆநுபூர்வியாக ஓதாதவர்களாயுமிருப்பார்கள். அதனால் அவர்கள் உச்சரிக்கும் மந்த்ரங்களிலும் ப்ரயோக வாக்யங்களிலும் பலவகையான பிறழ்வுகள் இடம் பெறுகின்றன. காவ்ய நாடகங்கள் வாசித்து வ்யுத்பத்தி பெற்றவர்களுங்கூட கவனிப்பு இல்லாமலே பல பிழைகளைக் கையாண்டு வரக் காண்கிறோம். உதாஹரணமாக இரண்டொரு விஷயங்களை இங்கெடுத்துக்காட்டுவோம். "அசேஷே ஹே பரிஷத்!" என்று தொடங்குகிற வாக்கியத்தை முடிக்கும்போது எவ்விதமாகச் சொல்லி முடிக்கிறார்களென்பதை விவேகிகள் பராமர்சிக்க வேண்டும். [யோக்யதாஸித்திமநுக்ரஹாண] என்றே எந்த ஊரிலும் எந்த உபாத்தி யாயரும் சொல்லிவரக் காண்கிறோம். அநுக்ரஹம் என்ற சொல் வடிவமிருப்பதால் 'அநுக்ர ஹாண' என்றுதான் க்ரியாபதமான சொல் வடிவம் தேறும் என்று நினைத்துவிடுகிறார்கள். अनुगृह्णन्तु (அநுக்ர்ஹ்ணந்து) என்பதுபோல अनुगृहाण (அநுக்ர்ஹாண) என்றுதான் சொல்ல வேண்டுமென்பதை ஒருவரும் விமர்சிப்பாரில்லை. गकार-த்தின் மேல் ऋकार மேயொழிய रेफ மில்லையென்பதை இனியாகிலும் அவரவர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேணும். இது மிகச் சிறு விஷயமென்று விட்டுவிடக்கூடாது; அபசப்தத்தில் சிறுமை பெருமையுண்டோ?

54. மற்றொன்றுங் கேண்மின்; ச்ராத்த ப்ரயோகத்தில் "இதம் க்ஷேத்ரம் கயாக்ஷேத்ரா ஸத்ருசம் பூத்வா" என்று சொல்லுவது எங்குமுள்ளது. இதில் [பூத்வா] என்பது எங்கே அந்வயிக்கிற தென்பதைப் பண்டிதர்கள் பராமர்சிக்கவேணும். இப்படிப்பட்ட அவ்யயங்கள் க்ரியா பதத்திலேயே நியமேந அந்வயிக்கவேண்டியவைகள். ஸமாநகர்த்ருகத்வமும் இருக்க வேண்டும். ப்ரக்ருத ஸ்தலத்தில் இந்த நியமங்களுக்குச் சிறிதும் உபபத்தி இல்லையாகிறது. ரகுவம்சத்தில் நான்காவது ஸர்க்கத்தில் இரண்டாவது ச்லோகமாகிய "திலீபாநந்தரம் ராஜ்யே தம் நிசம்ய ப்ரதிஷ்டிதம், பூர்வம் ப்ரதூமிதோ ராஜ்ஞாம் ஹ்ருதயே அக்நிரிவோத்திதः." என்கிற ச்லோகத்தில் (நிசம்ய) என்கிற அவ்யயம் எங்கே அந்வயிக்கிறது? அங்கே ஸமாந கர்த்ருகத்வமில்லையே! என்று சிலர் பிரதிவாதம் செய்யக்கூடும்; அவர்கள் அவ்விடத்தில் மல்லி நாதருடைய வியாக்கியானத்தை ஆழ்ந்து நோக்குக. "கயாக்ஷேத்ரஸத்ருசம் பூத்வா" என்கிற வாக்கியம் அநாதிகாலமாக அனைத்திடங்களிலும் அவிகீதமாக ப்ரசாரத்தில் வந்திருக்கும்போது இதைப் பிசகென்று சொல்லலாமோ? என்று ஆக்ஷேபிக்கக்கூடியவர்களும் பலர் இருப்பார்கள்.

"பூரணமித்யேவ ச ஸாது ஸர்வம்" என்கிற மஹாகவி ஸுபாஷிதத்தை மனத்திற்கொண்டு, உபபத்தி அநுபபத்திகளை மாத்திரம் வித்வான்கள் விமர்சிப்பது நன்று. "இதம் க்ஷேத்ரம் யதாக்ஷேத்ரஸதிருசம் பூயாத்" என்று தனி வாக்கியமாகவே பல பெரியார்கள் சொல்லி வருகிறார்கள்.

55 நமது பாரத பூமியில் பலவிதமான மதங்கள் இருக்கின்றன. அவற்றுள், துறவியானவர்களே மோக்ஷமடையக்கூடுமென்றும், க்ருஹஸ்தர்கள் மோக்ஷமடைய வழியில்லையென்றும் ஒரு மதமுண்டு. க்ருஹஸ்தர்களும் மோக்ஷமடையலாம்; ஸம்யாஸிகளும் மோக்ஷமடையலாம்-என்பது ஒரு மதம். க்ருஹஸ்தர்களாயிருந்துகொண்டே மோக்ஷமடைவது மேலா? ஸம்ந்யாஸாச்ரமத்தில் புகுந்து மோக்ஷமடைவது மேலா? என்று ஒரு விசாரம் வந்தது; அதைப்பற்றிச் சொல்லுகிறோம். சென்னைத் துறைமுகத்திலிருந்து ஒரு நாள் இரண்டு கப்பல்கள் பல சாக்குகளையும் யாத்திரிகளையும் ஏற்றிக்கொண்டு த்வீபாந்தரம் செல்லப் புறப்பட்டன. ஒன்றிரண்டு நாள் யாதொரு விசேஷமான ஸம்பவமும் உண்டாகவில்லை; கடல் சாந்தமாக இருந்தது. ஆகாயம் நிர்மலமாயிருந்தது. காற்றும் அநுகூலமாக வீசிற்று. எல்லாம் ஸுகமாகவேயிருந்தது. மூன்றாவது நாள் புயல் காற்றடிக்க ஆரம்பித்தது. அது மேன்மேலும் விருத்தியடைந்துகொண்டே போயிற்று. ஆகாயம் கறுத்து இருண்டு எங்கும் மூடிக்கொண்டது. கடலின் கொந்தளிப்புக்கு அளவேயில்லை. பெருப்பெருத்த அலைகள் மலைபோல் எழுந்தன. நிலைமை பயங்கரமாயிருந்தது. கப்பல்கள் ஒரு ஸமயம் பாதாளத்தை நோக்கிப் போகவும் மற்றொரு ஸமயம் வானத்தைத் தீண்டவும் ஆரம்பித்தன. யாத்திரிகள் எல்லாரும் அஞ்சி நடுங்கினர். எந்த க்ஷணமும் கப்பல் முழுகிப்போகலாமென்று அவர்கள் நினைத்தனர். தம் தம் இஷ்ட தேவதைகளைத் துதிக்க ஆரம்பித்தனர். எல்லோரும் பிராணனுக்கு மன்றாடிக்கொண்டிருந்தார்கள். கப்பலின் பிரதான அதிகாரியான காப்டனின் நிலைமை மிகவும் ஸங்கடமானதாயிருந்தது. இன்னதுதான் செய்யலாமென்று அவனுக்குத் தோன்றவில்லை. பெரிய ஆபத்தில் எல்லார்க்கும் புத்தி தடுமாறுதல் ஸஹஜமேயாம். எப்படியாவது கப்பலைக் காப்பாற்றினால் போதுமெனக் காப்டனின் நினைவு. என்ன உபாயம் செய்யலாமென்று ஆலோசனை செய்ய ஆரம்பித்தார்கள். ஒரு கப்பலின் காப்டனுக்கு ஒரு ஆலோசனை தோன்றியது. கப்பலிலுள்ள சாக்குகளையெல்லாம் அப்புறப்படுத்திவிட்டு யாத்திரிகளையும் தோணிகளில் இறக்கிவிட்டால் கப்பலின் பாரம் குறைந்து போய்விடும். அப்போது கப்பல் காப்பாற்றப்பட்டாலும் படலாம்- என்பது அவனுடைய நினைவாயிருந்தது. இவ்வண்ணம் நிச்சயம் செய்துகொண்டு அப்படியே காரியமும் செய்ய ஆரம்பித்துவிட்டான். கப்பலிலுள்ள யாத்திரிகளில் எவ்வளவு பேர் தோணிகளில் ஏறிக்கொள்ள முடியுமோ அவ்வளவு பேரையும் தோணிகளில் இறக்கிவிட்டான். அதன் பிறகு கப்பலிலுள்ள ஸாமான்களையெல்லாம் ஒவ்வொன்றாகக் கடலில் எறிந்தான். பல விலையுயர்ந்த ஸாமான்களையும் போட்டுவிட நேர்ந்தது. கப்பலுக்கே ஆபத்து வந்திருக்கும்போது ஸாமான்களைப்பற்றி அவன் கவலைப்பட ப்ரஸக்தியேது? மற்றொரு கப்பலின் காப்டனோவென்றால், கப்பல் முழுகிப்போவதாயிருந்தால் என்ன? ஸாமான்களைத் தனியாக எடுத்தெறிவதால் யாதொரு லாபமும் இல்லை. இந்த மஹத்தான ஆபத்திலிருந்து கடவுள் தப்பவைத்தால்தானுண்டு. அவர் பேரில் பாரத்தைப்போட்டு நாம் நம்முடைய கடமையைச் செய்துவருவோம்; யாத்திரிகளைப் பெரிய கப்பலிலிருந்து சிறிய தோணிகளில் இறக்குவதும் நியாயமன்று—என்று இவ்விதம் நிச்சயித்துக்கொண்டு ஸாத்யமான உபாயங்களைச் செய்து வந்தான்.

56. மறுநாள் புயல்காற்று அடங்கிற்று. கடலின் கொந்தளிப்பும் நின்றது. வான
மும் நிர்மலமாயிற்று. இரண்டாவது கப்பலில் காப்டன் தன்னுடைய கப்பல் எல்லாச்
சாமான்களோடும் யாத்திரிகளோடும் ஆபத்திலிருந்து தப்பினதைக்கண்டு போனக்தமடைந்
தான். கடவுளைப் புகழ்ந்தான். மறுநாள் துறைமுகத்திலே கப்பல் சேர்ந்தபோது பெருந்
திரளான ஜனங்கள் [illegible] கப்பலை எதிர்கொண்டார்கள். காப்டனின் தைரி
[illegible] அவனுக்குப் பெருத்த வெகுமானம் செய்வதாகவும் நிச்சயித்
[illegible] ஸன்மானம் ஒருபுறமிருக்க, கப்பலின் சொந்தக்காரர்களும்
[illegible] கௌரவித்துப் பெருத்த ஸன்மானம் அவனுக்களித்தார்கள். இந்த
[illegible] விசேஷமாக கௌரவித்துப் பெருத்த ஸன்மானம் அவனுக்களித்தார்கள். இந்த
கப்பலின் [illegible] சாமான்களைக் கடலில் வாரியெறிந்த முதல் கப்பலின் காப்டன்
இன்னமிருக்கப்பலிலிருந்து ஸாமான்களைக் கடலில் வாரியெறிந்த முதல் கப்பலின் காப்டன்
நிலைமை என்னவென்பதைக் கேண்மின். கப்பலை அவனும் காப்பாற்றினான் என்பது
வாஸ்தவமே. ஆனால் கப்பலிலிருந்த விலையுயர்ந்த ஸாமான்களை யெல்லாமிழந்து, யாத்திரிகளை
யும் கப்பலிலிருந்து சிறு ஓடங்களில் இறக்கிவிட்ட பின்பு மிஞ்சுகதென்ன? அச்சிறு ஓடங்
களில் இறக்கப்பட்ட யாத்திரிகளும் கிரமமாகத் துறைமுகம் வந்து சேரவில்லை. மஹத்தான
ஆபத்துக்கு ஆளானார்கள். சிலர் போனவிடமே ஏற்படவில்லை. சிலரோவெனில், பல தினங்
களுக்குப்பின்பு மிக்க கஷ்டங்களுடன் பலவிடங்களில் இறங்கினார்கள். உடுத்த துணி தவிர
எல்லாம் இழந்தார்கள். கப்பலின் காப்டனுக்கு உண்டான மனவருத்தத்திற்கும் லஜ்ஜைக்கும்
அளவேயில்லை. அவனும் தன்து கப்பலை யாருமறியாமல் இராக்காலத்தில் துறைமுகம்கொண்டு
வந்தான். எதிர்கொள்வார் ஆருமில்லை. அவன் தன்னுடைய பயங்கொள்ளித் தனத்திற்காகத்
தன்னைத்தானே இகழும்போது வேறு மனிதர்கள் அவனைக் கொண்டாடுவார்களா? அவனைக்
கௌரவிக்கவும் சன்மான மளிக்கவும் யார் முன் வருவார்? எல்லாச் சாமான்களையும் இழந்து
கப்பலை மாத்திரம் காப்பாற்றுவதில் என்ன ஸாமர்த்தியம்? கப்பலின் சொந்தக்காரருக்குத்தான்
அவனிடத்தில் அபிமான முண்டாக என்ன காரணமிருக்கிறது?

57. இந்த திருஷ்டாந்தத்தால் நாம் தெரிந்துகொண்ட தென்ன? வீடு வாசலை
விட்டு மனைவி மக்களை விட்டு பந்துபாந்தவர்களையும் விட்டு ஸம்ந்யாஸியாய்க் காடேறப் புகுந்து
தனியே நின்று, ஸம்ஸாரமாகிற பெருங்கடலில் முழுக விருக்கும் தன் ஆத்மாவைக் காப்பாற்றி
ஒருவன் மோக்ஷ பதவியை அடைந்தால் அதில் ஆச்சரியமென்ன? அவனால் யாருக்கு என்ன
லாபம்? கிருஹஸ்தாச்ரமத்திலேயே யிருந்து எல்லோரையும் காப்பாற்றி நிர்ப்பயனாய் நின்று
தன்னைப் பாழுங் கடலில் மூழ்கிப் போகாமல் காத்து மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை ஒருவன் பெறு
வானேயானால் அதுவே விசேஷம். இந்த ஆத்மாவாகிற கப்பலுக்கு ஸ்வாமியான கடவுள்
அவனை விசேஷமாகக் கொண்டாடுவார். அடுத்து நின்றவர்களும் அவனைப் போற்றுவார்கள்.
போராபத்தில் புத்தி தடுமாறாமல் தைரியமாய் நின்ற கப்பலின் காப்டனைப்போல், கிருஹஸ்தனை
முழுகாமலும் தைரியமாய் நின்று தன்னைக் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. போராபத்தில்
புத்தி கலங்காமல் தைரியமாய்ப் போராடவேண்டியிருக்கிறது. ஆனால் அதுவே விசேஷமாம்.
மோக்ஷமடைய கிருஹஸ்தர்களுக்கும் ஸம்ந்யாஸிகளுக்கும் ஸமமான அதிகாரமேயுள்ளது.
க்ருஹஸ்தாச்ரமியை யண்டியே மற்ற ஆச்ரமிகள் ஜீவிக்கவேண்டியிருக்கிறது. க்ருஹஸ்தாச்ரமி
தான் மற்ற ஆச்ரமிகளை அன்னபானாதிகள் கொடுத்துப் போஷிக்க வுரியவன். இப்படி மற்ற
ஆச்ரமிகளையும் போஷித்து ரக்ஷித்துக் கொண்டு தானும் நற்கதியடைய க்ருஹஸ்தனுக்கு

56. மறுநாள் புயல்காற்று அடங்கிற்று. கடலின் கொந்தளிப்பும் நின்றது. வான
மும் நின்மலமாயிற்று. இரண்டாவது கப்பலில் காப்டன் தன்னுடைய கப்பல் எல்லாச்
சாமான்களோடும் யாத்திரிகளோடும் ஆபத்திலிருந்து தப்பினதைக்கண்டு பேரானந்தமடைந்
தான். கடவுளைப் புகழ்ந்தான். மறுநாள் துறைமுகத்திலே கப்பல் சேர்ந்தபோது பெருந்
திரளான ஜனங்கள் பேராவாரத்துடன் கப்பலை எதிர்கொண்டார்கள். காப்டனின் தைரி
யத்தையும் புகழ்ந்தார்கள். அவனுக்குப் பெருத்த வெகுமானம் செய்வதாகவும் நிச்சயித்
தார்கள். மஹாஜனங்களின் ஸன்மானம் ஒருபுறமிருக்க, கப்பலின் சொந்தக்காரர்களும்
காப்டனை விசேஷமாகக் கௌரவித்துப் பெருத்த ஸன்மானம் அவனுக்களித்தார்கள். இந்த
இன்னமிருக்க, கப்பலிலிருந்து ஸாமான்களைக் கடலில் வாரியெறிந்த முதல் கப்பலின் காப்டன்
நிலைமை என்னவென்பதைக் கேண்மின். கப்பலை அவனும் காப்பாற்றினன் என்பது
வாஸ்தவமே. ஆனால் கப்பலிலிருந்த விலையுயர்ந்த ஸாமான்களையெல்லாமிழந்து, யாத்திரிகளை
யும் கப்பலிலிருந்து சிறு ஓடங்களில் இறக்கிவிட்ட பின்பு மிருந்ததென்ன? அச்சிறு ஓடங்
களில் இறக்கப்பட்ட யாத்திரிகளும் கிரமமாகத் துறைமுகம் வந்து சேரவில்லை. மஹாத்தான
ஆபத்துக்கு ஆளானார்கள். சிலர் போனவிடமே ஏற்படவில்லை. சிலரோவெனில், பல தினங்
களுக்குப்பின்பு மிக்க கஷ்டங்களுடன் பலவிடங்களில் இறங்கினார்கள். உடுத்த துணி தவிர
எல்லாம் இழந்தார்கள். கப்பலின் காப்டனுக்கு உண்டான மனவருத்தத்திற்கும் லஜ்ஜைக்கும்
அளவேயில்லை. அவனும் தன்து கப்பலை யாருமறியாமல் இராக்காலத்தில் துறைமுகம்கொண்டு
வந்தான். எதிர்கொள்வார் ஆருமில்லை. அவன் தன்னுடைய பயங்கொள்ளித் தனத்திற்காகத்
தன்னைத்தானே இகழும்போது வேறு மனிதர்கள் அவனைக் கொண்டாடுவார்களா? அவனைக்
கௌரவிக்கவும் சன்மான மளிக்கவும் யார் முன் வருவார்? எல்லாச் சாமான்களையும் இழந்து
கப்பலை மாத்திரம் காப்பாற்றுவதில் என்ன ஸாமர்த்தியம்? கப்பலின் சொந்தக்காரருக்குத்தான்
அவனிடத்தில் அபிமான முண்டாக என்ன காரணமிருக்கிறது?

57. இந்த திருஷ்டாந்தத்தால் நாம் தெரிந்துகொண்ட தென்ன? வீடு வாசலை
விட்டு மனைவி மக்களை விட்டு பந்துபாந்தவர்களையும் விட்டு ஸந்யாஸியாய்க் காடேறப் புகுந்து
தனியே நின்று, ஸம்ஸாரமாகிற பெருங்கடலில் முழுக விருக்கும் தன் ஆத்மாவைக் காப்பாற்றி
ஒருவன் மோக்ஷ பதவியை அடைந்தால் அதில் ஆச்சரியமென்ன? அவனால் யாருக்கு என்ன
லாபம்? கிருஹஸ்தாச்ரமத்திலேயே யிருந்து எல்லோரையும் காப்பாற்றி நிர்ப்பயனாய் நின்று
தன்னைப் பாழுங் கடலில் மூழ்கிப் போகாமல் காத்து மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை ஒருவன் பெறு
வானேயானால் அதுவே விசேஷம். இந்த ஆத்மாவாகிற கப்பலுக்கு ஸ்வாமியான கடவுள்
அவனை விசேஷமாகக் கொண்டாடுவார். அடுத்து நின்றவர்களும் அவனைப் போற்றுவார்கள்.
பேராபத்தில் புத்தி தடுமாறாமல் தைரியமாய் நின்ற கப்பலின் காப்டனைப்போல், கிருஹஸ்தனை
முமுக்ஷுவும் தைரியமாய் நின்று தன்னைக் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. பேராபத்தில்
புத்தி கலங்காமல் தைரியமாய்ப் போராடவேண்டியிருக்கிறது. ஆனால் அதுவே விசேஷமாம்.
மோக்ஷமடைய கிருஹஸ்தர்களுக்கும் ஸந்யாஸிகளுக்கும் ஸமமான அதிகாரமேயுள்ளது.
க்ருஹஸ்தாச்ரமியை யண்டியே மற்ற ஆச்ரமிகள் ஜீவிக்கவேண்டியிருக்கிறது. க்ருஹஸ்தாச்ரமி
தான் மற்ற ஆச்ரமிகளை அந்நபாநாதிகள் கொடுத்துப் போஷிக்க வுரியவன். இப்படி மற்ற
ஆச்ரமிகளையும் போஷித்து ரக்ஷித்துக் கொண்டு தானும் நற்கதியடைய க்ருஹஸ்தனுக்கு

யோக்யதையுண்டு. ஆகவே, மோக்ஷமடைவதற்கு ஸந்ந்யாஸியாக வேண்டிய அவசியமில்லை யென்பது அறியத்தக்கது.

58. திருவாய்மொழி அஞ்சாம்பத்தில் பிறந்தவாறும் என்கிற பத்தாந் திருவாய்மொழியின் ஆறுவது பாசுரத்தின் ஈட்டிலே * கிடந்தவாறும் என்ற விடத்து— "கருணை யென்னும் கடல் கருங்கடலை நோக்கிக் கிடந்ததே என்றானிறே" என்கிற வாக்கியம் எல்லாப் பதிப்புகளிலும் வாசியின்றிக்கே காணப்படுகிறது. இதில் "என்றானிறே" என்றிருப்பதனால் அதற்கு முந்தின வாக்கியம் ஒரு தமிழ் நூலிலிருந்து ஸம்வாத ப்ரமாணமாக எடுத்தாளப்பட்டதென்பது ஸ்பஷ்டமாக விளங்குகின்றது. இது கம்பன் கவியென்று அரும்பதவுரைகாரர் எழுதுகின்றார். "கருணை யென்னும் கடல் கருங்கடலை நோக்கிக் கிடந்ததே" என்று இவ்வண்ணமாகக் கம்பருடைய கவி எங்கும் காணப்படவில்லை. மிகப் பெரும் புலவர்களை விசாரித்தும் விளங்கவில்லை. தமிழ்ப் பண்டிதரான (கீர்த்தி மூர்த்தியான) திருவல்லிக்கேணி, சே. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமியின் பகவத் விஷயப்பதிப்பிலும் மேலே காட்டின வண்ணமாகவே உதாஹரிக்கப்பட்டிருக்கக் காண்கையாலே, 'அப்படித்தான் கம்பர் எங்கேனும் பாடியிருக்கக் கூடும்' என்கிற பக்ஷம் நினைக்கிறார்கள். உண்மை யாதெனில்; கம்ப ராமாயணத்தில் யுத்த காண்டத்தில் வருணனை வேண்டுகோட் படலத்தில் ஐந்தாவது செய்யுள் ;—

"தருண மங்கையை மீட்பதோர் நெறிதருகென்னும்
பொருணயந்து நன்னூல் நெறியடுக்கிய புல்லில்
கருணையங்கடல் துயின்றனன் கருங்கடல் நோக்கி
வருண மந்திரம் விதிமுறை யெண்ணினன் வணங்கி." என்பது.

இதில் மூன்றாமடியையே நம்பிள்ளை யெடுத்து உபந்யஸித்தருளியுள்ளார் என்பதில் ஸந்தேஹமில்லை. ஆகவே, "கருணை என்னும் கடல் கருங்கடலை நோக்கிக் கிடந்ததே என்றானிறே" என்கிற ஸ்தானத்தில், "கருணையங்கடல் துயின்றனன் கருங்கடல் நோக்கி என்றானிறே" என்று திருத்திக் கொள்ளவேணும். தேடிப் பார்த்த வரையில் ஓலை ஸ்ரீகோசங்களிலும் தவறான பாடமே காணப்படுவதால் இப்பிழை எப்போது புகுந்ததென்று கண்டுபிடிக்க முடியாமலிருக்கிறது. இவ்வண்ணமாகப் பல பிழைகள் ஊடேயூடே புகுந்துள்ளனவாதலால் பிராமாணிகர்கள் ஆழ்ந்து ஆராய்வது நலம். கம்பருடைய செய்யுளை அப்படியே உதாஹரிப்பது நம்பிள்ளைக்கு விவக்ஷிதமன்று என்றும், அர்த்தாநுவாதமாகச் செய்தவத்தனையே என்றும் சொல்லி விடலாமென்று சில பெரியார் திருவுள்ளம் பற்றவுங்கூடும். அப்படியானால், அந்த வாக்கியத்திற்கு மூலமான செய்யுளை நாம் எடுத்துக் காட்டினதாகக் கொள்வது நலம்.

59. ஸம்ஸ்க்ருத பதங்களை உலக வழக்கில் பெரும்பாலும் கொண்டிருக்கிறார்கள். அவ்வழக்கில் பலபல சப்தங்கள் அபசப்தங்களாகவும் இருப்பதுண்டு. ஸ்தூலத்ருஷ்டியில் அபசப்தங்கள் போல் தோன்றி ஸூக்ஷ்மத்ருஷ்டியில் ஸுசப்தங்களாயிருப்பவைகளும் பலவுண்டு. ஒரு சப்தத்தைப்பற்றி முக்கியமாக இப்போது விஜ்ஞாபிக்கிறேன். असर्वज्ञदुर्ज्ञेयम् என்று பெரிய பெரிய பண்டிதர்களும் வழங்கிவருகிறார்கள். दुर्ज्ञेयम् என்பதற்கு என்ன பொருளென்றால், அறியமுடியாதது என்பதாம். வியாகரண சாஸ்த்ரப்படி இப்பதம் எவ்விதமாக நிஷ்பந்நமாகவேணுமென்றால், दुर्ज्ञानम् என்றே நிஷ்பந்நமாகவேண்டும். அஷ்டாத்யாயியில்

யோக்யதையுண்டு. ஆகவே, மோக்ஷமடைவதற்கு ஸந்ந்யாஸியாக வேண்டிய அவசியமில்லை யென்பது அறியத்தக்கது.

58. திருவாய்மொழி அஞ்சாம்பத்தில் பிறந்தவாறும் என்கிற பத்தாந் திருவாய் மொழியின் ஆறாவது பாசுரத்தின் ஈட்டிலே * கிடந்தவாறும் என்ற விடத்து— "கருணை யென்னுங் கடல் கருங்கடலை நோக்கிக் கிடந்ததே என்றானிறே" என்கிற வாக்கியம் எல்லாப் பதிப்புகளிலும் வாசியின்றிக்கே காணப்படுகிறது. இதில் "என்றானிறே" என்றிருப்பதனால் அதற்கு முந்தின வாக்கியம் ஒரு தமிழ் நூலிலிருந்து ஸம்வாத ப்ரமாணமாக எடுத்தாளப்பட்டதென்பது ஸ்பஷ்டமாக விளங்குகின்றது. இது கம்பன் கவியென்று அரும்பதவுரைகாரர் எழுதுகின்றார். "கருணை யென்னுங் கடல் கருங்கடலை நோக்கிக் கிடந்ததே" என்று இவ்வண்ணமாகக் கம்பருடைய கவி எங்கும் காணப்படவில்லை. மிகப் பெரும் புலவர்களை விசாரித்தும் விளங்கவில்லை. தமிழ்ப் பண்டிதரான (கீர்த்தி மூர்த்தியான) திருவல்லிக்கேணி, சே. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமியின் பகவத் விஷயப்பதிப்பிலும் மேலே காட்டின வண்ணமாகவே உதாஹரிக்கப்பட்டிருக்கக் காண்கையாலே, 'அப்படித்தான் கம்பர் எங்கேனும் பாடியிருக்கக் கூடும்' என்றே பலரும் நினைக்கிறார்கள். உண்மை யாதெனில்; கம்ப ராமாயணத்தில் யுத்த காண்டத்தில் வருணனை வேண்டுகோட் படலத்தில் ஐந்தாவது செய்யுள் ;—

"தருண மங்கையை மீட்பதோர் நெறிதருகென்னும்
பொருணயந்து நன்னூல் நெறியடுக்கிய புல்லில்
கருணையங்கடல் துயின்றனன் கருங்கடல் நோக்கி
வருண மந்திரம் விதிமுறை யெண்ணினன் வணங்கி." என்பது.

இதில் மூன்றாமடியையே நம்பிள்ளை யெடுத்து உபந்யஸித்தருளியுள்ளார் என்பதில் ஸந்தேஹமில்லை. ஆகவே, "கருணை என்னுங் கடல் கருங்கடலை நோக்கிக் கிடந்ததே என்றானிறே" என்கிற ஸ்தானத்தில், "கருணையங்கடல் துயின்றனன் கருங்கடல் நோக்கி என்றானிறே" என்று திருத்திக் கொள்ளவேணும். தேடிப் பார்த்த வரையில் ஓலை ஸ்ரீகோசங்களிலும் தவறான பாடமே காணப்படுவதால் இப்பிழை எப்போது புகுந்ததென்று கண்டுபிடிக்க முடியாமலிருக்கிறது. இவ்வண்ணமாகப் பல பிழைகள் ஊடேயூடே புகுந்துள்ளனவாதலால் பிராமாணிகர்கள் ஆழ்ந்து ஆராய்வது நலம். கம்பருடைய செய்யுளை அப்படியே உதாஹரிப்பது நம்பிள்ளைக்கு விவக்ஷிதமன்று என்றும், அர்த்தாநுவாதமாகச் செய்தவற்றனையே என்றும் சொல்லி விடலாமென்று சில பெரியார் திருவுள்ளம் பற்றவுங்கூடும். அப்படியானால், அந்த வாக்கியத்திற்கு மூலமான செய்யுளை நாம் எடுத்துக் காட்டினதாகக் கொள்வது நலம்.

59. ஸம்ஸ்க்ருத பதங்களை உலக வழக்கில் பெரும்பாலும் கொண்டிருக்கிறார்கள். அவ்வழக்கில் பலபல சப்தங்கள் அபசப்தங்களாகவும் இருப்பதுண்டு. ஸ்தூலத்ருஷ்டியில் அபசப்தங்கள் போல் தோன்றி ஸூக்ஷ்மத்ருஷ்டியில் ஸுசப்தங்களாயிருப்பவைகளும் பலவுண்டு. ஒரு சப்தத்தைப்பற்றி முக்கியமாக இப்போது விஜ்ஞாபிக்கிறேன். असर्वज्ञदुर्ज्ञेयम् என்று பெரிய பெரிய பண்டிதர்களும் வழங்கிவருகிறார்கள். दुर्ज्ञेयम् என்பதற்கு என்ன பொருளென்றால், அறியமுடியாதது என்பதாம். வியாகரண சாஸ்த்ரப்படி இப்பதம் எவ்விதமாக நிஷ்பந்நமாகவேணுமென்றால், दुर्ज्ञानम् என்றே நிஷ்பந்நமாகவேண்டும். அஷ்டாத்யாயியில்

"ईषद्दुस्सुषु कृच्छ्राकृच्छ्रार्थेषु खल्" என்பது ஒரு ஸூத்ரம். இதனால் விதிக்கப்பட்ட கல்லுக்கு அபவாதமாக் "आतोयुच्" என்பது மற்றொரு ஸூத்ரம். இந்த ஸூத்திரத்தின்படி दुर्ज्ञानम्, सुज्ञानम् என்றுதான் ஶப்தஸ்வரூபம் தேறும். ज्ञेयम् என்கிற ஶப்தம் ஸாதுவேயானாலும் (दुः) என்பது முன்னே उपसर्गமாக வரும்போது दुर्ज्ञानम् என்று ஆய்விடுமேயல்லாது दुर्ज्ञेयम् என்று ஆவதற்கு வழியில்லை. நம் ஸ்ரீ பாஷ்யகாரர் கீதாபாஷ்யத்தில் நான்காவது அத்தியாயத்தில் 16, 17-சலோகங்களின் அவதாரிகையில் दुर्ज्ञान மென்றே பிரயோகித்தருளியிருப்பதைப் பார்க்கலாம். * वक्ष्यमाणस्य कर्मणो दुर्ज्ञानतामाह * कुतोऽस्य दुर्ज्ञानतेत्यत्राह * என்றவை காண்க.

வேதாந்த தேசிகனும் பாதுகா ஸஹஸ்ரத்தில் "रामे राज्यं पितुरभिमतम्" என்கிற ச்லோகத்தில் "दुर्विज्ञानस्वहृदयमहो दैवमत्र प्रमाणम्" என்று பிரயோகித்தருளியிருப்பதும் நோக்கத் தக்கது. ஸ்ரீ ராமாயணத்தில் வாலியை நோக்கிப் பெருமாள் அருளிச் செய்புமிடத்து * सूक्ष्मः परमदुर्ज्ञेयः सतां धर्मः प्लवङ्गम * என்றதில் दुर्ज्ञेयः என்றிருப்பது ஆர்ஷ ப்ரயோகம் என்று கொண்டுவிடலாம். ஈடு முப்பத்தாறாயிரப்படி முதலான மஹாக்ரந்தங்களில் दुर्ज्ञेय மென்கிற ப்ரயோகம் காணப்படுகிறது. திருவாய்மொழியில் (5—3—5) "அறிவரு மேனி மாயத்தன்" என்ற விடத்து ஒன்பதினாயிரப்படியில் "दुर्ज्ञेय स्वभावனாய்" என்றும், ஈட்டில் "அவன் दुर्ज्ञेयனென்றால் அவன் दुर्ज्ञेयதையை இப்போதே அறியவேணும்" என்றும் காண்கிறது. ஸர்வஜ்ஞர்களான ஆசாரியர்கள் இப்படி அருளிச்செய்தது எதுகொண்டு? என்கிற விசிகித்ஸை அடியேனுக்கு நெடுநாளாக இருந்தது.

60. ஸாயணமஹாதேவர் எழுதிய ஸர்வதர்சந ஸங்க்ரஹம் என்னும் உயர்ந்த க்ரந்தத்தைப் பார்த்துக்கொண்டு போம்போது ஜைமினி தர்சந ப்ரகரணத்தில்— "सर्वस्मरणस्य असर्वज्ञ दुर्ज्ञानत्वात्" என்று காணப்பட்டது. அதிலேயே மேலே शाङ्करदर्शनப்ரகரணத்தில் — "सर्वथा वाग्धर्मधुर्यस्य असर्वज्ञ दुर्ज्ञेयत्वात्" என்றும் காணப்பட்டது. ஒருவரே ஒரு க்ரந்தத்திலேயே दुर्ज्ञान மென்றும் दुर्ज्ञेय மென்றும் பிரயோகித்திருக்கின்றாரே, இது எப்படி? என்கிற விசிகித்ஸையுமிருந்தது. साधुत्वसमर्थनத்திற்காகவே பிறந்ததான दुर्घटवृत्ति யென்னும் வியாகரண க்ரந்தத்தைக் கொண்டு பார்த்ததில் ஒரு தெளிவு ஏற்பட்டது. அதில் (பக்கம் 70-ல்) 'आतोयुच्' என்கிற ஸூத்ரத்தை யெழுதி "कथं दुर्विज्ञेयमपि धर्मं श्रद्दधात्युदारधीरिति प्रयोगः ?" என்று ஆசங்கித்துக்கொண்டு "उच्यते । दुःखेन ज्ञेयमिति प्रादिसमासः" என்று உபபத்தி வெளியிடப்பட்டது. ஆகையாலே दुर्ज्ञेय மென்று காண்கிற விடங்களில் இப்படியே உபபத்தி கொள்ளவேணு மென்று நிச்சயித்துக்கொண்டேன். இப்படி சிரமப்பட்டு ஸமாதானம் சொல்லவேண்டும் படியான பிரயோகத்தை மஹான்கள் ஏன் கைக்கொள்ளவேணும்? என்று சிலர் கேட்கக்கூடும். दुर्ज्ञान மென்றால் दुरवगमं என்கிற அர்த்தத்திற்கு झटिति बोधம் உண்டாவது அரிது என்கிற எண்ணமே காரணமாயிருக்கக்கூடும் என்று தோன்றுகிறது.

61. அச்சுப்புத்தகங்களில் காணப்படும் பிழைகளை அனேகமாய் ஓலை ஸ்ரீகோசங்களிலிருந்து திருத்திக்கொள்ள நேருகின்றது. ஓலை ஸ்ரீகோசங்களில் பிழையே கிடையாதென்று சொல்லமுடியாது. அவற்றிலும் பிழைகள் காணப்படுகின்றன. பிழையுற்றிருந்த ஒரு ஓலை ஸ்ரீகோசத்தை மாத்ருகையாகக் கொண்டு புத்ரிகைகளாக அனேக ஓலை ஸ்ரீகோசங்கள் அவதரிக்கின்றன. மாத்ருகையில் இருந்த பிழைகள் புத்ரிகைகளெல்லாவற்றிலும் வாசியற விழுந்து விடுகின்றன. ஆகவே, நாலைந்து ஓலை ஸ்ரீகோசங்கள் கிடைத்தாலும் பிழைகள் துல்யமாகவேயிருப்பதால் த்ருப்தி ஏற்படுகிறதில்லை. இதைப்பற்றி ஒரு பெரியவிஷயம் இங்கே எடுத்துக்காட்டுகிறோம். ஸ்ரீமத் ரங்கராமாநுஜஸ்வாமி [உபநிஷத் பாஷ்யகாரர்] ச்ருத ப்ரகாசிகைக்கு ஒரு வியாக்யானமாக भावप्रकाशिकै பணித்திருப்பது ப்ரஸித்தம். அதில் (முதல் அத்யாயம் இரண்டாவது பாதத்தில், அந்தர்யாமியதிகரணத்தில்) [பக்கம் 253, வரி 8.] "एवं प्राप्त इतीत्यस्यानन्तरं सूत्र इति क्वचित् कोशे पठ्यते ; न तस्य प्रयोजनं पश्यामः ।" என்கிற பங்க்திகள் காணப்படுகின்றன. அந்தர்யாம்யதிகரணச் ச்ருதப்ரகாசிகையில் * एवं प्राप्त इति * என்கிற வாக்யத்திற்குப் பிறகு 'सूत्रे' என்று ஒரு பதம் சில ஸ்ரீகோசங்களில் காணப்படுகின்றதாகவும், அது தமக்கு அந்வயிக்கவில்லையென்பதாகவும் ஸ்ரீமத் ரங்கராமாநுஜ ஸ்வாமி ஸாதித்திருப்பதாகத் தேறுகின்றது. 'सूत्रे' என்பது இல்லாமலே சில ஸ்ரீகோசங்கள் தமக்குக் கிடைத்திருப்பதாகவும் இதனால் காட்டினராகிறார். இப்போதுள்ள ச்ருதப்ரகாசிகை அச்சுப்பதிப்புகளில், பூர்வபக்ஷம் முடிந்து ஸித்தாந்தம் ஆரம்பிக்கையில் * एवं प्राप्त इति * என்பதற்குப்பிறகு [सूत्रे] என்பது காணப்படுகிறது. இது அந்வயிக்கவில்லையென்று பாவப்ரகாசிகாகாரர் ஸாதித்திருக்கிறபடி அந்வயிக்காமலிருப்பதும் வாஸ்தவம்தான். இதைப்பற்றின உண்மையை ஆராய்ந்து பார்த்ததில், [सूत्रे] என்பதற்குப் பிறகு சில வாக்கியங்கள் விட்டுப்போயினவென்று ஸ்பஷ்டமாகத் தெரியவந்தது.

"सूत्रे अधिदैवम् अधिलोकमिति न निर्दिष्टम् । दैवलोकादिष्वित्यपि न निर्दिष्टम् । अधिदैवाधिलोकादिष्वित्येव निर्दिष्टम् । तस्मात्तदर्थपरम । तथा सति अधिशब्दसप्तम्योः पौनरुक्त्यात् । अपि तु वाक्यपरमित्यभिप्रायेण व्याचष्टे— अधिदैवाधिलोकादिपदचिह्नितेषु वाक्येष्विति ।"

என்று இவ்வளவு பங்க்திகள் ச்ருதப்ரகாசிகாசார்யர் அருளிச் செய்தவை. இவற்றுள் [सूत्रे] என்பதற்கு மேல் [व्याचष्टे] என்கிற வரையிலும் உள்ள பங்க்திகள் விடுபட்டுப்போயிருக்கின்றன. व्याचष्टे என்பதில் அந்வயிக்கும்படியாக * अधिदैवाधिलोकादिपदचिह्नितेषु वाक्येष्विति * என்று முற்றுப்புள்ளி போட்டுத் தனியே பிறுத்தப்படவேண்டும். அச்சுப்பதிப்பில் அப்படி நிறுத்தாமல் ....वाक्येष्वित्यनेन - என்று மேலோடே சேர்த்துப் பதிப்பித்துள்ளார்கள். இது நிற்க.

அச்சில் விடுபட்டுப் போயிருக்கின்றனவென்று மேலே நாம் எடுத்துக்காட்டின வாக்கியங்கள் அச்சில் மாத்திரம் விடுபட்டுப்போயிருக்கவில்லை ; ஓலைப்புத்தகங்களிலும் விடுபட்டன என்பது முன்னம் எடுத்துக்காட்டிய भावप्रकाशिकासूक्तियினாலும் ஸ்பஷ்டமாகிறது. முந்நூறு நானூறு வருஷங்களுக்கு முன்னமிருந்த ஓலை ஸ்ரீகோசங்களிலும் இத்தகைய கோளாறுகள்

[illegible] நன்கு விளங்குகின்றது. [ सूत्रे ] என்பதற்கு மேல் இருக்க [illegible] இல்லாமையினாலே सूत्रे என்பது அக்விதமாய்ப் போகவே அதையும் விட்டுவிட்டுச் சில ஸ்ரீகோசங்கள் எழுதப்பண்ணப் பட்டனபோலும். அப்படிப்பட்ட ஸ்ரீகோசமும் [illegible]காரர்க்குக் கிடைத்ததாக ஸ்பஷ்டமாகிறது.

62. திருமழிசைப்பிரான் திருவாய்மலர்ந்தருளிய நான்முகன் திருவந்தாதியில் அறுபத்து மூன்றும் பாசுரம்—" தரித்திருந்தேனாகவே தாராகணப்போர், விரித்துரைத்த வெந்நாகத்துன்னை " இத்யாதி. இவ்விடத்துப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானத்தை மறுத்து 'ஆழ்வார்கள் காலநிலை' என்னுமோர் புத்தகத்தில் புலவரொருவர் எழுதியிருப்பதாவது :—

" இதன் முதலிரண்டடிகட்கு— 'நக்ஷத்ர கதியாயிருக்கிற ஜ்யோதிஸ்-சாஸ்த்ரத்தைச் சொன்ன திருவனந்தாழ்வானுக்கு ஆத்மாவாயிருக்கிற உன்னை' என்பது பூர்வ வியாக்கியானம். இதன்படி 'தாராகணப்போர் விரித்துரைத்த' என்ற விசேடணம் ஆதிசேடனுக்கு உரியதாகும். ஆனால் அவனை இவ்வாறு விசேடிப்பதற்குரிய நேரான பொருத்தமொன்றுங் காணப்படவில்லை. ஆதிசேடன் செய்த சோதிடநூல் இன்னதென்பதும் தெரிந்திலது. அதனால் 'வெந்நாகத்துன்னை' என்றுள்ள பாடம் 'விரித்துரைத்த வென்னாகத்துன்னை' என்றிருந்த பழம் பாடத்தினின்றும் மாறியதோ என்று கருத இடந்தருகின்றது. '(சோதிடநூலை) விரித்துரைத்த (என்+ஆகத்து = ) எனது நெஞ்சிடமாகவுள்ள, உன்னை' என்பது இப்பாடப்படி பொருளாகும்.......இங்ஙனம் 'தாராகணப்போர் விரித்துரைத்த, என்பது ஆழ்வார்க்குரிய விசேடணமாயின், தம்மாற் செய்யப்பெற்ற சோதிடநூலொன்றைப்பற்றி அவர் குறிப்பிட்டனராவர். அத்தகைய நூல் யாது என்பது ஆராய்ந்து அறிதற்குரியது. " என்றும்.

பகவத் க்ருபையாலும் ஸதாசார்ய கடாக்ஷத்தாலும் ஆழ்வார்களருளிச்செயல்களின் உண்மைப் பொருள்களை நன்குணர்ந்து உலகமுகக்க அருளிச்செய்தவரும், இற்றைக்குச் சற்றேறக்குறைய எழுநூறு ஆண்டுகட்கு முன்பு ஸர்வஜ்ஞராய்ப் புகழ்பெற்று விளங்கினவருமான பெரிய வாச்சான் பிள்ளை பிழையான பாடமொன்றைக்கொண்டு தவறாக வியாக்கியானஞ் செய்து விட்டாரென்று எழுதத் துணிந்தது மிக்க ஸாஹஸமே. " வெம்நாகத்து " என்பது பெரிய வாச்சான் பிள்ளை உரைசெய்தருளின பாடம். " என் ஆகத்து " என்பது இப்புதிய புலவர் கற்பிக்கும் பாடம். பழைய பாடத்திற் பொருத்தமின்மை கூறப்புகுமவர் தாங் கூறும் பாடத்தில் ஒரு பொருத்தம் காட்டித் தரவேண்டும். ஆதிசேஷன் செய்த சோதிடநூல் இன்னதென்று தெரியவில்லையென்னுமிவர், திருமழிசைப்பிரான் செய்த சோதிடநூல் இன்னதென்று தெரிந்துகொண்டவராதல் வேண்டும். " பார்க்கவம் பிருகு சூத்திரம் முதலிய கணித சோதிட கிரந்தங்கள் உள்ளன; இவைபோன்றதொன்றே பிருகுவம்சத்தவரான ஆழ்வார் அருளிச் செய்ததாக வேண்டும் " என்று அநுமானங் கூறுகின்றாரிப்பெரியார். இத்தகைய அநுமானம் ஆதிசேஷன் பக்கல் கூடாமைக்குக் காரணமறிகின்றிலோம். வேதாங்கங்களுள் ஒன்றான ஜ்யோதிஷத்திற்கு ஆதிசேஷன் ப்ரவர்த்தகன் என்னுமிடத்தை நாம் பல பிரமாணங்கள் கொண்டு முதலிக்கவல்லோம்.

ஆளவந்தார் அருளிச்செய்த ஸ்தோத்ரரத்நத்தில் திருவனந்தாழ்வானைப் பற்றின ச்லோகமொன்றில் * " ப்ரக்ருஷ்ட விஜ்ஞாநபலைகதாமநி " * என்ற விடத்திற்கு வியாக்கியானஞ்செய்தருளாநின்ற ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் (ஸ்தோத்ரபாஷ்யத்தில்) " पञ्चविधज्योतिस्सिद्धान्त प्रवर्तकत्वेन ज्ञानप्रकर्षोऽस्य प्रसिद्धः " என்று அருளிச்செய்திருப்பதொன்றே போதும். " वमासे ज्योतिषी विद्या

விளங்கிருக்கின்றனவென்று நன்கு விளங்குகின்றது. [सूत्रे] என்பதற்கு மேல் இருக்க வேண்டிய வாக்கியங்கள் இல்லாமையினாலே सूत्रे என்பது அந்விதமாய்ப் போகவே அதையும் விட்டுவிட்டுச் சில ஸ்ரீகோசங்கள் எழியருளப்பண்ணப் பட்டனபோலும். அப்படிப்பட்ட ஸ்ரீகோசமும் भावप्रकाशिकाकारர்க்குக் கிடைத்ததாக ஸ்பஷ்டமாகிறது.

62. திருமழிசைப்பிரான் திருவாய்மலர்ந்தருளிய நான்முகன் திருவந்தாதியில் அறுபத்து மூன்றும் பாசுரம்—"தரித்திருந்தேனாகவே தாராகணப்போர், விரித்துரைத்த வெந்நாகத்துன்னை" இத்யாதி. இவ்விடத்துப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தை மறுத்து 'ஆழ்வார்கள் காலநிலை' என்னுமோர் புத்தகத்தில் புலவரொருவர் எழுதியிருப்பதாவது :—

"இதன் முதலிரண்டடிகட்கு— 'நக்ஷத்ர கதியாயிருக்கிற ஜ்யோதிஸ்-சாஸ்த்ரத்தைச் சொன்ன திருவனந்தாழ்வானுக்கு ஆத்மாவாயிருக்கிற உன்னை' என்பது பூர்வ வியாக்கியானம். இதன்படி 'தாராகணப்போர் விரித்துரைத்த' என்ற விசேடணம் ஆதிசேடனுக்கு உரியதாகும். ஆனால் அவனை இவ்வாறு விசேடிப்பதற்குரிய நேரான பொருத்தமொன்றுங் காணப்படவில்லை. ஆதிசேடன் செய்த சோதிடநூல் இன்னதென்பதும் தெரிந்திலது. அதனால் 'வெந்நாகத்துன்னை' என்றுள்ள பாடம் 'விரித்துரைத்த வென்னாகத்துன்னை' என்றிருந்த பழம் பாடத்தினின்றும் மாறியதோ என்று கருத இடந்தருகின்றது. '(சோதிடநூலை) விரித்துரைத்த (என்+ஆகத்து =) எனது நெஞ்சிடமாகவுள்ள, உன்னை' என்பது இப்பாடப்படி பொருளாகும்......இங்ஙனம் 'தாராகணப்போர் விரித்துரைத்த, என்பது ஆழ்வார்க்குரிய விசேடணமாயின், தம்மாற் செய்யப்பெற்ற சோதிடநூலொன்றைப்பற்றி அவர் குறிப்பிட்டவராவர். அத்தகைய நூல் யாது என்பது ஆராய்ந்து அறிதற்குரியது." என்றும்.

பகவத் கிருபையாலும் ஸதாசார்ய கடாக்ஷத்தாலும் ஆழ்வார்களருளிச்செயல்களின் உண்மைப் பொருள்களை நன்குணர்ந்து உலகமுய்க்க அருளிச்செய்தவரும், இற்றைக்குச் சற்றேறக்குறைய எழுநூறு ஆண்டுகட்கு முன்பு ஸர்வஜ்ஞராய்ப் புகழ்பெற்று விளங்கினவருமான பெரியவாச்சான் பிள்ளை பிழையான பாடமொன்றைக்கொண்டு தவறாக வியாக்கியானஞ் செய்துவிட்டாரென்று எழுதத் துணிந்தது மிக்க ஸாஹஸமே. "வெந்நாகத்து" என்பது பெரியவாச்சான் பிள்ளை உரைசெய்தருளின பாடம். "என் ஆகத்து" என்பது இப்புதிய புலவர் கற்பிக்கும் பாடம். பழைய பாடத்திற் பொருத்தமின்மை கூறப்புகுமவர் தாங் கூறும் பாடத்தில் ஒரு பொருத்தம் காட்டித் தரவேண்டும். ஆதிசேஷன் செய்த சோதிடநூல் இன்னதென்று தெரியவில்லை யென்னுமிவர், திருமழிசைப்பிரான் செய்த சோதிடநூல் இன்னதென்று தெரிந்துகொண்டவராதல் வேண்டும். "பார்க்கவம் பிருகு சூத்திரம் முதலிய கணித சோதிட கிரந்தங்கள் உள்ளன; இவைபோன்றதொன்றே பிருகுவம்சத்தவரான ஆழ்வார் அருளிச்செய்ததாக வேண்டும்" என்று அனுமானங் கூறுகின்றாரிப்பெரியார். இத்தகைய அனுமானம் ஆதிசேஷன் பக்கல் கூடாமைக்குக் காரணமறிகின்றிலோம். வேதாங்கங்களுள் ஒன்றான ஜ்யோதிஷத்திற்கு ஆதிசேஷன் ப்ரவர்த்தகன் என்னுமிடத்தை நாம் பல பிரமாணங்கள் கொண்டு ஸ்தாபிக்கவல்லோம்.

ஆளவந்தார் அருளிச்செய்த ஸ்தோத்ரரத்நத்தில் திருவனந்தாழ்வானைப் பற்றின ச்லோகமொன்றில் * "ப்ரக்ருஷ்ட விஜ்ஞாநபலைகதாமநி" * என்ற விடத்திற்கு வியாக்கியானஞ் செய்தருளாநின்ற ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் (ஸ்தோத்ரபாஷ்யத்தில்) "पञ्चविधज्योतिस्सिद्धान्त प्रवर्तकत्वेन ज्ञानप्रकर्षोऽस्य प्रसिद्धः" என்று அருளிச்செய்திருப்பதொன்றே போதும். "नभासे ज्योतिषी विद्या

யதுபரி தராதலே । தமநந்தமநந்தஸ்ய தல்பம் ஸங்கல்பயே ஹ்ருதி ॥" என்கிற பிரமாண வசனமொன்றும் ப்ரஸித்த மாகவுள்ளது. இன்னமும் ஊன்றி ஆராயப்புகில் இத்தகைய ப்ரமாணங்கள் பல கிடைக்கக் குறையில்லை. இது நிற்க. திருமழிசைப்பிரான் பல மதங்களிலும் புகுந்து அந்தந்த மதங்கட்குச் சார்பாகப் பல நூல்களுமியற்றினரென்னும் ப்ரஸித்தியிருந்தாலும் சோதிட நூல் இயற்றி யருளினாரக எங்கும் கூறப்படவில்லை. அங்ஙனே ஏதேனுமொருநூல் தாம் செய்தருளி யிருந்தாலும் அதனை இங்கு அநுவதித்தருளிச் செய்தற்கு ப்ரஸக்தி யொன்றுமில்லை. இவ் வண்ணம் அருளிச்செய்யும் வழக்கம் ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களிலொன்றிலுமில்லை. ஆகவே, 'என் ஆகத்து' என்று பாடத்தை மாறுபடுத்தல் பயனற்றது. ஸர்வஜ்ஞர்களான பூர்வாசார்யர்களின் வியாக்யான ஸ்ரீஸூக்திகளில் அல்பஜ்ஞரான நாம் குறை கூறுதற்குச் சிறிதுமதிகாரமுடையோமல்லோம். ஸ்ரீமந் நாதமுனிகள் தொடங்கி நம் மணவாளமாமுனிகள் வரையிலுள்ள ஸதாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகள் வேதவாக்கிலுஞ் சிறந்த ப்ரமாணமாவன வென்று திண்ணிதாகக் கொள்வாரது திருவடிகளே சரணம். பூருவர்களருளிச்செய்த பொருள் கட்கு முரண்படாமல் விசேஷார்த்தங்களை விவேகித்துக் கூறவல்லார் எவ்வளவும் கூறலாம். இதுவே கலையறக்கற்ற மாந்தர் பணியாம்.



63. ஸாமாந்ய கவிகளின் அருமையான வாக்குகளில் நேர்ந்துள்ள சில பிறழ்வுகளை எண்டுத்துக் காட்டி ரஸிகமநோவிநோதநம் செய்வோம். குவலயாநந்தத்தில் துல்யயோகிதா லங்காரப்ரகரணத்தில்—" संजातपत्रप्रकरान्वितानि समुद्वहन्ति स्फुटपाटलत्वम् । विकस्वराण्यर्ककराभिमर्शात् दिनानि पद्मानि च वृद्धिमीयुः ॥ " என்கிறவொரு ச்லோகம் உதாஹரிக்கப்பட்டுள்ளது. இதில் க்ரீஷ்மருதுவின் தினங்களுக்கும் பத்மங்களுக்கும் சிலேடையினால் ஸாம்யம் நிர்வஹிக்கப் பட்டுளது. இதில் "ஸஞ்ஜாதபத்ரப்ரகராந்விதாநி" என்கிற முதல் விசேஷணத்தை விவேகிகள் நன்கு பராமர்சிக்கவேண்டும். பத்மங்களுக்கு ஸஞ்ஜாதபத்ரப்ரகராந்விதத்வம் உள்ளது தான்; இது திநங்களுக்கு எப்படி? என்று விமர்சிக்கவேணும். இங்கு வியாக் கியானம் செய்தவர் ஏதோ எழுதியிருக்கிறார். அதனால் விவேகிகள் த்ருப்தி பெறார்கள். இங்கு ஒரு பிறழ்வு; ஸஞ்ஜாத என்பதை [ सज्जात ] என்று திருத்தி வாசித்துப் பாருங்கள்; [ सज्जैः आतपत्रप्रकरैः अन्वितानि ग्रीष्मर्तुदिनानि ] வேனிற் காலத்தில் எங்குப்பார்த்தாலும் குடைமயமாகவே யிருக்குமன்றோ? ஸஜ்ஜங்களான [ஸந்நத்தங்களான] आतपत्रप्रकरங்களோடே - குடைகளின் கூட்டங்களோடே, अन्वितानि என்றாயிற்று. பத்மபக்ஷத்திலும் सद्भिः—साध्वैः, जातैः—प्रादुर्भूतैः, पत्रप्रकरैः—दलसमूहैः अन्वितानि என்றாகிறது. இப்போதுள்ள ஸ்வாரஸ்யாதிசயத்தை ரஸிகர்கள் நன்கு உணர்வார்கள்.



64. குவலயாநந்தத்திலேயே விஷமாலங்கார ப்ரகரணத்தில், "யதா மதீயே வரதராஜஸ்தவே" என்று தொடங்கி "भानुर्निशासु भवदङ्घ्रिसरोजशोभालोभात् प्रताप्य किरणोत्करमात्मभानम् । तत्रोद्धृते हुतवहात् क्षणमुत्सरागे तापं भजत्यनुदिनं स हि मन्दतापः" என்கிற ச்லோக முதாஹரிக்கப்பட்டுள்ளது. இது தேவப்பெருமாள் விஷயமாக அப்பய தீக்ஷிதர் இயற்றிய ச்லோகம். இதன் கருத்தாவது—பேரருளாளனே! ஸூர்யனானவன் உன்னுடைய திருவடித்

தாமரையின் மிகச்சிவந்த சோபையைத் தான் அடைய விரும்பினான். [ஸூர்ய கிரணங்கள் இரவில் அக்நியை ஆவேசிக்கின்றனவென்று வேதத்திற் கூறப்பட்டிருப்பதை ஸ்மரிப்பது.] என்ன செய்தால் தன் கிரணங்கள் தேவப்பெருமாளுடைய திருவடிபோல் சிவக்கும் என்று பார்த்து இரவெல்லாம் தன் கிரணங்களை அக்நியில் புகுவித்துப் பொழுது விடியுமளவும் நன்றாகக் காய்ச்சினான். நல்ல சிவப்பு உண்டாய்விட்டது என்று கண்டு அக்நியில் நின்றும் கிரணங்களை யெடுத்து வெளியில் பரப்பினான். அவை முதலில் ப்ரஸரிக்கும்போது சிவந்திருந்தாலும் க்ஷணகாலத்திற்குள் சிவப்பு மாறிப் போகவே, ஐயோ! நாம் மிகவும் சிரமப்பட்டுச் செய்த காரியம் அற்ப பலனாய்த் தலைக்கட்டிற்றே!' என்று ஹ்ருதயத்தில் தாபத்தை யடைந்திட்டான். அந்தத் தாபமே வெய்யிலாகக் காண்கிறது. இவ்விதமாக அவன் முயற்சி செய்வதும், அது அற்ப பலனாவதும், அதனால் அவன் தாபமடைவதும் ஒருநாள் இரண்டு நாள் அன்று; அநாதி காலமாக நாடோறும் இந்த ஸம்பவம் நிகழ்ந்து வருகின்றதென்பதாம். இந்த ச்லோகத்தில் "ஸ ஹி மந்ததாப: என்பதற்கு எங்கே அந்வயம்? என்ன அர்த்தம்? என்று பராமர்சிக்கவேணும். வியாக்கியானம் செய்தவர் எழுதியிருக்கும் பொருள் விரஸமேயாகும். "ஸ ஹி மந்ததாத:" என்று திருத்தி வாசித்துப் பாருங்கள். இப்போது மிகவும் ரஸ்யமான பொருள் கிடைக்கும். ஸூர்யன் செய்த காரியம் பயன்படவில்லையாகில் அவன் அதை விட்டுத் தொலைக்கலாமே; ஒவ்வொரு நாளும் முயற்சி செய்வதும் வருந்துவதுமாக இருப்பானேன்? "தாபம் பஜதி அநுதிநம்" என்கிறீரே, இவ்வளவு மூடனா அந்த ஸூர்யன்? என்று கேள்வியுண்டாக, அதற்கு விடை கூறுகிறார் "ஸஹி மந்ததாத:" என்று; * சநிமந்தௌ பங்குகாலௌ * என்ற அமரகோசத்தின்படி மந்தனென்னும் பெயரையுடையனாகிய சநியானவன் ஸூர்யனது புத்திரன் என்பது ப்ரஸித்தம். "காரணகுணா: கார்யே ஸங்க்ராமந்தி" என்கிற நியாயத்தின்படி. பிதாவான ஸூர்யன் மூடனானபடியால்தான் புத்திரனும் மூடனாகப் பிறந்தான். புத்திரனுடைய ஸுப்ரஸித்தமான மந்தத்வத்தைக்கொண்டு பிதாவின் மந்தபுத்தித்வத்தை அனைவருமறியலாமென்று வெகுசமத்காரமாகக் காட்டினாராயிற்று. இங்ஙனே கவியின் விவக்ஷையைக் கொள்ளாவிடில் (ஸ ஹி) என்றது மிகவும் பயனற்றொழியும். இந்தத் திருத்தங்கள் ஸஹஸா அடியேன் செய்பவையல்ல. ஒரு அக்ஷரத்தின் விபர்யாஸத்தினால் ஏற்படுகிற ரஸபங்கம் எவ்வளவென்பதை விவேகிகள் ஆழ்ந்துணரவேணும். .... .... ....

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம்

**அண்ணங்கராசாரியர்**

எழுதிய

# அறுபத்துநான்கு நன்மொழிமாலை

முற்றிற்று.

ஸ்ரீ:

# 64. நல்வார்த்தைகளிலுள்ள விஷயங்களுக்கு அட்டவணை.

1. நம்மீது குற்றங்குறை கூறுபவர்களை மஹோபகாரகர்களாகக் கொள்ளவேண்டும்.
2. நம்முடைய ஸ்வல்ப குணங்களைப் பிறர்புகழவேணுமென்று எதிர்பார்க்கலாகாது.
3. நமது வாத்ஸல்ய குணத்தினால் நம்மைச் சிலர் புகழ்ந்தாலும் நாம் இறுமாந்திருக்கலாகாது.
4. நம்மிடத்தில் குற்றங்குறைகள் மலிந்திருப்பதாகவே எப்போதும் நாம் நினைக்கவேண்டும்.
5. பிறர் நம்மீது ஏற்றுகிற குற்றங்களையும் நாம் மறுக்கலாகாது.

6, 7. நமக்கு விபரீத ஞானம் மிகமிக விருப்பதனால் நமது மனத்தை நாம் பிரமாணமாகக் கொள்ளலாகாது.

8, 9. பிறர் நம்மை தூஷிப்பதனால் நமக்கு ஒரு ஹானியும் நேராதென்று உறுதி கொள்ளவேணும்.

10. பிறர் கூறும் நிந்தைகளைச் சிறந்த ஸத்காரமாகவே நினைக்க வேண்டும்.
11. பெருமதிப்பாளர்களைப் பற்றியே உலகர் பழிதூற்ற முன்வருவர்களென்பது.
12. அவரவர்களுடைய தன்மைக்கு ஏற்ற போதுபோக்குகளென்று உகப்பது.
13. இப்படிப்பட்ட மனப்பழக்க முடையாரை ஒருவரும் வெல்லகில்லாரென்பது.

14, 15. "ஸ்வாமி திருவுள்ளத்தில் என்ன சீதளம்" என்பதைப்பற்றின திருத்தம்.

16. பச்சைக் கல்யாணத்தில் சீர்பாடலைப்பற்றின திருத்தம்.
17. "ஸாதித்தருளாய்" என்பதைப்பற்றின விவரணம்.

18—20. வியாதிகளுக்கு மருந்து அவசியமா! என்பதைப்பற்றின ஸ்வாபிப்ராயம்.

21. வைதிகச்ரத்தை நாளடைவில் குறைந்து வருவதைப்பற்றின நிர்வேதம்.
22. சிரோமணிப் படிப்பின் பர்யவஸாநமின்னதென்றுரைத்தல்.
23. வேதாந்தசாஸ்த்ரப்பயிற்சியும் குறைந்துபோனதைப்பற்றி வருந்துதல்.
24. தேஹயாத்திரையைப்பற்றிக் கவலைகொள்வதை மறப்போமல்லோமென்பது.
25. ஸ்ரீபரகாலஸ்வாமி ஸ்ரீமதஹோபிலஸ்வாமி போல்வாருடைய வித்யாபக்ஷபாதம்.
26. ஸ்ரீவைஷ்ணவமடாதிபதிகள் திருவுள்ளம்பற்றவேண்டிய விஷயம்.

ஸ்ரீ:

# 64 நல்வார்த்தைகளிலுள்ள விஷயங்களுக்கு அட்டவணை.

1. நம்மீது குற்றங்குறை கூறுபவர்களை மஹோபகாரகர்களாகக் கொள்ளவேண்டும்.

2. நம்முடைய ஸ்வல்ப குணங்களைப் பிறர்புகழவேணுமென்று எதிர்பார்க்கலாகாது.

3. நமது வாத்ஸல்ய குணத்தினால் நம்மைச் சிலர் புகழ்ந்தாலும் நாம் இறுமாந்திருக்கலாகாது.

4. நம்மிடத்தில் குற்றங்குறைகள் மலிந்திருப்பதாகவே எப்போதும் நாம் நினைக்கவேண்டும்.

5. பிறர் நம்மீது ஏற்றுகிற குற்றங்களையும் நாம் மறுக்கலாகாது.

6, 7. நமக்கு விபரீத ஞானம் மிகமிக விருப்பதனால் நமது மனத்தை நாம் பிரமாணமாகக் கொள்ளலாகாது.

8, 9. பிறர் நம்மை நலிவிப்பதனால் நமக்கு ஒரு ஹானியும் நேராதென்று உறுதிகொள்ளவேணும்.

10. பிறர் கூறும் நிந்தைகளைச் சிறந்த ஸத்காரமாகவே நினைக்கவேண்டும்.

11. பெருமதிப்பாளர்களைப் பற்றியே உலகர் பழிதூற்ற முன்வருவர்களென்பது.

12. அவரவர்களுடைய தன்மைக்கு ஏற்ற போதுபோக்குகளென்று உகப்பது.

13. இப்படிப்பட்ட மனப்பழக்க முடையாரை ஒருவரும் வெல்லவில்லாரென்பது.

14, 15. "ஸ்வாமி திருவுள்ளத்தில் என்ன சீதளம்" என்பதைப்பற்றின திருத்தம்.

16. பச்சைக் கல்யாணத்தில் சீர்பாடலைப்பற்றின திருத்தம்.

17. "ஸாதித்தருளாய்" என்பதைப்பற்றின விவரணம்.

18—20. வியாதிகளுக்கு மருந்து அவசியமா? என்பதைப்பற்றின ஸ்வாபிப்ராயம்.

21. வைதிகச்ரத்தை நாளடைவில் குறைந்து வருவதைப்பற்றின நிர்வேதம்.

22. சிரோமணிப் படிப்பின் பர்யவஸாநமின்னதென்றுரைத்தல்.

23. வேதாந்தசாஸ்த்ரப்பயிற்சியும் குறைந்துபோனதைப்பற்றி வருந்துதல்.

24. தேஹயாத்திரையைப்பற்றிக் கவலைகொள்வதை மறப்போமல்லோமென்பது.

25. ஸ்ரீபரகாலஸ்வாமி ஸ்ரீமதஹோபிலஸ்வாமி போல்வாருடைய வித்யாபக்ஷபாதம்.

26. ஸ்ரீவைஷ்ணவமடாதிபதிகள் திருவுள்ளம்பற்றவேண்டிய விஷயம்.

27. திருவிருத்தப்பாசுரமொன்றின் ரஸாநுபவம்.

28—36. புண்டரீகமென்னும் வடசொல்லின் பொருளைப்பற்றின விரிவான விமர்சம்.

37—39. திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் தனித்தனிப்பிரபந்தங்கள்.

40—48. மூர்க்கர்களுக்கு ஹிதோபதேசம் நிஷ்பலமாகுமென்பதை விவரிக்கப் புகுந்து, ராவணனுக்குக்கிடைத்த உபதேசங்களனைத்தையும் விவரித்து அவை நிஷ்பலமானதை நிகமித்தல்.

49. எதுவும் தெய்வச் செயலேயென்பதை இரண்டு உதாஹரணங்களினால் தாபித்தல்.

50. பிள்ளைலோகாசாரியர் தேசிகனுக்கு ஆசார்யரான முறைமையில * சீரொன்று தூப்புல்தனியனிட்டது மறுக்கத்தகாதென்பது.

51. தேசிகன் செய்தருளின மஹோபகாரங்களின்நிரூபணம்.

52. ஸ்ரீதேசிகவிக்ரஹங்களை திவ்யதேசங்களில் உள்ளே வைத்து ஆராதிப்பவர்களும் வெளிகளிலே தனிக்கோவில்கட்டி ஆராதிப்பவர்களும்.

53. அடியேனெழுதியுள்ள வாதவிவாத க்ரந்தங்களெல்லாம் பாகீயதுர்வாத ப்ரதிக்ஷேபத்திற்காகவே தோன்றியவை யென்பது.

54. உயர்ந்த வைதிக மதத்திற் சேர்ந்த நாம் இதர மதங்களையும் மதப்ரவர்த்தகர்களையும் தூஷிக்கலாகாதென்பது.

55. * வணங்குந் துறைகள் பலபல வாக்கி யென்கிற திருவிருத்தப் பாசுரத்தின் கம்பீரத்தன்மையை விவரித்தல்.

56, 57. இதர ஆசார்யர்களை லாகவப்படுத்திப் பேசுவது நிஷ்பலமென்பது பற்றி.

58. உலகம் போற்ற நின்ற ஆசாரியர்களின் பெருமையெங்கே! நாமெங்கே!

59. அவரவர்கள் தம்தம் ஆசாரியர்களைக்கொண்டாடுவதொன்றே தகும்.

60, 61. ஆசார்யஹ்ருதய—தத்வ்யாக்யானங்களின் பெருமையும், இவற்றை அச்சிட்டவர்களால் நேர்ந்த விபரீதங்களும்.

62. ஆசார்யஹ்ருதயத்தில் "மூன்றுக்குத்துக்குப் பிழைத்த அருளினை நோய்" என்ற விடத்து வியாக்கியானத்தைப்பற்றின விரிவான ஆராய்ச்சி.

63, 64. தத்வத்ரய வியாக்கியானத்தில் "அவர்ஜநீயமான ரோகமோ" என்று காணப்படுகிற பாடத்தின் அபத்தத் தன்மையும் இங்கு உண்மைப் பாடத்தின் உபபத்திகளும்.

விஷய ஸூசிகை முற்றிற்று.

# அறுபத்திநான்கு நல்வார்த்தைகள்.

[நிகழும் ஜயவாண்டு பங்குனித்திங்களில் விசாகத்தின்று அடியேனுக்கு அறுபத்திநான்கு வயது பூர்த்தியாவதை முன்னிட்டு, ஆப்தர்கள் அடிக்கடி நினைவிற் கொள்ளுமாறு அறுபத்திநான்கு நல்வார்த்தைகளை விஜ்ஞாபிக்க விரும்புகிறேன். இவற்றை நல்வார்த்தை யென்பது ஸ்வாபிப்ராயத்தாலே. இந்த நல்வார்த்தைகள் ஏகவிஷயகங்களல்ல; அநேக விஷயகங்கள்.]

1. நம்மைப்பற்றிப் பிறர் குற்றமாகவோ குறையாகவோ ஏது கூறினாலும் சித்தத்தில் சிறிதும் விகாரமின்றியே உல்லாஸமாக விருக்கப் பழகவேண்டும். உண்மையில் நம்மிடத்தில் குணங்கள் மெலிந்து தோஷங்களே மலிந்து கிடக்குமாதலால் அப்படிப்பட்ட தோஷங்களை நேரிலோ மறைவிலோ எடுத்துரைப்பாருளரேல் அவர்களை நாம் நமக்கு மஹோபகாரம் செய்தவர்களாக நினைக்கவேண்டும்.

2. "குணக்ஷுதலிபிக்ரமாத்" என்று வேதாந்ததேசிகன் பணித்த முறையில் நம்மிடத்தில் ஸ்வல்ப குணங்களுமிருக்கலாம். அதைப்பிறர் பாராட்டிப் புகலவேண்டுமென்று நாம் ஆசைப்படுவது தகுதியன்று.

3. குற்றத்தைக் குற்றமாகவும் நற்றத்தை நற்றமாகவும் கொள்வதைவிட, குற்றத்தையும் நற்றமாகக் கொள்வதே நலமென்று பெரியார் கூறுவதால் இத்தகைய நலம்வாய்ந்த சில மஹான்கள் தம்முடைய வாத்ஸல்ய குணத்தின் மஹிமையினால் குற்றங்களில் சிறிதும் கண் வைத்திடாமல் நற்றமாகவே பாராட்டிப் புகழ்வர்களெனினும் அந்தப் புகழ்ச்சியில் நாம் மயங்கிவிடக்கூடாது. 'இவர்கள் நம்மிடத்திலில்லாதவற்றை ஏறிட்டுக் கொண்டாடுகிறார்கள்' என்றே நாம் உள்ளபடி நினைக்கவேண்டும்.

4. குற்றங்குறைகளைக் கூறுமவர்களே ஸத்யவாதிகள். நம்மீது பிறர்கூறுகிற குற்றங்குறைகள் உண்மையாக நம்மிடத்தில் இல்லையென்று நாம் நினைக்கக்கூடும். ஆனால் அப்படி நினைப்பது தவறு; நம்மிடத்தில் இல்லாதவற்றைப் பிறர் சொல்லார்கள் என்றும், நமக்குத்தெரியாதபடி நம்மிடத்தில் இருப்பவைகளையே பிறர் தெரிந்து சொல்லுகிறார்கள் என்றும் நாம் நினைக்கவேண்டும்.

5. எதற்காக இப்படி நினைப்பது? நம்முடைய குற்றமோ நற்றமோ நமக்குத் தெரியாமலிருக்குமோ? பிறர் பொறாமையினாலும் மற்றும் பலவகைக் காரணங்களினாலும் நம்மீது சில பல குற்றங்களை ஏறிட்டுக் கூறினால் அவற்றை நாம் எதற்காக இசையவேண்டும்? உள்ள குற்றமாயிருந்தால் இசைந்து கொள்வோம்; இல்லாது ஏறிட்டுக் கூறுகிற குற்றமாயிருந்தால் மறுப்போம்—என்று இங்ஙனே சிலர் வாதம் செய்யக்கூடும்; அன்னவர்களுக்கு நாம் சொல்லுவதாவது, "உள்ள குற்றமாயிருந்தால் இசைந்து கொள்வோம்" என்று இவ்வளவாவது சொல்லுகிறீர்களே, இதுவே பரமானந்தம்; உள்ள குற்றங்களையும் இல்லை செய்வார் மலிந்த இவ்வுலகில் உள்ள குற்றங்களை உள்ளபடி ஒப்புக்கொள்வார் சிலராவது தேறினால் ஈதொப்பதின்ப முண்டோ? இல்லாது ஏறிட்டுக் கூறுகிற குற்றங்களை, நீங்கள் மறுத்துக்கூறினாலும் உள்ள குற்றங்களையாவது ஒப்புக்கொள்வதற்காக உகக்கிறோம் என்பதே.

6. ஆனால், உண்மையில் நம்மிடத்து இல்லாத குற்றங்குறைகளைப் பிறர் ஏறிட்டுக் கூறுகிறார்களென்று நினைப்பது மிகவும் தவறு. வேதாந்த தேசிகன் ஸுபாஷித நீவியில் ஓர் அற்புதமான ஸுபாஷிதம் பணித்துள்ளார்; அதாவது, * [illegible] பச்யதி பரேஷாம் தோஷான் அஸதோபி, ஸதோபி நைவ குணான், விபரீதமிதம் ஸ்வஸ்மின் மஹிமா மோஹாஞ்ஜனஸ்யைஷ: * என்பதாம். இதன் பொருளாவது, பிறரிடத்தில் எவ்வளவு குணமிருந்தாலும் அவற்றை நாம் தெரிந்துகொள்வது கிடையாது; அவர்களிடத்தில் தோஷம் இல்லாவிடினும் அது மலைமலையா யிருப்பதாகத் தெரிந்து கொள்ளுகிறோம்; இது ஸ்வாத்ம விஷயத்தில் விபரீதமாகிறது: (அதாவது) நம்மிடத்தில் மலை மலையாக தோஷங்களிருந்தாலும் அவற்றிலொன்றுகூட நாம் தெரிந்து கொள்வதில்லை; குணம் லவலேசமும் இல்லாதிருந்தாலும் குணங்கடலாகவே நம்மை நாம் நினைத்துக் கொள்ளுகிறோம்— என்பதாம்.

7. இது அதிசயோக்தியன்று. யதார்த்த கீர்த்தனமே. நம்மிடத்துள்ள குற்றங் குறைகளை நாம் தெரிந்துகொள்ள முடியாதபடி மாயை மறைக்கிறபடியால் பிறர் வாயிலிருந்தே இவற்றை நாம் தெரிந்துகொள்ளவேண்டியதாகிறது. பிறர் பொறாமையினால் ஏறிட்டுக் கூறுவதாகவே யிருக்கட்டும். பிறர்க்கு நம்மீது பொறாமையிருப்பதாகவும் நம்முடைய குணங்களையெல்லாம் அவர்கள் தோஷமாக மாற்றிப் பிதற்றுவதாகவும் நாம் நினைக்கவே கூடாது. இப்படி நினைத்தோமாகில் அது நம்முடைய மிகுந்த ப்ரமமேயாகும். கீழே உதாஹரித்த ஸுபாஷிதத்திற் கண்டபடி மோஹாஞ்ஜனத்தின் மஹிமையே யிது என்று திண்ணமாக எண்ணவேணும்.

8. சிலர் நம்மைத் தூஷிக்கதனால் நம்முடைய கிரீடம் கீழே விழுந்துவிடுமாவென்று இதையே மிகவும் ஆலோசிக்கவேண்டும். உண்மையில் நமக்கொரு கிரீடம் உள்ளதா இல்லையா என்கிற ஆராய்ச்சி வேண்டா; பெரியதொரு கிரீடம் நவரத்னகசிதமானது நம் தலையில் ஏறியிருப்பதாகவே வைத்துக் கொள்வோம். அது சிலருடைய தூஷணைகளினால் சிதைந்தொழியுமாவென்று விமர்சிக்கவேண்டும். உள்ள குற்றங்களையோ இல்லாத குற்றங்களையோ பிறர் எவ்வளவும் சொல்லி ஊரும் நாடு முலகமு மெங்கும் பிரசாரம் செய்யட்டுமே. அதனால் நமக்கென்ன நஷ்டமென்று சிறிது சிந்திக்கவேண்டாமா?

9. த்ருஷ்டத்தில் நஷ்டமென்றும், அத்ருஷ்டத்தில் நஷ்டமென்றும் நஷ்டம் இரண்டு வகைப்படும். ஆமுஷ்மிக புருஷார்த்தத்தில் கெடுதி விளைவது அத்ருஷ்டத்தில் நஷ்டமெனப்படும். அப்படிப்பட்ட நஷ்டத்தை இவர்கள் செய்யும் தூஷணைகள் சிறிதும் உண்டுபண்ண மாட்டா வென்பது திண்ணம். இனி, த்ருஷ்டத்தில் நஷ்டமாவது, இவ்வுலகில் சிலர் நம்மிடத்தில் கௌரவம் வைத்திருந்தால் அது மாறும்படியாகச் செய்வது. யாரேனும் சிலர் நமக்குப் பொருளுதவி செய்வதாயிருந்தால் அதைத் தவிர்ப்பது......ஆக இப்படிப்பட்ட சில நஷ்டங்கள் நேருவதே த்ருஷ்டத்தில் நஷ்டமெனப்படும். சிலருடைய தூஷணைகளினால் இப்படிப்பட்ட நஷ்டம் நமக்கு நேர்ந்து விடுகிறதென்றே வைத்துக்கொள்வோம். இது நாம் ஆவலோடு கோரவேண்டிய நஷ்டமல்லவா? பிறருடைய தூஷணைகளுக்கு எவ்வளவு மதிப்பு கொடுக்கவேணு மென்பதையறியாமல் அவற்றிலே மனவேறுபாடு கொள்கின்றவர்கள் மநுஷ்யகோடியிற் சேர்ந்தவர்களாவர்களா? அன்னவர்கள் செய்யும்

கௌரவமும் ஸத்காரமும் நமக்கு ஏதுக்கு? இந்த நஷ்டத்தைப் பரம லாபமாகவன்றோ நினைக்கவேண்டும், இப்படிப்பட்ட லாபத்தைப் பெறுவிக்கின்ற வார்த்தைகளை வாரி யிறைக்குமவர்கள் நமக்கு மஹோபகாரகர்களென்றல்லவோ கருதத்தக்கவர்கள். அவர்களை த்ரோஹிகளென்று நாம் நினைப்பது மருளல்லவா?

10. தூஷிக்குமவர்கள் எவ்விதமான குற்றங்குறைகளைச் சொல்லித் தூஷிக்கிறார்களென்று பார்க்கவேண்டும். இவ்வுலகத்தவர்களிடத்திலே எங்கும் ஸம்பாவிதங்களான தோஷங்களைச் சொல்லித் தூஷிப்பர்களேயன்றி, அஸம்பாவிதமாய் அபூர்வமான சில தோஷங்களைச்சொல்லி நிந்திக்க முடியாதன்றோ. ஸ்ரீராமக்ருஷ்ணாதி பகவன் மூர்த்திகளிடத்தும், ஸர்வலோக பூஜிதர்களாய் விளங்கின பூர்வாசாரியர்களிடத்தும் இன்றைக்கும் பலர் சொல்லிக் கொண்டிருக்கிற தூஷணைகளுக்கு ஸஜாதீயங்களான தூஷணைகளையே யன்றோ நம்மிடத்தும் சொல்லவல்லார். பெரியார்களுக்குக் கிடைத்த ஸத்காரங்களே நமக்கும் கிடைத்தால் இது நமக்கொரு பெருமையென்று நாம் நினைக்கவேண்டாமா?

11. ஸர்வஜன ப்ரத்யக்ஷமாக எவ்வளவோ அபரிமிதமான தவறுகளை நிச்சலும் செய்துபோருகின்ற வழிப்போக்கர்களைப் பற்றி ஒன்றும் வாய் திறவாமல் பெருமதிப்பாளர்களைப் பற்றியேயன்றோ தூஷிக்க முயல்கின்றது தூஷகர்களுக்கு...... இங்ஙனே பல விஷயங்களை யாராய்ந்தால் குற்றங்குறைகள் கூறுவார் பக்கலில் நாம் மிகவும் க்ருதஜ்ஞதை செலுத்த வேணுமேயல்லது சிறிதும் வெறுப்புக்கொள்ள இடமில்லை.

12. *காவ்யசாஸ்த்ர விநோதேந காலோ கச்சதி தீமதாம்-காவ்யசாஸ்த்ரவிநோதேந காலோ கச்சதி தீமதாம்* என்றபடி காவ்ய சாஸ்த்ரவ்யாஸங்களினால் மஹான்கள் போதைப்போக்கா நின்றால் அங்ஙனே போதுபோக்க பாக்கியமற்றவர்கள் தங்கள் போதை எப்படித்தான் போக்குவது! ‘அவனப்படி’ என்று எதையாவது சொல்லித்தானே போதைப் போக்கித் தொலைக்கவேண்டும். ஏதோ ஒருவிதத்தில் அவர்களும் மஹான்களையே சிந்தையிலும் வாயிலும் கொண்டிருந்து புனிதர்களாகிறார்கள் என்று உகப்பதல்லவா உரியது. ஆகவே தூஷகர்களென்று சிலரை நாம் வெறுப்பது சிறிதும் பொருந்தாது.

13. *ஆனால் இப்படிப்பட்ட மனப்பழக்கம் எளிதில் தேறாது. அநியாயமாய்த் தூஷிக்கிறார்களேயென்று கோபதாபங்களே மிகமிகவுண்டாகும். அப்படிப்பட்ட ஸந்தர்ப்பங்களில், இதுவரை நாம் மேலே விவரித்த விஷயங்களையெல்லாம் ஆர அமர நெஞ்சிற் கொண்டு விவேக சக்தியைச் சிறிது பயன்படச் செய்தால் அதற்கு மேற்பட்ட ஆத்மானந்தமில்லையாகும். நாம் செய்துகொள்ளவேண்டிய மனப்பழக்கங்களில் இதுவே முதன்மை பெற்றுச் சிறக்கும். இங்ஙனே பழகினவரை ஒருவரும் வெல்லகில்லார்.

14. உலகில் எங்கும் ஒரே வகையாகப் பல வ்யவஹாரங்கள் சிதைந்துகாண்கின்றன; அந்த வ்யவஹாரச் சொற்களின் உண்மை வடிவம் என்ன? என்பதை ஆராய்ச்சி செய்து தவறுகளை நாம் திருத்திக்கொள்ளவேணும். “ஸ்வாமி திருவுள்ளத்தில் என்ன சீதளம்?” என்றும், “ஸ்வாமி திருவுள்ளத்தில் ஏதோ சீதளம் ஏற்பட்டாப்போலிருக்கிறது” என்றும் இப்படி பலரும் பல விடங்களிலும் பேசி வருகிறார்கள். கோபம் என்னும் பொருளை விவக்ஷித்து சீதளமென்று ப்ரயோகம் செய்துவருகிறார்கள். குளிர்ச்சியென்னும் பொருளதான

சீதளமென்கிற சொல்லுக்கு கோபம் எப்படி பொருளாகுமென்று விமர்சிக்கவேண்டும். உண்மையென்னவெனில், சீற்றம் என்னுஞ்சொல் அனைவருமறிந்ததே. அதற்குக் கோபமென்கிற பொருள் ப்ரஸித்தமானதே. சீத்தம் என்று வழங்கி வந்தார்கள். அது சீதமாய் சீதளமாயிற்று. இதுவே உண்மை.

15. இங்கே சிலர் கூறுவது என்னவென்றால், தேஹத்தில் உஷ்ணம் அதிகமானால் அது சீதளமாகப் பரிணமிக்குமாம்; அது கெடுதலாம். ஆகவே சீதளமென்பதே உண்மையான சொல்வடிவமாயிருக்கலாமென்று. ஆயுர்வேத ஸித்தமான அந்த சீதளத்திற்கும் "ஸ்வாமி திருவுள்ளத்தில் என்ன சீதளம்?" என்கிற வார்த்தையிலுள்ள சீதளச் சொல்லுக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை யென்பதை அறிவுடையார் அறிவர்கள். சீற்றமென்னுஞ் சொல்லே க்ராம்யச் சிதைவாய் சீதளமாகி அதுவே விமர்ச சக்தியற்றவர்களின் வாக்கில் புகுந்து வருகின்றது.

16. *ஸ்ரீ வைஷ்ணவர்கள் திருமாளிகைகளில் கல்யாணம் நடக்குமிடத்து, பச்சைக்கல்யாணத்தின்று அத்யாபகர்கள் நாச்சியார் திருமொழியில் வாரணமாயிரம் பதிகத்துடன் சீர்பாடல் பாடுவதென்றொரு பத்ததியுண்டு; அப்போது, "சீர்பாடி களிமண்பாடப்போமே" என்றுகோஷ்டிகளில் கூறுவதைப் பெரும்பாலும் அனைவரும்கேட்டிருப்பர்கள். அந்த வாக்யத்தின் உண்மையான ஆநுபூர்வி எப்படிப்பட்டதென்று விமர்சிக்கவேண்டுவதும் ப்ராப்தம். "களிமண்பாடப்போமே" என்பது ஸம்பத்தமான வாக்யமன்று என்பதை யாவருமறிவர் உண்மையான வாக்யம் விகாரமுற்றிருக்கிறதென்பதை விவேகிகள் அறிந்திருப்பர்கள். அவ்வுண்மைவாக்யம் என்னவென்று தெரிந்து கொள்ள வேண்டாமா? "சீர்பாடித் தளிர் பண் படுப்போமே" என்றிருக்கலாமென்பர் சிலர். அதுதான் களிமண்பாடப் போமே யென்று மாறிவிட்டதென்றும் சொல்லுகிறார்கள். "சீர்பாடிக் களிமின் களிப்போமே" என்பது தான் உண்மை வடிவம். 'சீர்பாடல் பாடி நீங்கள் ஸந்தோஷப்படுங்கள், நாங்களும் ஸந்தோஷப்படுகிறோம் என்றபடி. இந்த வாக்கியத்தை இசையிலே நீட்டிச் சொல்லும்போது களிமின்கா ளிப்போமே என்று சொல்லிக்கொண்டு வந்தார்கள் முன்னவர். நாளடைவில் களிமண்பாவாகவும் டப்போமே யாகவும் விகாரத்தைப் பெற்றொழிந்தது.

17. எங்கும் திவ்யப்ரபந்தம் தொடங்கும்போது ஸாதித்தருளாய் என்றோ ஸாதித்தருள என்றோ தொடக்கக்காரர் கைகூப்பிச் சொல்லிவிட்டுப் பிறகு தனியன்களையோ பாசுரங்களையோ சொல்லுவது வழக்கமாகக் காண்கிறது. ஸாதித்தருளவென்கிறவிது யாரை நோக்கிச் சொல்லுகிறதென்று கேள்வி பிறக்குமே; கோஷ்டியில் பல பெரியோர்கள் எழுந்தருளி யிருக்க, ஸஹஸா ஒருவர் ஆரம்பம் செய்வது தகுதியன்றாதலால் நியமனம் ஸாதித்தருளவேணுமென்று அப்பெரியார்களை நோக்கிப் பிரார்த்தித்துத் தொடங்குகிறபடி யென்று மஹான்கள் பணிக்கக் கேட்டிருக்கிறோம். பல திவ்ய தேசங்களில் ஸாதித்தருள வென்று அல்லாமல் சாய்த்தருள வென்றே சொல்லப் பெரும்பாலும் கேட்டுவருகிறபடியால் எம்பெருமானை நோக்கித் திருச் செவிசாய்த்தருளவேணுமென வேண்டி ஆரம்பம் செய்வதாகக் கொள்ளலாமென்று ஒரு பெரியார் பணித்தார். "மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே" என்கிற ஆழ்வார் பாசுரத்திற்குப் பொருந்தியிருக்குமிது. ஆனாலும் இதை ஒரு ரஸமான வார்த்தையாகக் கொள்ளலாமேயன்றி இதுதான் உண்மைச் சொல்வடிவமென்று கொள்ளலாகாதென்பது பலருடைய கருத்து.

18. சரீரம் தோன்றும் போதே வியாதிகளும் கூடவே தோன்றுகின்றன. "உடன் பிறந்தே கொல்லும் வியாதி" என்கிறார்கள். வியாதியில்லாத சரீரமே இருக்கமுடியாது. பூர்வாசாரியர்களின் ஸ்ரீ ஸூக்திகளில் "பைசல் கைசு, நோய் முக்கைசு" என்கிற வொரு திவ்ய ஸூக்தியைக் காண்கிறோம். பைசல் என்றது பாயல் என்றபடி; கைசு என்றது கையது என்றபடி. [ஒருமுங்கை ஒரு சாணுள்ளது; அம்முங்கைக்கு நோய் மூன்று சாணுள்ளது] என்பது கருத்து. உடலானது தோன்றியது முதலாக மாயும் வரையில் வியாதிகளுக்குவசப் பட்டேயிருக்குமென்பதை நாமெல்லாரும் நன்றாக அறிகிறோம். வியாதிகளோ பல வகைப்பட்டிருக்கின்றன. அவற்றுக்கேற்றபடி பலவகையான மருந்துகளும் அநாதிகாலமாகவே ஏற்பட்டிருக்கின்றன. ஆயுர்வேத சாஸ்த்ரமென்பது இன்று நேற்று தோன்றியதன்று. மேல் நாட்டினர் பலவகையான சிகித்ஸை முறைகளையும் மருந்துகளையும் கண்டுபிடித்துப் பெயர்பெற்று வருகிறார்கள். இன்னமும் நாள்தோறும் புதியபுதிய மருந்துகளும் சிகித்ஸாப்ரகாரங்களும் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன வென்றும் கேள்விப்படுகிறோம். மருந்து ஸ்வீகரித்தால் வெகுவாய் வியாதி தணியுமாயிருக்கிறதென்பதையும் அநுபவத்தில் பார்த்துவருகிறோம். ஆகவே வைத்திய முறைகளில் நாம் வெறுப்பும் அவநம்பிக்கையும் கொள்ளக் காரணமில்லை. இது இப்படி நிற்க. இளமை தொடங்கி அடியேனுக்குள்ள எண்ணத்தையும் அநுபவத்தையும் இங்குத் தெரிவிக்க விருப்பமுண்டாகிறது. அடியேனுக்கு மிக்க இளம்பிராயம்; எட்டு வயது இருக்கலாம். அப்போது ஒரு நாள் கடுமையான ஜ்வரம் தோன்றியது. இரண்டு மூன்று நாட்களுள் அது மிகமிக அதிகரித்தது. என் மாதாவும் மாதாமஹி முதலியோர்களும் ஏதோ கை மருந்தைத் தேனில் குழைத்துக் கொடுத்து வருகிறார்கள். கவலைக்கிடமான நிலைமை யுண்டாகியும் திருத்தகப்பனார் சிகித்ஸையில் சிறிதும் ஊக்கங்கொள்ளவில்லை. 'ஏகபுத்ரனாயிற்றே, இப்படியும் உபேக்ஷித்திருக்கலாமா?' என்று பலரும் வந்து சொல்லுகிறார்கள். 'தகுந்த டாக்டர்களை யழைத்துக் காட்டக் கூடாதா? என்றும் ஆப்தர்கள் பலர் கண்ணீர்ப் பெருக்குடன் சொல்லுகிறார்கள். அப்போது திருத்தகப்பனார் அவர்களுக்குக் கூறிய மறுமொழி அடியேனுக்கு நன்றாக நினைவிருக்கிறது. இன்று நேற்று போலிருக்கிறது. "நோயும் தீட்டும் ஒன்று" என்றார். அதற்கு வியாக்கியானமும் தாமே செய்தார்; பங்காளிகள் முதலானோருடைய ஜனனமரண காலங்களில் தோன்றும் நாழிகைத் தீட்டு, மூன்று நாளைத்தீட்டு, பத்துநாளைத்தீட்டு என்றிப்படி ஆசௌசம் நேர்கின்றது. ஸ்த்ரீகளுக்கு முப்பது நாளைத்தீட்டு, நாற்பது நாளைத் தீட்டு என்றுமுண்டாகிறது. இப்படிப்பட்ட தீட்டுகளுக்குக் காலத்தால் பரிஹாரமேதவிர மருந்தினால் பரிஹாரமுண்டோ? தீட்டு கழியவேண்டிய நாளில் அது தன்னடையே கழியக் கூடுமேயல்லது மருந்து ஸ்வீகரித்துக் கழிக்கக் கூடியதன்றே. அப்படியே வியாதிகளும் காலத்தினால் கழியக்கூடியவைகளே என்று.

19. ஆனால் ஒரு வாசியுண்டு; தீட்டு நேர்ந்தால் இன்ன நாளில் இது கழியக்கூடியதென்கிற நிச்சய வுணர்ச்சி நமக்கு வலிதாகவுண்டு. வியாதிகள் நேர்ந்தால் அது கழியுங் காலம் நிச்சயித்துக்கொள்ள முடியாமலிருக்கின்றது. இதுவே வாசி. மற்றொரு வாசியுமுண்டு; நேருகிற தீட்டுகள் குறித்த காலத்தில் அவசியம் நீங்கி விடுமென்கிற நம்பிக்கையுண்டு. வியாதிகள் விஷயத்தில் அது கிடையாது.

20. மேனியின் மேல் தோன்றும் விரணங்களுக்கு சிகித்ஸை அவசியமென்று நினைக்கலாம். உள்ளே ஏற்படும் வியாதிகளுக்கு ஔஷதங்களை உபயோகப்படுத்தாமை

18. சரீரம் தோன்றும் போதே வியாதிகளும் கூடவே தோன்றுகின்றன. "உடன் பிறந்தே கொல்லும் வியாதி" என்கிறார்கள். வியாதியில்லாத சரீரமே இருக்கமுடியாது. பூர்வாசாரியர்களின் ஸ்ரீ ஸூக்திகளில் "பைசல் கைசு, நோய் முக்கைசு" என்கிற வொரு திவ்ய ஸூக்தியைக் காண்கிறோம். பைசல் என்றது பயல் என்றபடி; கைசு என்றது கையது என்றபடி. [குழந்தை ஒரு சாணுள்ளது; அக்குழந்தைக்கு நோய் மூன்று சாணுள்ளது] என்பது கருத்து, உடலானது தோன்றியது முதலாக மாயும் வரையில் வியாதிகளுக்குவசப் பட்டேயிருக்குமென்று அனைவருக்கும் திண்ணமாக அறிகிறோம். வியாதிகளோ பல வகைப்பட்டிருக்கின்றன. அவற்றுக்கெல்லாம் பலவகையான மருந்துகளும் அநாதிகால மாகவே யேற்பட்டிருக்கின்றன. ஆயுர்வேத சாஸ்த்ரமென்பது இன்று நேற்று தோன்றிய தன்று. மேல் நாட்டினர் பலவகையான சிகித்ஸை முறைகளையும் மருந்துகளையும் கண்டு பிடித்து ப்ரஸித்திபெற்று வருகிறார்கள். இன்னமும் நாள்தோறும் புதியபுதிய மருந்துகளும் சிகித்ஸாப்ரகாரங்களும் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றனவென்றும் கேள்விப்படுகிறோம். மருந்து ஸ்வீகரித்தால் வெகுவாய் வியாதி தணிய ஆரம்பிக்கிறதென்பதையும் அநுபவத்தில் பார்த்துவருகிறோம். ஆகவே வைத்ய முறைகளில் நாம் வெறுப்பும் அவநம்பிக்கையும் கொள்ளக் காரணமில்லை. இது இப்படி நிற்க. இளமை தொடங்கி அடியேனுக்குள்ள எண்ணத்தையும் அநுபவத்தையும் இங்குத் தெரிவிக்க விருப்பமுண்டாகிறது. அடியே னுக்கு மிக்க இளம்பிராயம்; எட்டு வயது இருக்கலாம். அப்போது ஒரு நாள் கடின மான ஜ்வரம் தோன்றியது. இரண்டு மூன்று நாட்களுள் அது மிகமிக அதிகரித்தது. என் மாதாவும் மாதாமஹி பிதாமஹிகளும் ஏதோ கை மருந்தைத் தேனில் குழைத்துக் கொடுத்து வருகிறார்கள். கவலைக்கிடமான நிலைமை யுண்டாகியும் திருத்தகப்பனார் சிகித் ஸையில் சிறிதும் ஊக்கங்கொள்ளவில்லை. 'ஏகபுத்ரனாயிற்றே, இப்படியும் உபேக்ஷித்தி யிருக்கலாமா?' என்று பலரும் வந்து சொல்லுகிறார்கள். 'தகுந்த டாக்டர்களை யழைத்துக் காட்டக் கூடாதா? என்றும் ஆப்தர்கள் பலர் கண்ணீர்ப் பெருக்குடன் சொல்லுகிறார்கள். அப்போது திருத்தகப்பனார் அவர்களுக்குக் கூறிய மறுமொழி அடியேனுக்கு நன்கு நினை விருக்கிறது. இன்று நேற்று போலிருக்கிறது. "நோயும் தீட்டும் ஒன்று" என்றார். அதற்கு வியாக்யானமும் தாமே செய்தார்; பங்காளிகள் முதலானோருடைய ஜனனமரண காலங்களில் தொண்ணூறு நாழிகைத் தீட்டு, மூன்று நாளைத்தீட்டு, பத்துநாளைத்தீட்டு என் றிப்படி ஆசௌசம் சேர்கின்றது. ஸ்த்ரீகளுக்கு முப்பது நாளைத்தீட்டு, நாற்பது நாளைத் தீட்டு என்றுமுண்டாகிறது. இப்படிப்பட்ட தீட்டுகளுக்குக் காலத்தால் பரிஹாரமேதவிர மருந்தினால் பரிஹாரமுண்டோ? தீட்டு கழியவேண்டிய நாளில் அது தன்னடையே கழியக் கூடுமேயல்லது மருந்து ஸ்வீகரித்துக் கழிக்கக் கூடியதன்றே. அப்படியே வியாதிகளும் காலத்தினால் கழியக்கூடியவைகளே என்று.

19. ஆனால் ஒரு வாசியுண்டு; தீட்டு சேர்ந்தால் இன்ன நாளில் இது கழியக்கூடிய தென்கிற நிச்சய வுணர்ச்சி நமக்கு வலிதாகவுண்டு. வியாதிகள் சேர்ந்தால் அது கழியுங் காலம் நிச்சயித்துக்கொள்ள முடியாமலிருக்கின்றது. இதுவே வாசி. மற்றொரு வாசியு முண்டு; சேருகிற தீட்டுகள் குறித்த காலத்தில் அவசியம் நீங்கி விடுமென்கிற நம்பிக்கை யுண்டு. வியாதிகள் விஷயத்தில் அது கிடையாது.

20. தோலின் மேல் தோன்றும் விரணங்களுக்கு சிகித்ஸை அவசியமென்று நினைக்கலாம். உள்ளே ஏற்படும் வியாதிகளுக்கு ஔஷதங்களை உபயோகப்படுத்தாம

விருக்கலாமென்பதே இளமை தொடங்கி அடியேனுடைய எண்ணமும் அப்யாஸமும். ஔஷத ப்ரயோகங்களினால் வியாதி தணிந்து போவதைப் பலர் அநுபவத்தில் கண்டிருப்பது போலவே அடியேனும் ஒரு மருந்துமில்லாமல் நோய் தணிவதை ஸ்வாநுபவத்தில் பலகால் கண்டிருக்கிறேன். ஔஷதஸேவை பண்ணியும் பலரிடத்தில் அது நிஷ்ப்பலமாகிற தென்பதை யாரும் அபலாபம் செய்யமுடியாதன்றோ. ஆகவே ஔஷத ஸேவை பண்ணுவதனால் மரணமும் மரணபர்யாயமான கஷ்டமும் நேர்ந்துவிடும் என்கிற வார்த்தைக்கும் அவகாசமில்லை. இப்போது அடியேனுடைய ஸ்திதி மருந்தையபேக்ஷிக்கிறது. இதுதான் இங்கு விவக்ஷிதம்.

21. ப்ராஹ்மண ஜாதியிற் பிறந்தவர்கள் நூற்றில் ஒருவரிருவராவது வேதமோதுவது வழக்கம். அப்படியே ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஜனித்தவர்கள் நூற்றில் ஒருவரிருவராவது தமிழ் வேதமாகிய திவ்யப்ரபந்தங்களை யோதுவது வழக்கம். ஒவ்வொரு ஊரிலும் சில சில விடங்களிலாவது வேதாத்யயநத்வநி விச்சேதமடையாமல் கேட்டுக்கொண்டிருந்ததுண்டு. பிராமணர்களும் ஸ்ரீவைஷ்ணவர்களும் பெரும்பாலும் வியாபாரங்களிலும் உத்யோகங்களிலும் சென்றுவிட்டாலுங்கூட வைதிக ஸந்ததிகள் மூலைமுடுக்குகளில் வேதாத்யயந பரம்பரையை நிரந்தரமாக நடத்திவந்ததுண்டு. பத்திருபது வருஷ காலமாக இந்த பத்ததி மிகவும் மழுங்கி வருகின்றது. அக்ரஹாரங்களில் சிலவிடங்களில் வேதாத்யயந கோஷமும் சிலவிடங்களில் திவ்யப்ரபந்தாத்யயந கோஷமும் செவிக்கினிதாகச் செவிப்பட்டுக்கொண்டிருந்தது. இப்போது அதெல்லாம் கனவு கண்டாப்போலாய்விட்டது. கிராப்பும் முக க்ஷெளரமுமில்லாத பிராமணப்பிள்ளைகள் தேடிப்பிடிக்கவேண்டிய நிலைமையில் இருக்கிறார்கள். சிகாயஜ்ஞோபவீதங்களை வைத்துக்கொண்டிருக்கின்றவர்கள் வேதமோத வெட்கப்படுகிறார்கள். 'கஷ்டம் கஷ்டமாகும்படி வேதமோதுவதனால் ஒருகாசுக்கு வழியுண்டா?' என்று கூசாமல் கேட்பவர்களே எங்கும் மலிந்துவிட்டார்கள்.

23. வேதமோதுகிற கதை கிடக்கட்டும். தர்க்க வியாகரணாதி சாஸ்த்ரங்களையும் காவ்ய நாடகாலங்காராதி ஸாஹித்யக்ரந்தங்களையும் பிரதிபத்திக்குறிப்பில் வாசிப்பவர்கள் தாம் உண்டோவென்று பார்த்தால் ஒருவரிருவர்கூட இடத்திலும் தேறமாட்டார்கள். சிரோமணி பரீக்ஷையென்று ஒன்று ஏற்பட்டபிறகு தலைகாலில்லாமல் சில புத்தகங்களை வாசித்து ஒன்றிலும் ஆழ்ந்த ஞானமில்லாமல் சிரோமணி பட்டம் பெற்றவுடனே உத்யோகங்களுக்கு முயற்சி செய்வதும், அந்த முயற்சி பலித்துவிட்டால் கிடைக்கிற பொருளைக் கொண்டு தேஹயாத்திரை நடத்திக்கொண்டு போவதைப் போக்குவதும் இவ்வளவே பெரும்பாலும் எங்குங் காண்பதாகும்.

23. ஸாமாந்ய சாஸ்த்ரங்களை வாசிப்பதென்பது வேதாந்த சாஸ்த்ரத்தின் தெளிவுக்காக ஏற்பட்டதேயொழிய அது ஸ்வயம் ப்ரயோஜநமன்று. இக்காலத்தில் வேதாந்த சாஸ்த்ரத்தைப் பொருள்படுத்துவார் இருப்பதாகவே தெரியவில்லை. "அதனால் என்ன ப்ரயோஜனம்?" என்கிற கேள்வியே ஒவ்வொருவர் வாயிலும் வருவதாயிற்று. ப்ரயோஜனத்திற்கு ப்ரயோஜனம் கேட்டால் யாரால் விடையிறுக்கமுடியும். நாம் தேஹ போஷணம் செய்வது எதற்காகவென்று கேட்டால் உண்மையான விடையிறுக்க ஒருவராவது முன் வருவரோ?

24. "செவிக்குணவில்லாத போழ்து சிறிது வயிற்றுக்கு மீயப்படும்" என்றார் குறளாசிரியர். செவியுணவு கொள்வதே முக்கியமென்றும் அதற்கு அங்கமாகவே வயிற்றுணவு

விருக்கலாமென்பதே இளமை தொடங்கி அடியேனுடைய எண்ணமும் அப்யாஸமும். ஔஷத ப்ரயோகங்களினால் வியாதி தணிந்து போவதைப் பலர் அநுபவத்தில் கண்டிருப்பது போலவே அடியேனும் ஒரு மருந்துமில்லாமல் நோய் தணிவதை ஸ்வாநுபவத்தில் பலகால் கண்டிருக்கிறேன். ஔஷதஸேவை பண்ணியும் பலரிடத்தில் அது நிஷ்பலமாகிற தென்பதை யாரும் அபலாபம் செய்யமுடியாதன்றோ. ஆகவே ஔஷத ஸேவை பண்ணுதலால் மரணமும் மரணபர்யாயமான கஷ்டமும் நேர்ந்துவிடும் என்கிற வார்த்தைக்கும் அவகாசமில்லை. இப்போது அடியேனுடைய ஸ்திதி மருந்தையபேக்ஷிக்கிறது. இதுதான் இங்கு விவக்ஷிதம்.

21. ப்ராஹ்மண ஜாதியிற் பிறந்தவர்கள் நூற்றில் ஒருவரிருவராவது வேதமோதுவது வழக்கம். அப்படியே ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஜனித்தவர்கள் நூற்றில் ஒருவரிருவராவது தமிழ் வேதமாகிய திவ்யப்ரபந்தங்களை யோதுவது வழக்கம். ஒவ்வொரு ஊரிலும் சில சில விடங்களிலாவது வேதாத்யயநத்வநி விச்சேதமடையாமல் கேட்டுக்கொண்டிருந்ததுண்டு. பிராமணர்களும் ஸ்ரீவைஷ்ணவர்களும் பெரும்பாலும் வியாபாரங்களிலும் உத்யோகங்களிலும் சென்றுவிட்டாலுங்கூட வைதிக வ்யக்திகள் மூலைமுடுக்குகளில் வேதாத்யயந பரம்பரையை நிரந்தரமாக நடத்திவந்ததுண்டு. பத்திருபது வருஷ காலமாக இந்த பத்ததி மிகவும் மழுங்கி வருகின்றது. அக்ரஹாரங்களில் சிலவிடங்களில் வேதாத்யயந கோஷமும்சிலவிடங்களில் திவ்யப்ரபந்தாத்யயந கோஷமும் செவிக்கினிதாகச் செவிப்பட்டுக்கொண்டிருந்தது. இப்போது அதெல்லாம் கனவு கண்டாப்போலாய்விட்டது. கிரமமும் முக ஸௌஷ்டவமுமில்லாத பிராமணப்பிள்ளைகள் தேடிப்பிடிக்கவேண்டிய நிலைமையில் இருக்கிறார்கள். சிகாயஜ்ஞோபவீதங்களை வைத்துக்கொண்டிருக்கின்றபோதும் வேதமோத வெட்கப்படுகிறார்கள். 'கஷ்டம் சுக்காகும்படி வேத மோதுவதனால் ஒற்றைக் காசுக்கு வழியுண்டா?' என்று கூசாமல் கேட்பவர்களே எங்கும் மலிந்துவிட்டார்கள்.

23. வேதமோதுகிற கதை கிடக்கட்டும். தர்க்க வியாகரணாதி சாஸ்த்ரங்களையும் காவ்ய நாடகாலங்காராதி ஸாஹித்யக்ரந்தங்களையும் பிரதிபத்தியில் வாசிப்பவர்கள் தாம் உண்டோவென்று பார்த்தால் ஒருவரிருவர்கூட ஓரிடத்திலும் தேறமாட்டார்கள். சிரோமணி பரீக்ஷையென்று ஒன்று ஏற்பட்ட பிறகு தலைகாலில்லாமல் சில புத்தகங்களை வாசித்து ஒன்றிலும் ஆழ்ந்த ஞானமில்லாமல் சிரோமணி பட்டம் பெற்றவுடனே உத்யோகங்களுக்கு முயற்சி செய்வதும், அந்த முயற்சி பலித்துவிட்டால் கிடைக்கிற பொருளைக் கொண்டு தேஹயாத்திரை நடத்திக்கொண்டு போவதைப் போக்குவதும் இவ்வளவே பெரும்பாலும் எங்குங் காண்பதாகும்.

23. ஸாமாந்ய சாஸ்த்ரங்களை வாசிப்பதென்பது வேதாந்த சாஸ்த்ரத்தின் தெளிவுக்காக ஏற்பட்டதேயொழிய அது ஸ்வயம் ப்ரயோஜநமன்று. இக்காலத்தில் வேதாந்த சாஸ்த்ரத்தைப் பொருள்படுத்துவார் இருப்பதாகவே தெரியவில்லை. "அதனால் என்ன ப்ரயோஜனம்?" என்கிற கேள்வியே ஒவ்வொருவர் வாயிலும் வருவதாயிற்று. ப்ரயோஜனத்திற்கு ப்ரயோஜனம் கேட்டால் யாரால் விடையிறுக்கமுடியும். நாம் தேஹ போஷணம் செய்வது எதற்காகவென்று கேட்டால் உண்மையான விடையிறுக்க ஒருவராவது முன் வருவரோ?

24. "செவிக்குணவில்லாத போழ்து சிறிது வயிற்றுக்கு மீயப்படும்" என்றார் குறளாசிரியர். செவியுணவு கொள்வதே முக்கியமென்றும் அதற்கு அங்கமாகவே வயிற்றுணவு

கொள்ளவேண்டு மென்றும் இருகுறல் தெரிவிக்கப்பட்டதாகிறது. வயிற்றுணவை முக்கியமாகக் கொண்டு மற்றவற்றையெல்லாம் அதற்கு உறுப்பாகக் கொள்வார்க்கு நாம் என்ன சொல்ல முடியும்? * [illegible]—புபுக்ஷிதம் ந ப்ரதிபாதி கிஞ்சித்* என்றொரு வசனமுமுண்டு. 'பசியுள்ளவனுக்கு ஒன்றுமே தோன்றாது' என்பது இதன் பொருள். வயிற்றுக்கு வேண்டியதைப் பெற்ற பிறகே எதையும் கவனிக்க முடியுமாதலால் அவரவர்கள் தேஹயாத்திரையை முக்கியமாக நோக்குவதில் குறை கூறவொண்ணாது. காலமோ மிகவும் கடினமாகவுள்ளது. 10,15 ரூபாயில் தேஹயாத்திரை நிர்வஹித்தவனுக்கு இக்காலத்தில் நூறு ரூபாயிருந்தாலும் போதவில்லையென்பது வாஸ்தவம். வேதாத்யயனமும் வேதாந்த காலக்ஷேபங்களும் செய்து கொண்டிருந்தால் வயிற்றுக்கு என்னாகும்? என்கிற கேள்வி அநுசிதமென்று நாம் நினைக்க முடியுமா? அது உசிதமான கேள்வியே. வைதிக வித்யாப்யாஸங்கள் மங்கிப்போய் விடுகிறதே யென்கிற நிர்வேதத்தை நாம் வெளியிடாமலிருக்க முடியவில்லை.

25. பண்டைக் காலத்தில் வைதிகவித்யைகளுக்கு மஹா ராஜாக்களின் ஆதரவு அதிகமாயிருந்தது. அதனாலேயே முன்பு அந்த வித்யை தழைத்தோங்கிவந்தது. இக்காலத்தில் இதை ஆதரிப்பாரில்லை. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி (மைஸூர்) ஸ்ரீ பரகாலஸ்வாமி, ஸ்ரீமத் அஹோபிலமடாதிபதிகளான அழகியசிங்கர் ஸ்வாமிபோல்வார் வைதிக வித்யையின் பெருமையை யுணர்ந்தவர்களாகையால் ஸ்ரீ பாஷ்யாதி காலக்ஷேபங்கள் செய்யும் வித்யார்த்திகளுக்கு போஜனமளித்தும் விசேஷ ஸம்பாவனையளித்தும் ஆதரித்தாலுங்கூட அதிகாரிகள் அருமைப்படுகிறார்கள். சிலர் அதிகாரிகளாக வந்துசேர்ந்தாலும் அவர்களின் ஞாபகமெல்லாம் உத்யோக முயற்சியிலேயே யுள்ளதாகச் சொல்லுகிறார்கள். ஹிந்திபாஷையில் தேர்ச்சி பெற்றவர்களுக்கு ஆங்காங்கு உத்யோகங்கள் கிடைக்கின்றனவாம். அதற்குரிய பல பரீக்ஷைகள் வைக்கப்பட்டிருக்கின்றனவாம். பலரும் அந்த பரீக்ஷைகளுக்குப் பாடங்கள் வாசிப்பதும் பரீக்ஷைகளுக்குப் போவதும் உபாத்யாயபதவிகளில் அமர்ந்து தேஹயாத்திரைக்கு வழி கிடைத்ததென்று களிப்பதுமாயிருக்கிறது. மடாதிபதிகளிடத்தில் ஸ்ரீ பாஷ்யாதி காலக்ஷேபத்தில் அந்வயம் காட்டியிருக்கிறார்களே தவிர, இரவும் பகலும் வ்யாஸங்கமெல்லாம் ஹிந்தீபாடங்களிலேயேயென்று அவரவர்களினாலேயே தெரிய வருகிறது.

26. ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களை யதிகரித்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் எவ்விதமான உத்யோகத்திற்கும் செல்லாமல் நம்முடைய பூர்வாசார்ய திவ்யக்ரந்தங்களிலேயே போதுபோக்கிக் கொண்டு அவற்றின் விசேஷப்ரசாரமார்க்கத்திலே ஊன்றியிருக்க வழி செய்தால் நலமாயிருக்கும். இது நம் ஸ்ரீவைஷ்ணவ மடாதிபதிகளுக்கு அஸாத்யமன்று. இதை அவர்கள் திருவுள்ளம் பற்றவேணும்.

27. ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாம் பேரின்பம் நுகர்வதற்காக அநுபவிக்கின்ற ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகள் பரமரஸிகர்களால் அருளிச்செய்யப்பட்டவையாதலால் அவற்றில் பலவகைப்பட்ட சொற்சுவைகளும் பொருட்சுவைகளும் ததும்பியிருக்கின்றன. சில விடங்களில் பரஸ்பர விரோதம் தோன்றுவது போலிருக்கும். சில விடங்களில் சொல்லுகிற வார்த்தைகள் பொருத்தமற்றது போலிருக்கும். இப்படி உச்சாவசமாயிருக்கின்ற ஸ்ரீஸூக்திகளில் ஈடுபட்டிருப்பவர்கள் ஸமந்வயம் செய்யவேண்டுவதே முக்கியமாயிருக்கும். அப்படிப்பட்ட ஸ்தலவிசேஷங்களில் ஒன்று எடுத்தநுபவிப்போமிங்கு. நம்மாழ்வார் திருவிருத்

கொள்ளவேண்டு மென்றும் இதனால் தெரிவிக்கப்பட்டதாகிறது. வயிற்றுணவை முக்கிய மாகக் கொண்டு மற்றவற்றையெல்லாம் அதற்கு உறுப்பாகக் கொள்வார்க்கு நாம் என்ன சொல்ல முடியும்? * ஸாஹித்ய ஸங்கீத கலாதி கிஞ்சித்—பு³பு⁴க்ஷிதம் ந ப்ரதிபா⁴தி கிஞ்சித் * என்றொரு வார்த்தையுண்டு. 'பசியுள்ளவனுக்கு எதுவுமே தோன்றாது' என்பது இதன் பொருள். வயிற்றுக்கு விட்ட சொன்ன பிறகே எதுவும் கவனிக்க முடியுமாதலால் அவரவர் கள் தேஹயாத்திரையை முக்கியமாக நோக்குவதில் குறை கூறமுடியாது. காலமோ மிகவும் கடினமாகவுள்ளது. பீ 10,15 ரூபாயில் தேஹயாத்திரை நிர்வஹித்தவனுக்கு இக்காலத் தில் நூறு ரூபா யிருந்தாலும் போதவில்லை யென்பது வாஸ்தவம். வேதாத்யயனமும் வேதாந்த காலக்ஷேபங்களும் செய்து கொண்டிருந்தால் வயிற்றுக்கு என்னாகும்? என்கிற கேள்வி அநு சிதமென்று நாம் நினைக்க முடியுமா? அது உசிதமான கேள்வியே. வைதிக வித்யாப் யாஸங்கள் மலினமாய் விடுகிறதே யென்கிற நிர்வேதத்தை நாம் வெளியிடாமலிருக்க முடியவில்லை.

25. பண்டைக் காலத்தில் வைதிகவித்யைகளுக்கு மஹா ராஜாக்களின் ஆதரவு அதிகமா யிருந்தது. அதனாலேயே முன்பு அந்த வித்யை தழைத் தோங்கிவந்தது. இக்காலத்தில் இதை ஆதரிப்பாரில்லை. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. (மைஸூர்) ஸ்ரீ பரகாலஸ்வாமி, ஸ்ரீமத் அஹோபிலமடாதிபதிகளான அழகியசிங்கர் ஸ்வாமிபோல்வார் வைதிக வித்யையின் பெரு மையை யுணர்ந்தவர்களாகையால் ஸ்ரீ பாஷ்யாதி காலக்ஷேபங்கள் செய்யும் வித்யார்த்தி களுக்கு போஜனமளித்தும் விசேஷ ஸம்பாவனையளித்தும் ஆதரித்தாலுங்கூட அதிகாரிகள் அருமைப்படுகிறார்கள். சிலர் அதிகாரிகளாக வந்துசேர்ந்தாலும் அவர்களின் ஞாபகமெல் லாம் உத்யோக முயற்சியிலேயே யுள்ளதாகச் சொல்லுகிறார்கள். ஹிந்திபாஷையில் தேர்ச்சி பெற்றவர்களுக்கு ஆங்காங்கு உத்யோகங்கள் கிடைக்கின்றனவாம். அதற்குரிய பல பரீக்ஷைகள் வைக்கப்பட்டிருக்கின்றனவாம். பலரும் அந்த பரீக்ஷைகளுக்குப் பாடங்கள் வாசிப்பதும் பரீக்ஷைகளுக்குப் போவதும் உபாத்யாயபதவிகளில் அமர்ந்து தேஹயாத்தி ரைக்கு வழி கிடைத்ததென்று களிப்பதுமாயிருக்கிறது. மடாதிபதிகளிடத்தில் ஸ்ரீ பாஷ் யாதி காலக்ஷேபத்தில் அந்வயம் காட்டியிருக்கிறார்களே தவிர, இரவும் பகலும் வ்யாஸங்க மெல்லாம் ஹிந்தீபாடங்களிலேயேயென்று அவரவர்களினாலேயே தெரிய வருகிறது.

26. ஸம்ஸ்க்ருத சாஸ்திரங்களை யதிகரித்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் எவ்விதமான உத்யோ கத்திற்கும் செல்லாமல் நம்முடைய பூர்வாசார்ய திவ்யக்ரந்தங்களிலேயே போதுபோக்கிக் கொண்டு அவற்றின் விசேஷப்ரசாரமார்க்கத்திலே ஊன்றியிருக்க வழி செய்தால் நலமாயிருக் கும். இதுகம் ஸ்ரீவைஷ்ணவ மடாதிபதிகளுக்கு அஸாத்யமன்று. இதை அவர்கள் திரு வுள்ளம் பற்றவேணும்.

27. ஸ்ரீவைஷ்ணவர்களான நாம் பேரின்பம் நுகர்வதற்காக அநுபவிக்கின்ற ஆழ் வாராசார்ய ஸ்ரீஸூக்திகள் பரமரஸிகர்களால் அருளிச்செய்யப்பட்டவையாதலால் அவற்றில் பலவகைப்பட்ட சொற்சுவைகளும் பொருட்சுவைகளும் ததும்பியிருக்கின்றன. சில விடங் களில் பரஸ்பர விரோதம் தோன்றுவது போலிருக்கும். சில விடங்களில் சொல்லுகிற வார்த் தையே பொருத்தமற்றது போலிருக்கும். இப்படி உச்சாவசமாயிருக்கின்ற ஸ்ரீஸூக்திக ளிலே ரஸிகர்களாயிருப்பவர்கள் ரஸாநுபவம் செய்யவேண்டுவதே முக்கியமாயிருக்கும். அப்படிப்பட்ட ரஸவிசேஷங்களில் ஒன்று எடுத்தநுபவிப்போமிங்கு. நம்மாழ்வார் திருவிருத்

த்தில் (30) "அன்னஞ் செல்வீரும் வண்டானஞ் செல்வீரும் தொழுதிரந்தேன், முன்னஞ் செல்வீர்கள் மறவேன்மினோ, கண்ணன் வைகுந்தனோடென்னெஞ்சினாரைக் கண்டால் என்னைச்சொல்லி அவரிடை நீரின்னஞ்செல்லீரோ? இதுவோ தகவென்றிசைமின்களே" என்றொரு பாசுரமருளிச்செய்கிறார். நாயகனைப்பிரிந்த வொரு நாயகியின் நிலைமையையடைந்த ஆழ்வார் அன்னப்பறவைகளையும் நாரையில் ஒரு ஜாதியான வண்டானங்களையும் பரமபதநாதனிடத்திலே தூது செல்ல வேண்டுகிற ரீதியிலே இப்பாசுரத்தை அமைத்திருக்கிறார். இப்பாசுரத்தின் கருத்து யாதெனில், வானத்திற்பறந்து செல்லுகின்ற சிறந்தபறவைகளாகிய உங்களை யான்வணங்கிப் பிரார்த்திக்கின்றேன்; என்னவென்று எனில்: நீங்கள் உயரப் பறந்து செல்கையில் பரமபதத்தை நோக்கிச் செல்வதாக நினைக்கிறேன்; உங்களுக்குள் ஒருவர் முன்னமே பரமபதம் சென்று சேரக்கூடுமே; அவர் என் வேண்டுகோளை மறவாதிருக்க வேணும்: முன்னமே பரமபதம் சென்றிருக்கின்ற எனது நெஞ்சினாரை நீங்கள் அங்கே பரமபதநாதன் பக்கத்திலே சீரியசிங்காசனத்திலமர்ந்திருக்கக் காணநேரும்; அங்ஙனம் கண்டால் என்னைக்குறிப்பிட்டுச் சொல்லி 'அவரிடத்து நீர் இன்னம் போய்ச் சேராதிருக்கிறீரோ? இது தகுதியோ? என்று சொல்லுங்கள்—என்பதாம். இது ஸம்பாவிதமான வார்த்தையோ வென்று பார்க்கவேணும். நெஞ்சு இல்லாமல் பேசவே முடியாது. நெஞ்சு ஆழ்வாரை விட்டுப்போய் ஸ்ரீ வைகுண்டநாதனிடம் சேர்ந்துவிட்டதாகவும், வந்த நெஞ்சுக்கு ஸமாசாரம் சொல்லியனுப்புவதாகவும் இங்கே காண்கையாலே நெஞ்சையொழிந்த ஆழ்வார் எப்படி பாசுரம் பேசுகின்றார்? என்று கேட்கவேண்டியதாகும். இது ஆச்சர்யமான ரஸோக்தி யத்தனை. ஆழ்வார் தம்முடைய திருவுள்ளம் லௌகிகவ்யாபாரங்களிலேசமுமின்றிக்கே பகவத் விஷயமொன்றிலேயே ஊன்றியிருக்குமதிசயம் இங்ஙனே பேசப்பட்டதாயிற்று.

28. எம்பெருமானைப் புண்டரீகாக்ஷனென்று போற்றுதாரில்லை. தாமரைபோற் கண்ணனென்னும் பொருளை விவக்ஷித்தே புண்டரீகாக்ஷனென்கிறார்கள். [ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் வரும் புண்டரீகாக்ஷ நாமத்திற்கு பட்டருடைய பாஷ்யத்தில் தாமரை யென்கிற பொருளின் ப்ரஸ்தாவமேயின்றிக்கே வேறுபொருள் அருளிச் செய்யப்பட்டிருப்பதற்குக் காரணம் வேறு. அது நிற்க.] உபநிஷத்தில் * தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ * என்று எம்பெருமானது திருக்கண்களுக்குப் புண்டரீகமே உவமையாக ஓதப்பட்டுள்ளது. புண்டரீக சப்தார்த்தம் செந்தாமரையா ? வெண்தாமரையா ? என்று விசாரம். செந்தாமரைக் கண்ணனென்று பல்லாயிரமிடங்களில் போற்றப் படுகின்ற எம்பெருமான் வெண்தாமரைக் கண்ணனாக இருக்கத் தகுதியில்லையாகையால் புண்டரீகமென்பது செந்தாமரைக்குத் தான் பெயர் என்னவேணும். ஆழ்வார்கள் புண்டரீக பதத்திற்குச் செந்தாமரையைத்தான் பொருளாகக் கொண்டிருக்கின்றார்களென்பதை நிரூபிக்க இடமுள்ளது.

29. குலசேகராழ்வார் பெருமாள் திருமொழியில் (8–2.) * புண்டரிகமலரதன்மேற் புவனி யெல்லாம் படைத்தவனே !* என்கிறார். புவனியெல்லாம் படைப்பதற்கு இடமாயிருந்த புண்டரீகம் செந்தாமரையா வெண்தாமரையா வென்று ஆராயுமளவில், நம்மாழ்வார் திருவாய்மொழியில் * கொப்பூழ்ச் செந்தாமரைமேல் திசைமுகன் கருவுள் வீற்றிருந்து படைத்திட்ட கருமங்களும்* (5—10—8.) என்கிற பாசுரத்தில் செந்தாமரை யென்று ஐயமறச் சொல்லியிருக்கையாலே பேசிற்றே பேசுமேக கண்டரான ஆழ்வார்களின் திருவுள்ளத்தால் புண்டரீகமென்பது செந்தாமரையே யென்று அறுதியிடத் தட்டில்லை.

30. பரமப்ரமாணிகனான அமரஸிம்ஹன் தனது கோசத்திலே, * புண்டரீகம் ஸிதாம்போஜம் * என்று வெண்தாமரையாகச் சொல்லியிருக்கிறானே, அதற்கென்ன கதி? என்று கேள்வி வரும். அமரகோசத்தில் ப்ரமப்ரமாதங்கள் பல காண்கையாலே அவற்றுள் இதுவும் ஒன்றாயிருக்கட்டுமே யென்று சிலர் சொல்லத் துணிகின்றார்கள். நம் பூர்வாசார்யர்களின் திருவுள்ள மென்ன வென்று பார்ப்போம். ஸ்ரீராமாயணத்தில் ஆரண்யகாண்டத்தில், மூக்குங்காது மறுப்புண்டு கதறியோடாநின்ற சூர்ப்பணகை * தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ, புண்டரீகவிசாலாக்ஷௌ* என்கிறாளன்றோ. இங்குத் தனிச்லோக வியாக்கியான மருளிச் செய்யாநின்ற பெரியவாச்சான்பிள்ளை.... "[புண்டரீகவிசாலாக்ஷௌ]*புண்டரீகம் ஸிதாம்போஜமிறே ; * ஸம்ரக்தநயநா கோரா: * என்னுமுங்களைப் போலே எரிவிழியாயிருக்கையன்றிக்கே ஸுப்ரஸந்நதவளமான அக்கண்கள் இருந்தபடி என்! " என்று, புண்டரீக பதார்த்தம் வெண்தாமரை யென்றே திருவுள்ளம் பற்றி யருளிச் செய்துள்ளார். ஸ்ரீராமாயண வ்யாக்யாதாக்களில் தலைவரான கோவிந்தராஜார்யரும் இதை இப்படியே ஸம்ஸ்க்ருதமாக்கி யுரைத்துள்ளார். ஆகவே அமரகோசத்தைப் பழிக்கவேண்டா.

31. புண்டரீகாக்ஷன் என்பதற்குச் செந்தாமரைக் கண்ணனென்றே பொருள் கொள்ளவேண்டுமானாலுங்கூட அமரகோசத்தைப் பழிக்கவேண்டா. எனென்னில்; புண்டரீக சப்தார்த்தம் அமரகோசத்தின்படி வெண்தாமரைதான். ஆனாலும் வெண்மையென்கிற விசேஷணாம்சத்தை விட்டுநீக்கித் தாமரை ஜாதியென்னுமளவே கொள்ளக் குறையில்லை. பாற்கடலை க்ஷீரஸமுத்ரம் என்று சொல்வது போலவே 'க்ஷீராப்தி, க்ஷீராம்போநிதி' என்றும் சொல்லா நின்றார்கள். இங்கு க்ஷீரநிதி, க்ஷீரநிதி என்னுமளவே விவக்ஷிதமாய் அப்தி என்பதிலுள்ள அப்பதமும், அம்போநிதி யென்பதிலுள்ள 'அம்பஸ்' என்னும் பதமும் பொருளில் விடப்படுவதை இவ்விடத்திற்கு ஒருபுடை நிதர்சநமாகக் காண்க.

32. மற்றொன்றுங் காண்மின் ; கலபம் என்கிற வட சொல்லானது வயோவிசேஷயுள்ள யானைக்குட்டியைச் சொல்லாநிற்கச் செய்தேயும் விசேஷணாம்சமான வயஸ்ஸில் நோக்கின்றிக்கே யானைஜாதியில் மாத்திரம் விவக்ஷையாலே கஜஸாமாந்ய பர்யாயமாகக் கலப பதப்ரயோகம் பண்ணுகின்றார்கள். இதையும் நிதர்சனமாகக் கொள்ளலாம்.

33. வஸ்துதஸ்து, எம்பெருமானைச் செந்தாமரைக் கண்ண னென்பதும் வெண்தாமரைக் கண்ண னென்பதும் பரஸ்பர வ்யாஹதமல்ல. *கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய கண்கள்* என்ற திருப்பாணாழ்வார் பாசுரத்தில் செவ்வரி படர்ந்திருப்பதாக ஸாதித்திருப்பதையிட்டுச் செந்தாமரைக் கண்ணனென்கிறது. 'புண்டரீக விசாலாக்ஷௌ' என்ற விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை விவரித்தருளினபடி ஸுப்ரஸந்நதையையிட்டு வெண்டாமரைக் கண்ணனென்கிறது.—என்று ஏகீகரித்து நிர்வஹிக்கக் குறையில்லை. இதுவே பூர்வாசார்யர்மத நிர்வாஹம்.

34. * புண்டரீகம் ஸிதாம்போஜம் * என்று அமரஸிம்ஹன் கோசமிட்டது அஸம்பத்தமாகில் அதை நம் பூர்வாசார்யர்கள் ஆதரித்திருக்க மாட்டார்களன்றோ. எம்பெருமான் வெளுத்த கண்களையுடையவனென்று நம் பூர்வாசாரியர்கள் திருவுள்ளம் பற்ற ப்ரஸக்தியில்லை. ஸஹஸ்ரநாமத்தில் 'லோஹிதாக்ஷ: ப்ரதர்தந:' என்னுமிடத்தில் எம்பெருமானுக்கு லோஹிதாக்ஷ னென்னுந்திருநாமமிருப்பதையும் அங்கு பட்டரருளிச் செய்த பாஷ்யத்தையும்

காணாதவர்களல்லரே ; * செந்தாமரைத் தடங்கண் * என்று ஆழ்வார்கள் வாய் வெருவுவதும் வாசாமகோசரம். இவையெல்லாம் நன்கறிந்த பெரியவாச்சான்பிள்ளை. புண்டரீகம் ஸிதாம் போஜ மென்ற அமரகோசத்தை யாதரித்துப் பொருள் பணித்தருளினரென்றால் அவ்வர்த் தத்தை இல்லைசெய்ய நாமோ அதிகாரிகள் !

35. * கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ * என்ற ச்ருதிவாக்யத்தின் பொருளையுட் கொண்டு வேதார்த்தஸங்க்ரஹத்தில் ஸ்வாமியருளிச் செய்திருக்கும் கம்பீர திவ்ய ஸூக்தியில் "புண்டரீகதளாமலாயதேக்ஷண:" என்றிருக்கிறது. இங்கு புண்டரீக பதத்தின் மேல், தளம் என்றொருபதம் கூட்டிப் பிரயோகிக்கப்பட்டிருப்பதால் எம்பெருமானுடைய திருக்கண் களுக்குத் தாமரை மலரோடு ஸாம்யம் சொல்லுகிறதன்று இங்கு ; தாமரையின் அவயவ மான இதழோடு ஸாம்யம் சொல்லுகிறதாகவே ஸ்வாமிக்கு விவக்ஷை ; இந்த உவமை ஆயதத் வாம்சத்தில்—என்று * ராம: கமலபத்ராக்ஷ: * இத்யாதி அனேக ப்ரமாணோ தாஹரணத்துடன் ச்ருதப்ரகாசிகாசார்யர் நிரூபணம் செய்தருளியிருக்கிறார். இந்நிலையில் புண்டரீக சப்தார்த்தம் எதுவானாலும் கவலையில்லை. நிறத்திற்கு ஒப்புச் சொல்லுகிறதன்றே, நீட்சிக்குத்தானே. அதற்கு வெண்டாமரையானாலென்ன ? செந்தாமரையானாலென்ன ?

36. உபநிஷத் பாஷ்யகாரரான ரங்கராமாநுஜஸ்வாமி — "யுதூவி கஜஸகொமெ வ—ணு ரீகம் ஸி தாம்ஹொஜமிகத் ந—ஸிஷ்டி. தயாவி மவெசஸாதிநா நவெயஉாவெ.........." என்று தொடங்கி "ஈக்ஷாம்ஹொஜஜெவ வ—ணுரிகவிதி உ ஷவதிழ" என்று முடித்திருக்கிறார்.

37. பெரியாழ்வாரென்னும் பெயர்பெற்ற வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் திருப்பல் லாண்டும் திருமொழியும் அருளிச்செய்தார். இவை தனித்தனியே இரண்டு பிரபந்தங்கள். திருப்பல்லாண்டு பன்னிரண்டு பாட்டுக்கள் தனியே ஒரு பிரபந்தம். * வண்ணமாடங்கள் சூழ் * என்று தொடங்கியுள்ள திருமொழி தனியே மற்றொரு பிரபந்தம். உபய ஸம்ப்ரதாயஸ்தர் களின் கொள்கையும் இதுவே. இதில், வரவரமுநி ஸம்ப்ரதாயஸ்தர்களுடைய மதம் வேறு, தேசிகஸம்ப்ரதாயாபிமாநிகளுடைய மதம் வேறு என்று சிலர் நினைப்பது பொருத்தமுடைய தன்று. எம்பெருமானுடைய நியமனத்தினால் கருடவாஹந பண்டிதர் பணித்த திவ்ய ஸூரிசரிதத்தில் ஐந்தாவது ஸர்க்கத்தின் முடிவு ச்லோகத்தில் * எவம் வல்லபதேவபாண்ட்ய ந்ருபதேர் கோஷ்ட்யாம்..........க்ருத்வா விச்வஹிதம் ப்ரபந்தயுகளம் ஸ்ரீபட்டநாதஸ் ஸுதீ*: என்று, பெரியாழ்வார் இரண்டு பிரபந்தங்க ளருளினதாக ஸ்பஷ்டமாய்க் கூறியிருப் பதை உபய ஸம்ப்ரதாயஸ்தர்களும் துல்யமாகவே ஆதரிப்பவர்கள்.

38. வேதாந்த தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் திருப்பல்லாண்டிலிருந்தும் பாசுரங்களை மேற்கோள் காட்டியுள்ளார் ; பெரியாழ்வார் திருமொழியிலிருந்தும் மேற் கோள் காட்டியுள்ளார். ப்ரமாணங்களுக்கு ஆகரம் எழுதி அச்சிட்டிருக்கின்ற தேசிக ஸம்ப்ரதாய அபிமாநிகள் திருப்பல்லாண்டு பாசுரங்களுக்கு ஆகரம் குறிக்கும்போது "திருப் பல்லாண்டு—இத்தனையாவது பாசுரம்" என்றும், பெரியாழ்வார் திருமொழிப்பாசுரங் களுக்கு ஆகரம் குறிக்கும்போது, பெரியாழ்வார் திருமொழி—இன்னபத்து, இன்ன பதிகம், இன்ன செய்யுள் என்றும் வேற்றுமை காட்டியே ஆகர நிர்தேசம் செய்திருப்பது அபலபிக்க முடியாததாகையாலே, திருப்பல்லாண்டும் திருமொழியும் ஒரே பிரபந்தமென்றும் தனித்தனிப் பிரபந்தங்களல்லவென்றும் முன்னோர்களான தேசிக ஸம்ப்ரதாயாபிமானிகள் கொள்ள வில்லையென்று ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

39. பிரபந்த சாரத்தில் *பேரணிந்த வில்லிபுத்தூரானி தன்னில்* என்னும் ஒன்பதாம் பாட்டில் *சீரணிபல்லாண்டு முதற் பாட்டு நானூற்றெழுபத்தொன்றிரண்டு மெனக்குதவு நீயே* என்றிருப்பதைக் கொண்டு நவீனர்கள் சிலர் 'இது செய்யுளுக்குச் சேரப் பணித்த படி' என்று கொள்ளாமல் திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியிலேயே அந்தர்ப்பூதமாக தேசிகன் திருவுள்ளமென்று கொண்டு ஏகப்ரபந்தமே யென்னத் தலைப்பட்டார்கள். இது தேசிக ஸம்ப்ரதாயாபிமானிகள் யாவரும் ஒருமிடறாக இசைந்ததன்று. இரண்டையும் ஏக ப்ரபந்தமாகக் கொள்வதில் மஹத்தான சங்கடமுண்டு; அது வென்னென்னில்; திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்களைக் காலக்ஷேபம் செய்பவர்கள் திருப்பல்லாண்டு வியாக்கியானம் ஸேவித்த பிறகு இதர மற்ற திவ்யப்ரபந்தங்களின் வியாக்கியானங்களை ஸேவிக்கிறார்கள். திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமல்லாமல், பெரியாழ்வார் திருமொழியின் ஏகதேசமாகில் ஒரு பிரபந்தத்தை அரைகுறையாக ஸேவித்த பாதகம் நேரும். இப்பாதகத்திற்குத் தப்பிப் பிழைப்பார் ஒருவருமே யில்லையென்றும் சொல்லவேண்டியதாகும். ஆகவே, திருப்பல் லாண்டு தனிப்பிரபந்த மன்றென்று கொள்ளுதல் வடகலை ஸம்ப்ரதாயத்திலும் விவேகிக ளான பெரியார்களுக்கு உடன்பாடன்று. திருப்பல்லாண்டு தொடக்கமென்று எங்கும் வ்யவஹாரமேயொழிய பெரியாழ்வார் திருமொழி தொடக்கமென்று ஓரிடத்திலும் வழங்கு வாரில்லை. இப்படி பலகாரணங்களினால் திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமென்றே ஸம்ப்ர தாய தத்வவித்துக்களின் கொள்கை.

40. பிடித்த பிடி விடாமையில் மூர்க்கனும் முதலையும் ஒரு வகுப்பு என்கிறார்கள்; மூர்க்கனுக்கு உலக மெல்லாம் கூடி உபதேசஞ்செய்தாலும், சிறிதும் பயன்படுவதில்லை. இராவணனுக்கு எத்தனை பேர்கள் இதமுரைத்தனர்? எவ்வெவ்விதமாக உபதேசங்கள் தந்த னர்? அதன் பலன் என்னாயிற்று என்பதை உலகமெல்லாமறிந்திருக்கிறது. இராமபிரான் கரதூஷணாதி வதம் செய்து முடித்தவுடனே அகம்பனன் ஜனஸ்தானத்தினின்றும் இலங் கைக்குச் சென்று இராவணனுக்குச் செய்தி கூற, அவன் துயரமும் கோபமுமுற்றுத் தன் தேரின் மேலேறித் தண்டகாரணியத்தில் வசிக்கும் தாடகா புத்திரனை மாரீசனிருப்பிடம் வந்தான். மாரீசனால் முறைப்படி மரியாதை செய்யப்பெற்றவன் அகம்பனனிடத்தில் தான் கேள்விப்பட்ட செய்தியைக் கூறி; இராமனுக்குத் தீங்கு விளைவிக்கத் தான் வந்திருப்பதாகச் சொல்லி, அதற்கு நீ துணைபுரிய வேண்டுமென்றான். உடனே மாரீசன் அவனுக்கு இத முரைக்கத் தொடங்கினான். "அப்பா ராவணா! உனக்கு இந்த துர்ப்புத்தியை யுண்டாக்கினவன் யாவன்? உனக்கு நண்பன் போலிருந்து உண்மையிற் பகைவனாகி உன்னைக் குடும்பத்தோடுங் கெடுக்க நினைத்து உனக்கு இந்த துர்ப்புத்தியை விளைத்தவன் யாவன்? என்று பலவும் கூறினான்.

41. மாரீசனால் இதமுரைக்கப்பெற்ற இராவணன் இலங்கைக்கு மீண்டு சென்றபின் அங்குவந்துசேர்ந்த சூர்ப்பணகையின் சொற்களால் மனந் திரியப்பெற்று, மறுபடியும் மாரீச னிடமே ஓடிவந்து பழையபடியே தன் எண்ணத்தைக் கூறி இதற்கு நீ துணைபுரிந்தே யாவதாக வேண்டும் என்று மிகவும் நிர்ப்பந்தித்தான். அப்போது மீண்டும் மாரீசன் மிக விரிவாக ஹிதோபதேசஞ் செய்கிறான். "அரக்கர் தலைவனே! நீ சாரர்களையனுப்பிச் சத்ருக்களின் பலாபலங்களைத் தெரிந்து கொள்ளவில்லை; இராமன் சௌர்ய வீர்யபராக்ரம நிதியென்பதையும், தேவாதிதேவ னென்பதையும் நீ தெரிந்துகொள்ளவில்லை, ஐயோ! உனக்கேன் இப்படி விபரீதபுத்தியுண்டாயிற்று? நீ நினைக்கிறபடி இராமனிடத்தில் ஹேய குணம் சிறிதுமில்லையே; அவன் ஸமஸ்தகல்யாண குணக்கடல் காண். அரக்கர் குலத்தை

39. பிரபந்த சாரத்தில் *போனந்த வில்லிபுத்தூராணி தன்னில்* என்னும் ஒன்பதாம் பாட்டில் * பாணிபல்லாண்டு முதற் பாட்டு நானூற்றெழுபத்தொன்றிரண்டு மெனக்குதவு நீயே * என்றிருப்பதைக் கொண்டு நவீனர்கள் சிலர் 'இது செய்யுளுக்குச் சேரப் பலித்தபடி' என்று கொள்ளாமல் திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியிலேயே அந்தர்ப்பூதமாக தேசிகன் திருவுள்ளமென்று கொண்டு ஏகப்ரபந்தமே யென்னத் தலைப்பட்டார்கள். இது தேசிக ஸம்ப்ரதாயாபிமானிகள் யாவரும் ஒருமிட்டாக இசைந்ததன்று. இரண்டையும் ஏக ப்ரபந்தமாகக் கொள்வதில் மஹத்தான சங்கடமுண்டு ; அது வென்னென்னில் ; திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்களைக் காலக்ஷேபம் செய்பவர்கள் திருப்பல்லாண்டு வியாக்கியானம் ஸேவித்த பிறகு இஷ்டமான திவ்யப்ரபந்தங்களின் வியாக்கியானங்களை ஸேவிக்கிறார்கள். திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமல்லாமல், பெரியாழ்வார் திருமொழியின் ஏகதேசமாகில் ஒரு பிரபந்தத்தை அரைகுறையாக ஸேவித்த பாதகம் சேரும். இப்பாதகத்திற்குத் தப்பிப் பிழைப்பார் ஒருவருமே யில்லையென்றும் சொல்லவேண்டியதாகும். ஆகவே, திருப்பல்லாண்டு தனிப்பிரபந்த மன்றென்று கொள்ளுதல் வடகலை ஸம்ப்ரதாயத்திலும் விவேகிகளான பெரியார்களுக்கு உடன்பாடன்று. திருப்பல்லாண்டு தொடக்கமென்று எங்கும் வ்யவஹாரமேயொழிய பெரியாழ்வார் திருமொழி தொடக்கமென்று ஒரிடத்திலும் வழங்குவாரில்லை. இப்படி பலகாரணங்களினால் திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமென்றே ஸம்ப்ரதாய தத்வவித்துக்களின் கொள்கை.

40. பிடித்த பிடி விடாமையில் மூர்க்கனும் முதலையும் ஒரு வகுப்பு என்கிறார்கள்; மூர்க்கனுக்கு உலக மெல்லாங்கூடி உபதேசஞ்செய்தாலும், சிறிதும் பயன்படுவதில்லை. இராவணனுக்கு எத்தனை பேர்கள் இதமுரைத்தனர்? எவ்வெவ்விதமாக உபதேசங்கள் தந்தனர்? அதன் பலன் என்னாயிற்று என்பதை உலகமெல்லாமறிந்திருக்கிறது. இராமபிரான் கரதூஷணாதி வதம் செய்து முடித்தவுடனே அகம்பனன் ஜனஸ்தானத்தினின்றும் இலங்கைக்குச் சென்று இராவணனுக்குச் செய்தி கூற, அவன் துயரமும் கோபமுமுற்றுத் தன் தேரின் மேலேறித் தண்டகாரண்யத்தில் வசிக்கும் தாடகா புத்திரனை மாரீசனிருப்பிடம் வந்தான். மாரீசனால் முறைப்படி மரியாதை செய்யப்பெற்றவன் அகம்பனனிடத்தில் தான் கேள்விப்பட்ட செய்தியைக் கூறி; இராமனுக்குத் தீங்கு விளைவிக்கத் தான் வந்திருப்பதாகச் சொல்லி, அதற்கு நீ துணைபுரிய வேண்டுமென்றான். உடனே மாரீசன் அவனுக்கு இதமுரைக்கத் தொடங்கினான். "அப்பா ராவணா! உனக்கு இந்த துர்ப்புத்தியை யுண்டாக்கினவன் யாவன்? உனக்கு நண்பன் போலிருந்து உண்மையிற் பகைவனாகி உன்னைக் குடும்பத்தோடு கெடுக்க நினைத்து உனக்கு இந்த துர்ப்புத்தியை விளைத்தவன் யாவன்? என்று பலவும் கூறினான்.

41. மாரீசனால் இதமுரைக்கப்பெற்ற இராவணன் இலங்கைக்கு மீண்டு சென்றபின் அங்குவந்துசேர்ந்த சூர்ப்பணகையின் சொற்களால் மனந் திரியப்பெற்று, மறுபடியும் மாரீசனிடமே ஓடிவந்து பழையபடியே தன் எண்ணத்தைக் கூறி இதற்கு நீ துணைபுரிந்தே யாவருக வேணும் என்று மிகவும் நிர்ப்பந்தித்தான். அப்போது மீண்டும் மாரீசன் மிக விரிவாக ஹிதோபதேசஞ் செய்தனன். "அரக்கர் தலைவனே! நீ சாரர்களையனுப்பிச் சத்துருக்களின் பலாபலங்களைத் தெரிந்து கொள்ளவில்லை; இராமன் சௌர்ய வீர்யபராக்ரமநிதியென்பதையும், தேவாதிதேவ னென்பதையும் நீ தெரிந்துகொள்ளவில்லை, ஐயோ! உனக்கேன் இப்படி விபரீதபுத்தியுண்டாயிற்று? நீ நினைக்கிறபடி இராமனிடத்தில் ஹேய குணம் சிறிதுமில்லையே; அவன் ஸமஸ்தகல்யாண குணக்கடல் காண். அரக்கர் குலத்தை

வேரோடு பிடுங்கியழிக்கும் வல்லமை வாய்ந்த இராமனிடம் அபசாரபுத்தி கொள்ளாதே; இராமனது பராக்ரமமும், தேஜஸ்ஸும் அளவிட முடியாதவை. எரிகிற நெருப்பை அணுக நினைப்பதுமுண்டோ? உனக்கு உயிரின்மேல் பற்றிருக்குமாகில், இன்பமாக இன்னமும் வாழ வேணுமென்றிருப்பாயாகில் இராமனுக்குக் கெடுதிசெய்ய நெஞ்சிலும் நினையாதே. எதிர்த் தலையிலுள்ள சக்தி விசேஷங்களை உள்ளபடி தெரிந்துகொள்ள உனக்கு சக்தியில்லையே.

அவ்விராமனிடம் நான் பட்ட பாடுகளை நெஞ்சால் நினைக்கும்போதும் உடல் நடுங்குகின்றதப்பா! இராமனுக்கு எள்ளளவும் தீங்கு செய்ய நினைத்தல் தவறு. என்பேச்சை மீறி நடப்பாயாகில் உனக்குக் கேடு விளைந்தே தீரும். ராவணா! எங்குப்பார்த்தாலும் எனக்கு ராமமயமாகவே காண்கிறது. பல்லாயிரம் ராமமூர்த்திகளைக் காண்பதுபோலுள்ளதப்பா. அவ்விராமனது அம்புகளினின்று நான் எப்படியோ தப்பிப் பிழைத்து இனி ஒருகாலும் அப்பெருமானிடத்து அபசாரப்படலாகாதென்று உறுதிகொண்டு தவக்கோலம் பூண்டு காலங்கழித்து வருகிறேனப்பா, நான் எப்பொழுதும் இராமனை நினைத்தே திகில்பட்டுக் கொண்டிருப்பதால் "ர" என்னு மெழுத்தை முதலிற்கொண்ட ரத்னம், ரதம் முதலான பேர்களுங்கூட எனக்குப் பயத்தை விளைவிக்கின்றனகாண். அவ்விராமனது பிரபாவம் என்னொருவனுக்கே தெரியும். நீ உயிரோடிருக்க விரும்புவாயாயின் இராமனது பிரஸ்தாவத்தையுங்கூட என்னிடம் செய்ய வேண்டா. எங்கும் ப்ரியமான வார்த்தைகளைச் சொல்லுவார் பலர் கிடைப்பர்கள்; அப்ரியமாயும் ஹிதமாயுமுள்ள பேச்சைச் சொல்லுவாருமிலர். கேட்பாருமிலர். நான் சொல்லும் ஹிதம் உன் நெஞ்சிற் படவில்லையே. ராவணா! நீ ராமனிடம் விரோதப்படுவாயாயின் நிச்சயமாக உன் பந்துமித்ரர்களுடன் மாண்டு போவாய். ஐயோ! ராக்ஷஸ வீரர்கள் ராமபாணங்களால் அடியுண்டு தரையில் வீழ்வதை நீ காணப் போகின்றனை: லங்காபுரம் முழுதும் ராம பாணங்களால் சூழப்பட்டு அக்னிச் சுவாலைகள் நாற்புறமும் நிரம்பப்பெற்று வீடுகளெல்லாம் நீறாகப் போவதை நீ காணப் போகின்றனை. [இத்யாதிகள் மாரீசோபதேசங்கள்.]

42. மாரீசனுடைய உபதேசத்திற் கடுத்தபடி பிராட்டியின் உபதேசம் இராவணனுக்குக் கிடைத்திருக்கிறது. இதுவும் பல தடவைகளில் கிடைத்தது. சிலவுபதேசங்கள் கேண்மின்; ராவணா! ராமன் ஆகாசத்திலுள்ள சந்திரனைக் கீழே விழத்தள்ளவும். கடல் முழுவதையும் உலரச் செய்யவும் வல்லவன். உனக்கு ஆயுள் முடிந்துவிட்டதனாலேயே அவரிடத்தில் பகையுண்டாயிற்றுனக்கு; உனது லங்காபுரி விரைவில் விதவையாகப்போகின்ற படியால்தான் இராமனைப் பலவாறு இகழ்ந்து பேசுகின்றாய்; மஹாதேஜஸ்வியும் தைவ சக்தி வாய்ந்தவனுமான இராமன் கர தூஷணாதிகளான பதினாலாயிரம் ராக்ஷஸர்களை அவலீலையாகப் பொடிபடுத்தினவன் காண்; அந்த ரகு குல ராமன் உன்னையும், உன்னைச் சேர்ந்தவர்களையும் ஒரு நொடிப் பொழுதில் வதைக்க வல்லவன் காண். [இது ஆரணியகாண்ட வுபதேசம்; இனி ஸுந்தரகாண்ட வுபதேசம்.] இராவணா! இவ்விலங்கா புரியில் எல்லாச் சரக்குகளையும் கொண்டு சேர்த்து வைத்திருக்கின்றனையே, உனக்கு நல்ல வுபதேசங்கள் செய்ய வல்ல ஸத்புருஷர்களைக் கொண்டு சேர்த்து வைத்துக் கொள்ளவில்லையா? ஸத்துக்கள் இருந்தும் அவர்களை நீ அநுவர்த்திக்கவில்லை போலும். உனக்குள்ள விபரீதபுத்தி இதை நன்றாகக் கோட் சொல்லித் தருகின்றதே. ராவணா! நீ இவ்விலங்கையில் சுகமாக வாழ விரும்புவாயாயின், பயங்கரமான சாவை விரும்பாதிருப்பாயாயின் இராமனை நண்பனாகச் செய்துகொள்; அவர் தம்மிடம் உறவு கொண்டாடி வருபவர்

களை ஒருபோதும் கெடுக்கமாட்டார். நானும் உனக்காக அவரை வேண்டி உன் பிழையைப் பொறுத்தருளும்படி செய்வேன். ராக்ஷஸாதமா! ஜனஸ்தானத்திலுள்ள அரக்கரனைவரும் இராமனால் மாண்டொழிந்ததை யறிந்து நீ அவரோடு எதிர்நின்று போர்புரிய வல்லமையற்றுப் பல வஞ்சகங்கள் செய்தனை; சார்ங்க மென்னும் வில்லாண்ட அவருடைய வில்நாணொலியை விரைவில் கேட்பாய்! இராமனாகிற கருடன் ராக்ஷஸஸர்ப்பங்களை அவலீலையாகக் கவர்ந்து கொல்ல வல்லவன். புலிகளினெதிரே புல்லிய நாய் நிற்கமாட்டாதவாறுபோல, அவ்விராம லக்ஷ்மணர்களின் முன்னிலையில் நீ நிற்கவும் மாட்டாதவன். இராம பாணங்களுக்கு இலக்காகித் தொலைய வேண்டுவதுதான் உனது தலைவிதி போலும். [இத்யாதிகள் பிராட்டியின் உபதேசங்கள்.]

43. பிராட்டியின் உபதேசத்திற்குப் பிறகு திருவடியின் உபதேசம் இராவணனுக்குக் கிடைத்திருக்கிறது. ராக்ஷஸேச்வரா! உனது நண்பனான ஸுக்ரீவன் உனக்குச் சொல்லியனுப்பிய இத வசனங்கள் பலவுண்டு. நானுமுரைக்கிறேன் கேளாய்! வாயுதேவனின் புதல்வனாய் அனுமனென்னும் வானரனான நான் ஸீதைக்காக நூறு யோசனை விஸ்தாரமுடைய கடலைக் கடந்து இவ்விடம் வந்திருக்கிறேன். தவவொழுக்கங்களிற் சிறந்து நீதி சாஸ்திரங்களையுமுணர்ந்து கீர்த்தி பெற்று விளங்குகின்ற நீ நன்று செய்தாயில்லை. உன்னைப்போன்ற புத்திசாலிகள் செய்ய முயற்சிகொள்ள மாட்டாத காரியத்தைச் செய்தாயே. ஸ்ரீ ராம லக்ஷ்மணர்கள் சீறிச் சினந்து நிற்பார்களேல் அவர்கள் தொடுக்கும் அம்புகளின் முன்பு நிற்க வல்லவன் தேவர்களிலும் அசுரர்களிலும் மற்றுள்ளார்களிலும் எவனுமில்லையென்று உணருவாயாக. ராவணா! இராமனுக்குக் கெடுதி செய்து சுகம்பெற விரும்புவாரு முளரோ? இராமனிடம் நீ கொண்ட பகைமையை விட்டுவிட்டாயாகில் உனக்கு நல்லகாலமுண்டு. இல்லையேல் குலத்தோடும் விநாசமடைவாய். இராமனைச் சாமானிய மனிதனென்று நினையாதேகொள்; உன்னைப் படாதபாடும் படுத்தின வாலியை ஓரே பாணத்தினால் முடித்திட்டவனென்று கேட்டிலையோ? நான் ராம பக்ஷபாதத்தினால் சொல்லுபவனல்லேன்; நடுநிலைமை வாய்ந்து உனது ஹிதத்தைக் கோரிச் சொல்லுகிறேனிவ்வளவும். ராவணா! தேவேந்திரனாயினும், முப்புரங்களையெரித்த முக்கண்ணனாயினும் அவனது தந்தையான பிரமதேவனே யாயினும், இவர்களனைவரும் ஒன்றுகூடியாயினும் இராமனுக்குச் சிறிதளவும் தீங்கிழைக்க முடியாதுகாண்; இராமன் எவனை நிக்ரஹிக்கத் திருவுள்ளம் பற்றுகிறானோ அவனை அநுக்ரஹிக்க ஒருவனாலுமாகாது. இத்யாதிகள் இராவணனுக்கு அனுமனால் கிடைத்த உபதேச நன்மொழிகள்.

44. இதற்குப்பிறகு விபீஷணாழ்வானால் இராவணனுக்குக்கிடைத்த வுபதேசங்கள் அளவு கடந்தவை. அவை ஒருதடவையல்ல, பலதடவை கிடைத்திருக்கின்றன. "இராமன் மஹா பராக்ரமசாலி; தருமமூர்த்தி; அவனோடு வீண் விரோதம் நமக்குத் தகாது; அவனிடம் அபசார க்ஷாமணம் செய்துகொண்டால் நாம் நாசமடையாமல் நெடுங்காலம் வாழலாம். எவ்வளவு ஆலோசித்தாலும் நமக்குத்தோல்வி யொழிய வெற்றி யுண்டாக இடமேயில்லை. நம்முடைய ராக்ஷஸ வீரர்களான மந்திரிகள் உன்னுடைய முகமலர்ச்சிக்காக ஏதோ அளம்பத்தனங்களைப் பேசி உன்னை மயக்குகின்றனர். உனக்கு நேரவிருக்கும் கஷ்ட நிஷ்டூரங்களை நன்கறிந்து நான் உனக்குரைக்கும் இதமொழிகள் அந்தோ! உன் செவியிற் புகவில்லையே. இம்மூவுலகிலும் எங்குச் சென்றாலும் விடாது தொடர்ந்து கொல்லக்கூடிய ராம பாணங்கள் இலங்கையிற் புகாவண்ணம் தடை செய்யக்கூடிய நல்லுபாயத்தை எவ்வளவு உரைத்தும்

களை ஒருபோதும் கெடுக்கமாட்டார். நானும் உனக்காக அவரை வேண்டி உன் பிழையைப் பொறுத்தருளும்படி செய்வேன். ராக்ஷஸாதமா! ஜனஸ்தானத்திலுள்ள அரக்கரனைவரும் இராமனால் மாண்டொழிந்ததை யறிந்து நீ அவரோடு எதிர் நின்று போர்புரிய வல்லமையற்றுப் பல வஞ்சகங்கள் செய்தனை; சார்ங்க மென்னும் வில்லாண்ட அவருடைய வில் நாணொலியை விரைவில் கேட்பாய்! இராமனென்கிற கருடன் ராக்ஷஸஸர்ப்பங்களை அவலீலையாகக் கவர்ந்து கொல்ல வல்லவன். புலிகளினெதிரே புல்லிய நாய் நிற்கமாட்டாதவாறு போல, அவ்விராம லக்ஷ்மணர்களின் முன்னிலையில் நீ நிற்கவும் மாட்டாதவன். இராம பாணங்களுக்கு இலக்காகித் தொலைய வேண்டுவதுதான் உனது தலைவிதி போலும். [இத்யாதிகள் பிராட்டியின் உபதேசங்கள்.]

43. பிராட்டியின் உபதேசத்திற்குப் பிறகு திருவடியின் உபதேசம் இராவணனுக்குக் கிடைத்திருக்கிறது. ராக்ஷஸேச்வரா! உனது தமையனை சுக்ரீவன் உனக்குச் சொல்லியனுப்பிய இத வசனங்கள் பலவுண்டு. நானுமுரைக்கிறேன் கேளாய்! வாயுதேவனின் புதல்வனும் அநுமனென்பவனுமான நான் சீதைக்காக நூறு யோசனை விஸ்தாரமுடைய கடலைக் கடந்து இவ்விடம் வந்திருக்கிறேன். தவ வொழுக்கங்களிற் சிறந்து நீதி சாஸ்திரங்களையு முணர்ந்து கீர்த்தி பெற்று விளங்குகின்ற நீ நன்று செய்தாயில்லை. உன்னைப்போன்ற புத்திசாலிகள் செய்ய முயற்சிகொள்ள மாட்டாத காரியத்தைச் செய்தாயே. ஸ்ரீ ராம லக்ஷ்மணர்கள் சீறிச் சினந்து நிற்பார்களேல் அவர்கள் தொடுக்கும் அம்புகளின் முன்பு நிற்க வல்லவன் தேவர்களிலும் அசுரர்களிலும் மற்றுள்ளார்களிலும் எவனு மில்லையென்று உணருவாயாக. ராவணா! இராமனுக்குக் கெடுதி செய்து சுகம்பெற விரும்புவாரு முளரோ? இராமனிடம் நீ கொண்ட பகைமையை விட்டிட்டாயாகில் உனக்கு நல்லகாலமுண்டு; இல்லையேல் குலத்தோடும் விநாசமடைவாய். இராமனைச் சாமான்ய மனிதனென்று நினையாதேகொள்; உன்னைப் படாதபாடும் படுத்தின வாலியை ஓரே பாணத்தினால் முடித்திட்டவனென்று கேட்டிலையோ! நான் ராம பக்ஷபாதத்தினால் சொல்லுபவனல்லேன்; நடு நிலைமை வாய்ந்து உனது ஹிதத்தைக் கோரிச் சொல்லுகிறேனிவ்வளவும். ராவணா! தேவேந்திரனாயினும், முப்புரங்களை யெரித்த முக்கண்ணனாயினும் அவனது தந்தையான பிரமதேவனே யாயினும், இவர்களனைவரும் ஒன்றுகூடியாயினும் இராமனுக்குச் சிறிதளவும் தீங்கிழைக்க முடியாததாகும்; இராமன் எவனை நிக்ரஹிக்கத் திருவுள்ளம் பற்றுகிறானோ அவனை அநுக்ரஹிக்க ஒருவனு மாகாது. இத்யாதிகள் இராவணனுக்கு அநுமனால் கிடைத்த உபதேச நன்மொழிகள்.

44. இதற்குப்பிறகு விபீஷணாழ்வாரால் இராவணனுக்குக்கிடைத்த வுபதேசங்கள் அளவு கடந்தவை. அவை ஒருதடவையல்ல, பலதடவை கிடைத்திருக்கின்றன. "இராமன் மஹா பராக்ரமசாலி; தருமமூர்த்தி; அவனோடு வீண் விரோதம் நமக்குத் தகாது; அவனிடம் அபசார க்ஷாமணம் செய்துகொண்டால் நாம் நாசமடையாமல் நெடுங்காலம் வாழலாம். எவ்வளவு ஆலோசித்தாலும் நமக்குத்தோல்வி யொழிய வெற்றி யுண்டாக இடமேயில்லை. நம்முடைய ராக்ஷஸ வீரர்களான மந்திரிகள் உன்னுடைய முகமலர்ச்சிக்காக ஏதோ அஸம்பத் தங்களைப் பேசி உன்னை மயக்குகின்றனர். உனக்கு நேரிருக்கும் கஷ்ட நிஷ்டூரங்களை நன்கறிந்து நான் உனக்குரைக்கும் இதமொழிகள் அந்தோ! உன் செவியிற் புகவில்லையே. இம் மூவுலகினும் எங்குச் சென்றாலும் விடாது தொடர்ந்து கொல்லக்கூடிய ராம பாணங்கள் இலங்கையிற் புகாவண்ணம் தடை செய்யக்கூடிய நல்லுபாயத்தை எவ்வளவு உரைத்தும்

மாட்டேனென்கிறாயே. ராவணா! நீண்ட உடலும் கொடிய விஷமுமுள்ள ராம த்வேஷமென்கிற ஓர் பெரிய ஸர்ப்பம் உன்னைச் சுற்றிக்கொண்டு கிடக்கிறது. ராவணா! நான் உனது மேன்மையை விரும்பி நன்றாக ஆலோசித்து உனக்கு நன்மை பயக்கக்கூடிய இத வசனங்களைக் கூறியும் எள்ளளவும் உனக்குப்பயன்படவில்லை. ராம பாணங்களால் உனக்கு நேரப்போகிற அனர்த்தங்களை நன்கறிந்து சகிக்க முடியாமல் இவ்வளவு முரைத்தேன். இத்யாதிகள்

45. பிறகு சுகஸாரணர்களின் உபதேசமும் இராவணனுக்குக் கிடைத்திருக்கின்றது. இவர்கள் ராவணனாலேயே அனுப்பப்பட்டு ராம சேனைகளை வந்துபார்த்து வியப்படைந்து அவனிடம் மீண்டு சென்று கூறுகின்றனர்; ராவணா! ராமனது உருவத்தையும் ஸேனைகளையும் பார்க்கில் அவனொருவனே இலங்கை முழுவதையும் நாசஞ்செய்ய வல்லவனென்று திண்ணமாகத் தோன்றுகிறது. தேவர்களாலும் அசுரர்களாலும், அல்லது ஒன்று சேர்ந்த தேவாசுரர்களாலும் ராம லக்ஷ்மணர்களை எதிர்க்க முடியாது. அவர்களை வென்றுவிடலாமென நீ நினைப்பது வீணான நசையே. அவர்களோடு நீ விரோதம் வைத்துக்கொண்டது போதும்; வீண் கோபத்தை யடக்கிக்கொண்டு க்ஷமை வேண்டுவ தொன்றே தக்கது. இத்யாதிகள்.

46. சுகஸாரணர்களின் உபதேசத்திற்குப் பிறகு ராவணனுக்குத் தன் தாயான கைகஸியும் அவித்தனென்னும் பெருங் கிழவனான மந்திரியும் உபதேசம் செய்ததாகத் தெரியவருகிறது. ஆனால் இவ்வுபதேசமானது மற்ற வுபதேசங்களைப் போலே வான்மீகி முனிவரால் நேர்கொடு நேரே வெளியிடப் படவில்லை; விபீஷணன் பத்னியான ஸரமை அவ்வுபதேசங்களைத் தான் தன் காதால் கேட்டதாக ஸீதையினிடம் வந்து கூறுவதாய் (யுத்த காண்டம், ஸர்க்கம் 34ல்) தெரிவிக்கப்பட்டிருக்கிறது. தாயும் மந்திரிக் கிழவனுமான அவ்விருவரும் 'ராவணா! நீ ராமனுக்குத் தகுந்த மரியாதைகளுடன் சீதையைக் கொண்டுபோய்ச் சமர்ப்பித்துவிடு; அப்படி நீ செய்யாவிடில் உனக்கும் உன்னைச் சேர்ந்தவர்கட்கும் பெரிய அனர்த்தம் விளையும்' இத்யாதிகள் சொன்னதாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

47. அதற்குப்பிறகு மால்யவானுடைய உபதேசம் வஸிமிக்கது. இவன் ராவணனுக்குப் பாட்டனோடு கூடப்பிறந்தவ னென்றும் மதியிற் சிறந்தவனென்றும் கூறப்பட்டுளன். இவன் உரைத்ததாவது "அரக்கர்கோமானே! ஓரரசன் தன் விரோதியின்வலிமையைக் காட்டிலும் குறைந்த வலிமையுள்ளவனாயிருந்தாலும் ஸம பலனாயிருந்தாலும் அந்த விரோதியோடு தான் நட்புக்கொள்ளவேண்டும்; எதிரியினும் மிகுந்த வலிமையுடையவனாய் இருந்தால்தான் விரோதம் பாராட்டலாம். இவ்விஷயம் நீதிசாஸ்திர ஸித்தமாதலால் துர்ப்பலனான நீ பலவானான ராமனுடன் பகைபாராட்டுவது பொருந்தாது. தேவரிஷிகள் கந்தருவர் முதலான யாவரும் இராமனுக்கே வெற்றியைக்கோருகின்றனர். ராவணா! நீ தேவ தானவர்கள் யக்ஷ கந்தருவர்கள் முதலிய உயர்ந்தோரால் மரணம் நேராதிருக்கும்படி வரம் பெற்றனையே யன்றி மானிடர்களையும் வானரர்களையும் மதித்தாயில்லை. இப்போது மஹா பராக்கிரமசாலிகளான மானிடர்களும் வானரர்களும் கரடிகளும் கொண்டமுசுக்களும் இங்கு வந்து கர்ஜிக்கும்படியாய் விட்டது. இவர்களால் உனக்கு மரணம் தடுக்க முடியாததே. இந்த ராமன் கேவலம் மானிடனல்லன். விஷ்ணுதேவனே அரக்கர்களைக் கொல்ல மானிட வுருவம் தாங்கி வந்திருக்கின்றனனென்று உணர்வாயாக. ஆகவே நீ எதிரம்பு கோப்பதை விட்டு வணக்கங் கொண்டே வாழக் கடவை," என்று.

48. இவ்வுபதேசங்களுக்கெல்லாம் இராவணனுடைய மறுமொழி என்ன வென்பதை நாம் விவரிக்க வேணுமோ? கடைசியாக மால்யவானுக்குச்சொன்ன மறுமொழியை

மாத்திரம் இங்குத் தெரிவிப்போம். [யுத்தகாண்டம் முப்பத்தாறுவது ஸர்க்கங்காண்க] 'ராவணனுக்கு விநாசகாலம் சமீபித்து விட்டதனால் மால்யவான் சொன்ன ஹிதமான வார்த்தைகளை ஏற்றுக்கொள்ளாமல் மிகுந்த கோபத்துடன் மறுமொழி கூறுகிறான்' என்று வான்மீகி முனிவர் அவதாரிகையிடுகின்றார். அவன் கூறின மறுமொழியாவது—''கிழவனே! ராமன் ஓர் மானிடனாகையால் அற்ப பலமுடையவன். குரங்குகளைத் துணைகொண்டவனாகையால் நிஜ பலமில்லாதவன். தந்தையால் துரத்தப்பட்டு வந்தவனாதலால் ராஜ்யமில்லாதவன். நானோ ராக்ஷஸ ராஜன், தேவர்களையும் நடுங்கச்செய்பவன். எல்லாவித பராக்கிரமங்களிலும் குறையற்றிருக்கின்றேன். இப்படிப்பட்ட என்னை நீ குறைவாகப் பேசினது உனது மூர்க்கத்தனம். இராமன் ஏதோ கடலில் அணைகட்டிவிட்டானென்றால் இதில் என்ன வியப்பு? அவன் இங்குவந்து உயிரோடு திரும்பப்போகிறதில்லை; நான் ஒருவரையும் வணங்கப்பிறந்தவனல்லேன்'' என்று இந்த வார்த்தைகளையே மீண்டும் மீண்டும் மொழிந்தான் இராவணன். மஹாவீர மஹாராக்ஷஸர்களானோர் திரள்திரளாக மாய்ந்துமுடிந்து போவதைக் கண்டுங்கூட அவன் விதியின் பயனையே பெற்றொழிந்தான். பிறருடைய உபதேசங்களும் பயன்படவில்லை; தான் கட்கூடாகக் கண்ட பெருமைகளும் பயன்படவில்லை. மதியைக்காட்டிலும் விதியே வலிதென்று தேறிற்று.

49. ஸ்ரீராமாவதாரத்தில் பாதுகாபட்டாபிஷேக மென்று ஒன்று நடக்கப்போகிறதாக ஒருவரும் எதிர்பார்த்திருக்கவில்லை. ராஜ்யத்தை இராமனாளப் போகிறானென்று ப்ரஜைகள் எண்ணியிருந்தார்கள். பிறகு, கூனி சொற்கேட்ட கொடியவளின் வேண்டுகோளின்படி பரதனாளப் போகிறானென்று எண்ணியிருந்தார்கள். இரண்டும் நடவாமல் ஒருவருமெதிர்பாராத பாதுகாபட்டாபிஷேகம் நடந்தது. க்ருஷ்ணாவதாரத்தில், மலைபுரை தோள் மன்னவரும் மாரதரும் பலரும் திரண்ட விடத்தே பாரதப்போர் நிகழப் போகிறதென்று நிரீக்ஷித்திருந்தார்களேயல்லது கீதா சாஸ்த்ர மொன்று அவதரிக்கப் போகிறதென்று ஒருவரும் எதிர்பார்த்திருக்கவில்லை. அசிந்திதமாக அஃது அவதரித்தது. ஆகவே எதுவும் தெய்வச் செயலாக நடந்துவருகிறதென்பதே தத்துவம். இப்போது க்ரந்த விவாதங்கள் முற்றிவருவதும் தெய்வச் செயலே. மிகப் பெரிய சாஸ்த்ரார்த்தங்கள் வெளிவருதற்கே யென்க.

50. பிள்ளைலோகாசார்யர் * சிறொன்று தூப்புல் திருவேங்கடமுடையானென்ற தனியனைப் பணித்தருளினரென்று இந்த வார்த்தையைச் சில வகுப்பினர் வலிதாக எழுதி வருகிறார்கள். இவ்விஷயம் யதார்த்தமே யென்று யாவரும் கொள்க. இதில் விவாதலேசமுமில்லை. *தன்னாசிரியன் தன்னொடுகற்றோன், தன் மாணாக்கன் தகுமுரைகாரனென்று, இன்னோர் பாயிரமியம்புதல் கடனே * என்ற நன்னூற் சூத்திரப்படி தனியனியற்றுங்கடமை ஆசார்யனுக்கே ப்ரதமவித்தமாதலால் ஆசார்யரான பிள்ளைலோகாசாரியர் ஸ்வசிஷ்யரான சிறொன்றுதூப்புல்திருவேங்கடமுடையானுக்குத் தனியனிட்டு ப்ரசம்ஸை பண்ணினது பொருத்தமே யென்று கொள்க. சிஷ்யன் ஆசார்யனுக்குத் தனியனிடுகிற முறை இப்பாட்டில் சிறிதுமில்லை யென்பது ஸ்பஷ்டம்.

51. ஸ்ரீவசநபூஷண ஆசார்யஹ்ருதயாதிகளான அநேக திவ்ய க்ரந்தங்களாலே ஸம்ப்ரதிஷ்டாபிக்கங்களாய் ஸஹ்ருதயஹ்ருதயஹாரிகளான திவ்யார்த்தங்களாலே விலக்ஷணமான பெருமையைப் பெற்றிருக்கின்றநம்முடைய அகாத்ய தர்சனத்தை அபரிமித அதிமதுர திவ்ய ஸூக்திகளாலே பிறர்க்கு அசைக்கவொண்ணாதபடி ஸம்ப்ரதிஷ்டிதமாக்கியருளினவர் தூய

மாத்திரம் இங்குத் தெரிவிப்போம். [யுத்தகாண்டம் முப்பத்தாறாவது ஸர்க்கங்காண்க] 'ராவணனுக்கு விநாசகாலம் சமீபித்து விட்டதனால் மால்யவான் சொன்ன ஹிதமான வார்த்தைகளை ஏற்றுக்கொள்ளாமல் மிகுந்த கோபத்துடன் மறுமொழி கூறுகிறான்' என்று வான்மீகி முனிவர் அவதாரிகையிடுகின்றார். அவன் கூறின மறுமொழியாவது—"கிழவனே! ராமன் ஓர் மானிடனானகையால் அற்ப பலமுடையவன். குரங்குகளைத் துணைகொண்டவனாகையால் நிஜ பலமில்லாதவன். தந்தையால் துரத்தப்பட்டு வந்தவனாதலால் ராஜ்யமில்லாதவன். நானோ ராக்ஷஸ ராஜன், தேவர்களையும் நடுக்கச்செய்பவன். எல்லாவித பராக்கிரமங்களிலும் குறையற்றிருக்கின்றேன். இப்படிப்பட்ட என்னை நீ குறைவாகப் பேசினது உனது மூர்க்கத்தனம். இராமன் ஏதோ கடலில் அணைகட்டிவிட்டானென்றால் இதில் என்ன வியப்பு? அவன் இங்குவந்து உயிரோடு திரும்பப்போகிறதில்லை; நான் ஒருவரையும் வணங்கப்பிறந்தவனல்லேன்" என்று இந்த வார்த்தைகளையே மீண்டும் மீண்டும் மொழிந்தொழிந்தான் இராவணன். மஹாவீர மஹாசூரர்களானோர் திரள்திரளாக மாய்ந்துமுடிந்து போவதைக் கண்டுங்கூட அவன் விதியின் பயனையே பெற்றொழிந்தான். பிறருடைய உபதேசங்களும் பயன்படவில்லை; தான் கட்கூடாகக் கண்ட பெருமைகளும் பயன்படவில்லை. மதியைக்காட்டிலும் விதியே வலிதென்று தேறிற்று.

49. ஸ்ரீராமாவதாரத்தில் பாதுகாபட்டாபிஷேக மென்று ஒன்று நடக்கப்போகிறதாக ஒருவரும் எதிர்பார்த்திருக்கவில்லை. ராஜ்யத்தை இராமனாளப் போகிறானென்று ப்ரஜைகள் எண்ணியிருந்தார்கள். பிறகு, கூனி சொற்கேட்ட கொடியவளின் வேண்டுகோளின்படி பரதனாளப் போகிறானென்று எண்ணியிருந்தார்கள். இரண்டும் நடவாமல், ஒருவருமெதிர்பாராத பாதுகாபட்டாபிஷேகம் நடந்தது. க்ருஷ்ணாவதாரத்தில், மலைபுரை தோள் மன்னவரும் மாரதரும் பலரும் திரண்ட விடத்தே பாரதப்போர் நிகழப் போகிறதென்று நிரீக்ஷித்திருந்தார்களேயல்லது கீதா சாஸ்த்ர மொன்று அவதரிக்கப் போகிறதென்று ஒருவரும் எதிர்பார்த்திருக்கவில்லை. அசிந்திதமாக அஃது அவதரித்தது. ஆகவே எதுவும் தெய்வச் செயலாக நடந்துவருகிறதென்பதே தத்துவம். இப்போது க்ரந்த விசாரங்கள் முற்றிவருவதும் தெய்வச் செயலே. மிகப் பெரிய சாஸ்த்ரார்த்தங்கள் வெளிவருதற்கே யென்க.

50. பிள்ளைலோகாசார்யர் *சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்* என்ற தனியனைப் பணித்தருளினரென்று இந்த வார்த்தையைச் சில வகுப்பினர் வலிதாக எழுதி வருகிறார்கள். இவ்விஷயம் யதார்த்தமே யென்று யாவரும் கொள்க. இதில் விஸம்வாத லேசமுமில்லை. *தன்னாசிரியன் தன்னொடுகற்றோன், தன் மாணாக்கன் தகுமுரைகாரனென்று, இன்னோர் பாயிரமியம்புதல் கடனே* என்ற நன்னூற் சூத்திரப்படி தனியனியற்றுங்கடமை ஆசார்யனுக்கே ப்ரதமஸித்தமாதலால் ஆசார்யரான பிள்ளைலோகாசாரியர் ஸ்வசிஷ்யரான சீரொன்றுதூப்புல்திருவேங்கடமுடையானுக்குத் தனியனிட்டு ப்ரசம்ஸை பண்ணினது பொருத்தமே யென்று கொள்க. சிஷ்யன் ஆசார்யனுக்குத் தனியனிடுகிற முறை இப்பாட்டில் சிறிதுமில்லை யென்பது ஸ்பஷ்டம்.

51. ஸ்ரீவசநபூஷண ஆசார்யஹ்ருதயாதிகளான அனேக திவ்ய க்ரந்தங்களாலே ஸம்ப்ரதிஷ்டாபிதங்களாய் ஸஹ்ருதயஹ்ருதயஹாரிகளான திவ்யார்த்தங்களாலே விலக்ஷண வைபவத்தைப் பெற்றிருக்கின்ற நம்முடைய அநவத்ய தர்சநத்தை அபரிமித அதிமதுர திவ்ய ஸூக்திகளாலே பிறர்க்கு அசைக்கவொண்ணாதபடி ஸுப்ரதிஷ்டிதமாக்கியருளினவர் தூய

தென்மறைவல்லவர்களையே வாழ்த்தும் தூப்புல்குலமணி யொருவரேயாவர். ஆபாதசூடமநபாயியான இந்த ஸத்தர்சனத்தில் பிறர் ஒரு தூஷணையும் சொல்ல அவகாசமுறாதபடி ஸகல விதமான குதர்க்கங்களையும் ஸமூலோந்மூலநம் செய்தருளி, ஆழ்வார்களின் அரும்பெரும் பாசுரங்களையே யடியொற்றியதான பகவத் ராமாநுஜஸித்தாந்தத்தை அல்பமதிகளால் கலக்க வொண்ணாதபடி நிலைநிறுத்தியருளின பெருவள்ளல் * சந்தம்மிகுதமிழ்மறையோன் தூப்புல் தோன்றும் வேதாந்தகுருவொருவரேயென்று ஆயிரந்தடவை பேசினாலும் மிகையாகாது. ஆனால், இதைப் பேசத்தகாதவர்கள் பேசுவதுதான் தகுதியற்றது.

52. திருவரங்கம் பெரியகோயில், திருவிந்தளூர், திருச்சேறை, திருவல்லிக்கேணி, பெருமாள்கோயில், ஸ்ரீபெரும்பூதூர் முதலான பல பல திவ்ய தேசங்களில் அந்நாள் தொடங்கி இந்நாள்வரை ஸ்வாமி தேசிகனை மற்றுமுள்ள ஆசாரியர்களோடொப்ப அர்ச்சையாக எழுந்தருளப்பண்ணி ஸகலவைபவங்களும் பொலிய மஹோத்ஸவச் சிறப்புகளுடனும் ஆராதித்துவருபவர்கள் ஸ்ரீலோகாசார்ய ஸ்ரீமத் வரவரமுநி ஸம்ப்ரதாயஸ்தர்களே யல்லது மற்றையாரல்லர் என்பதையும், ஸந்நிதிக்குப் பஹிர்ப்பூமிகளான இடங்களிலே புதிது புதிதாக தேசிகன் ஸந்நிதியென்று கட்டிவைத்துக் குலாவுமவர்கள் யாரென்பதையும் விவேகிகள் விமர்சிக்கவேணும்.

53. உலகம் கவனிக்கவேண்டிய முக்கியமான நல்வார்த்தைகளை இனிமேல்காண்க. நம்முடைய வாதவிவாத நூல்கள் நூற்றுக்கணக்காக அவதரித்தமையுண்டு. ஆனால் ஒன்றுகூட நாம் ஸ்வதந்திரமாக எழுதியதன்று. பிறர் தவறான விஷயங்களையும் ஆசார்ய தூஷணையான வியாஸங்களையும் எழுதி வெளியிட்டிருந்ததால் அவற்றுக்கு மறுப்பாகவே நாம் கண்டன க்ரந்தங்களை இயற்றி வெளியிட்டிருக்கிறோம். இங்ஙனேயல்லாமல் அப்ரஸக்தமாக நாமே வாதவிவாதங்களிலிறங்கி எழுதிய நூல் ஒன்றுகூட கிடையாது. உண்டானால் எடுத்துக்காட்டி நம்மை வாய்மூடுவிக்கலாம். ஆசார்ய தூஷணையாகப் பிறர் எழுதினாலும் நீ வாளாவிருக்கலாகாதோ" வென்று நம்மைக் கேட்டால் இப்பிறப்பில் வாளாவிருக்க முடியாதென்றே சொல்லுவேன்.

54. நாம் பரம ஆஸ்திகர்கள். உயர்ந்த வைதிக மதத்தைச் சேர்ந்தவர்கள். நாம் எந்த ஸம்பிரதாயத்தில் பிறந்திருக்கிறோமோ அந்த ஸம்பிரதாயத்தில் முழு நம்பிக்கையும் மஹா பக்தியுமுடையவர்களாயிருத்தல் வேண்டும். ஆனால் இதர மதங்களிலாவது இதர ஸம்பிரதாயங்களிலாவது அந்த மத ஸம்பிரதாயங்களை வளர்த்த மூலபுருஷர்களிடத்திலாவது எள்ளளவும் த்வேஷ புத்தி வஹிக்கத்தகாது. சிலரோவென்னில், இதர மதங்களையும் இதர மதப்ரவர்த்தகர்களையும் கண்டிப்பதோ தூஷிப்பதோ செய்தால்தான் தம்மதம்மேன்மைபெறுமென்றும் அதுவே தம்முடைய மதாபிமானத்திற்கு உற்றதென்றும் நினைத்து அவ்வழியில் ஊன்றுகிறார்கள். ஸமரஸம் மேம்பட்டு வாழவேண்டிய இக்காலத்தில் இதர மத குரு தூஷணைகளைச் செய்வதென்பது மிகவும் அருவருக்கத்தக்க விஷயம். ஸ்ரீராமாநுஜர் முதலிய மஹான்களும் இதர மதங்களை தூஷித்திருக்கையாலே அவர்கள் காட்டினவழியை நாம் பின்பற்றினாலென்ன? என்பர் சிலர். அந்தோ! மதஸ்தாபகாசார்யர்களான மஹான்கள் எங்கே! நாம் எங்கே! அவர்கள் எவ்வளவு கம்பீரமான நடையில் நூல்களை அமைத்திருக்கிறார்கள்! ஒரு கவரையாவது அவர்கள் கட்டிக் குறித்ததுண்டோ? நல்வார்த்தைகளை யுக்திகளாலும் பிரமாணங்களாலும் நிலைநாட்டவேணுமென்கிற குறிகளும் ஒவ்வொருவர்க்குமிருக்கலாம். அது தப்பன்று. சங்கராசார்ய ஸ்வாமிகளும் ராமாநுஜாசார்ய ஸ்வாமிகளும் முதலான ஆசார்யர்கள் எழுதியுள்ள நூல்களெல்லாம் ஸாத்விகத்தன்மையே வடிவெடுத்திருக்குமேல்

தை, கோபதாபங்களும் மதமாத்ஸர்யங்களும் வெளிக்காணும்படியான சொல் ஒன்றாவது அவற்றில் காணக்கிடைக்குமோ? "வணங்குந்துறைகள் பலபலவாக்கி.........நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்" என்கிற நம்மாழ்வாருடைய பாசுரத்தின் விரிவான பொருளே உண்மையான பக்திமான்களின் நெஞ்சில் ஊன்றியிருக்கவேண்டும்.

55. அன்பர்கள் இந்தப் பாசுரத்தையே உருப்போடவேண்டும். இதற்குச் சமானமான பாசுரம் வேறொன்று எந்த நூலிலாவது கிடைக்குமா? இவ்வளவு ஸமரஸமாகப்பேசின மஹான் வேறு யாரேனுமுண்டோ? ஆழ்வாரென்றால் அவரன்றோ ஆழ்வார்! தெய்வமென்றால் அவரன்றோ தெய்வம்! ஞானியென்றால் அவரன்றோ ஞானி! யோகியென்றால் அவரன்றோ யோகி! நாளைக்கும் நம்மாழ்வாரைக் கொண்டாடாத சமயத்தவர் இல்லையே. மேலே குறித்த பாசுரத்தைப் பேசும்படியான அவருடைய விசாலமான திருவுள்ளமன்றோ உண்மையில் அவர்க்கு இவ்வளவு பெருமைக்குக் காரணம்! அவருடைய வாய்மொழிகளைச் சிந்தை செய்பவர்களுக்கு (அல்லது) சிந்தை செய்யுங் குடியிலே பிறந்தவர்களுக்கு மதத்வேஷம், மத தூஷணம், மத ஸ்தாபக மஹாபுருஷநிந்தை முதலான தீய குணங்கள் தலைகாட்ட வழியுண்டோ? சங்கராசார்ய ஸ்வாமிகள் சொன்னதெல்லாம் தவறு என்றும், ராமாநுஜாசார்ய ஸ்வாமிகள் சொன்னதெல்லாம் தவறு என்றும்.....இப்படி ஒவ்வொரு ஆசார்யர்களையும் தூஷித்து நூல்களையெழுதி வெளியிடுமவர்கள் எங்குமுள்ளார்கள். ஒருவருடைய மனமும் நோகாதபடி எழுதுகிற முறைமை உலகில் இல்லையா? விளக்கை ஏற்றிவைத்தால் இருள் தானே அகலாதா? அவரவர்களிடத்திலுள்ள குணங்களையும் அர்த்த விசேஷங்களையும் இதர தூஷணையில்லாமல் எவ்வளவோ பெருமைப்படுத்திச் சொல்ல முடியாதா? இதர ஆசார்யர்களை லாகவப்படுத்தி யெழுதுமவர்களுடைய நினைவு எதுவாக இருக்க வேணுமென்றால், அன்பர்களுக்கு அந்த ஆசார்யர்களிடத்திலே அருவருப்பு உண்டாகட்டுமென்றும், அந்த ஆசாரியர்களால் ப்ரவர்த்திப்பிக்கப்பட்ட மதம் தவறென்று தோன்றி நம்மதத்திற்கு வந்து விடட்டுமென்றும் இப்படிச் சில நினைவுகளிருக்கலாம். இது நிறைவேறக்கூடிய நினைவன்று. ஏனென்றால்; மெய்யன்பர்களான அவரவர்கள் ஸ்வாசார்யர்களிடத்திலும் ஸ்வமதத்திலும் வைத்திருக்கிற பக்தி ஸாமான்யமானதன்றே.

56. ஸ்ரீராமாநுஜர் எழுதினதெல்லாம் பிசகு என்றோ, ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் எழுதினதெல்லாம் அஸம்பத்தம் என்றோ, மணவாளமாமுனிகளெழுதியவை முழுதும் அஸாரம் என்றோ எத்தனை நிரூபணம் செய்தாலும், இந்த நிரூபணங்கள் யுக்தமானவையே யென்று தோன்றிவிட்டாலும் அவரவர்கள் அவ்வோ ஆசார்யர்களிடத்தில் வைத்திருக்கிற பக்தி விசேஷம் ஸர்வசக்தனான பகவானாலும் மாற்றவொண்ணாததன்றோ. இந்த நிரூபணங்களைக் கண்டு மாறிவிடுகிற பக்தி பக்தியோ? குண நிபந்தனமான பக்தியிற் காட்டிலும் ஸ்வரூபனித்தமான பக்தியே உயர்ந்ததென்று நம் முன்னோர்கள் ஸ்தாபித்திருக்கும் அர்த்த விசேஷம் பக்தர்களுடைய நெஞ்சில் இயற்கையாகவே ஊறியிருப்பதன்றோ. ஆகவே இதர ஆசார்யர்களை லாகவப்படுத்திப் பேசுவதும், எழுதுவதும் ஒருவிதத்திலும் ஒரு பயனையும் பெறுவிக்க முடியாததோடு தங்களுக்கே லாகவத்தை விளைவித்து நிற்குமென்றதாயிற்று.

57. உலகில் அவரவர்களுக்குள்ள சமயப் பற்றும் ஆசார்ய பக்தியும் அசைக்க முடியாதது. ப்ரஹ்மஸூத்ரத்திற்கு ஸ்ரீ மத்வாசார்ய ஸ்வாமிகள் செய்த பாஷ்யத்தில் "ப்ரஹ்ம சப்த: விஷ்ணவி" என்றெழுதியுள்ளார். இங்கு 'விஷ்ணௌ' என்று எழுத

வேணுமேயொழிய 'விஷ்ணவி' என்றெழுத உபபத்தியில்லையென்று வித்வான்களெல்லாரும்
நினைக்கக்கூடியது. ஆனால் அந்த மத்வபாஷ்யத்திற்கு வியாக்யானமெழுதிய வொரு மஹா
பண்டிதர் இங்கு என்ன எழுதியிருக்கிறாரென்றால்: "இவ்வாசாரியர் தாம் மஹர்ஷியென்
பதையும், தம்முடைய க்ரந்தம் ஆர்ஷமென்பதையும் தெரிவிப்பதற்காக விஷ்ணவியென்று
அபசப்தப்ரயோகம் பண்ணுகிறார்" என்றெழுதியுள்ளார். இதைக்கண்டு இதர வித்வான்
கள் "இஃதென்ன இப்படியா எழுதுவது? அபசப்தப்ரயோகம் பண்ணியா ஒருவர் ரிஷித்
வத்தை ஸம்பாதித்துக்கொள்வது!" என்று ஏசுகிறார்கள். மாத்வஸம்பிரதாயத்தில் எத்தனை
வித்வான்களிருந்தாலும் அவர்களில் ஒருவருக்காவது இது அஸங்கதமென்று தோன்றுமோ!
[illegible] பக்தி குன்றுமோ? இதை அவர்கள் பெரிய நிதியாகவன்றோ
[illegible] மயாழ்வார் * என்னெஞ்சினால் நோக்கிக் காணீர் என்ற
[illegible] அந்தந்த மதத்தில பற்றுடையவர்களுக்கு அந்தந்த ஆசாரியர்
[illegible] அரிய பெரிய மருந்தாகத் தோன்றுமேயன்றி வேறாகத் தோன்ற நியாயமே
யில்லை. ஆகவே ஒரு மதத்தவர்கள் இன்னொரு மதத்தைச்சேர்ந்த ஆசாரியர்களிடத்தில்
அஜ்ஞான அந்யதாஜ்ஞான நிரூபணம் செய்வதானது வீண் பிரயாஸம்—தவறான காரியம்—
அவசியமற்ற செயல் என்றே விவேகிகள் கருதுவார்கள்.

58. உண்மையில் அவதார புருஷர்களானவர்களே ஆசார்யபீடத்தில் அமர்த்திக்
கொண்டாடப்பட்டிருந்தார்களென்பதில் ஸந்தேஹமுண்டோ? திருக்கச்சிநம்பிகளை யெடுத்
துக்கொள்வோம். இவர் எந்த வருணத்தில் அவதரித்தாரென்பது யாவர்க்கும் தெரியும்.
இவருக்கு என்ன ஞானமிருந்ததென்று இப்போது நம்மால் தெரிந்துகொள்ளமுடியாம
லிருக்கிறது. மஹாஜ்ஞான நிதியாயிருந்த ஸ்ரீராமாநுஜர் இவரைத் தெய்வமாகக் கொண்
டிருந்தாரென்று சொல்லப்படுகிறது. அதைச் சிலர் நம்பட்டும் நம்பாமற் போகட்டும்;
அந்த திருக்கச்சிநம்பிகளின் விக்ரஹாராதனையில்லாத விஷ்ணுவாலயம் இருக்கிறதாவென்று
பாருங்கள். இதனாலேயே அவருடைய மேன்மை ஒப்பற்றதென்று நாம் தெரிந்துகொள்
ளும்படியிருக்கின்றது. 'எந்த புற்றில் எந்த பாம்பிருக்குமோ!' என்கிற பழமொழியையும்
கவனிக்கவேண்டும். எந்த ஆசாரியர்களின் ஞானம் முதலிய நன்மைகள் உலகப்பிரசித்த
மாய் உலகெல்லாம் கொண்டாட நிற்கின்றனவோ அப்படிப்பட்ட ஆசாரியர்களைப்பற்றி
இழிவாக எழுதிவிடுவதென்பது கொஞ்சமும் நினைக்கக்கூடாத விஷயம். அவர்களுக்கும்
நமக்கும்—மலைக்கும் கடுகுக்குமுள்ள வாசியன்றோவுள்ளது. அவர்களெங்கே நாமெங்கே!

59. அவரவர்கள் தம்தம் மதஸ்தாபக ஆசாரியர்களை எவ்வளவு மேம்படுத்திக்
கூறினும் இதில் யாராவது தப்பு நினைக்கமுடியுமா? 'என் தாயார் மஹாபதிவிரதை'
என்று எவ்வளவு சொல்லிப் புகழ்ந்தாலும் இதில் யாருக்காவது வருத்தமுண்டாகுமோ?
இதற்காக அக்கம்பக்கத்து வீட்டு மாதர்களின் பெயரை வலியப்பிடித்திழுத்து அவர்களை
நிந்தித்தெழுதவோ பேசவோ புறப்பட்டால் என்னாகும்! இது யார் செய்யும் காரியம்?
இதர ஸ்த்ரீகளை ஸ்வைரிணிகளென்று பழிப்பதனால் தம் தாயாருக்கு ஏதேனும் அதிக
பாதிவ்ரத்யம் தேறிவிடுமோ? ஒருகாலும் தேறாது.

[illegible] ஆசார்யஹ்ருதய வ்யாக்கியான விமர்சம் ]

60. [illegible] ஸம்பிரதாயத்தில் விளங்குகின்ற ஸகல [illegible]
[illegible] மொன்றே மிகச்சிறந்ததென்பது ப்ர[illegible]

வேணுமேயொழிய 'விஷ்ணவி' என்றெழுத உபபத்தியில்லையென்று வித்வான்களெல்லாரும்
நினைக்கக்கூடியது. ஆனால் அந்த மத்வபாஷ்யத்திற்கு வியாக்யானமெழுதியவொரு மஹா
பண்டிதர் இங்கு என்ன எழுதியிருக்கிறாரென்றால்: "இவ்வாசாரியர் தாம் மஹர்ஷியென்
பதையும், தம்முடைய க்ரந்தம் ஆர்ஷமென்பதையும் தெரிவிப்பதற்காக விஷ்ணவியென்று
அபசப்தப்ரயோகம் பண்ணுகிறார்" என்றெழுதியுள்ளார். இதைக்கண்டு இதர வித்வான்
கள் 'இது என்ன? இப்படியா எழுதுவது? அபசப்தப்ரயோகம் பண்ணியா ஒருவர் ரிஷித்
வத்தை ஸம்பாதித்துக்கொள்வது!' என்று ஏசுகிறார்கள். மாத்வஸம்பிரதாயத்தில் எத்தனை
வித்வான்களில்லை. அவர்களில் ஒருவருக்காவது இது அஸங்கதமென்று தோன்றுமோ?
தோன்றினாலும் ஆசார்ய பக்தி குன்றுமோ? இதை அவர்கள் பெரிய நிதியாகவன்றோ
கொண்டாடுகிறார்கள். நம்மாழ்வார் * என்னெஞ்சினால் நோக்கிக் காணீர் * என்றதை
யாரும் மறக்கலாகாது. அந்தந்த மதத்தில் பற்றுடையவர்களுக்கு அந்தந்த ஆசாரியர்கள்
பேசியிருப்பது அரிய பெரிய மருந்தாகத் தோன்றுமேயன்றி வேறாகத் தோன்ற நியாயமே
யில்லை. ஆகவே ஒரு மதத்தவர்கள் இன்னொரு மதத்தைச்சேர்ந்த ஆசாரியர்களிடத்தில்
அஜ்ஞான அந்யதாஜ்ஞான நிரூபணம் செய்வதானது வீண் பிரயாஸம்—தவறான காரியம்—
அவசியமற்ற செயல் என்றே விவேகிகள் கருதுவார்கள்.

58. உண்மையில் அவதார புருஷர்களானவர்களே ஆசார்யபீடத்தில் அமர்த்திக்
கொண்டாடப்பட்டிருந்தார்களென்பதில் ஸந்தேஹமுண்டோ? திருக்கச்சிநம்பிகளை யெடுத்
துக்கொள்வோம். இவர் எந்த வர்ணத்தில் அவதரித்தாரென்பது யாவர்க்கும் தெரியும்.
இவருக்கு என்ன ஞானமிருந்ததென்று இப்போது நம்மால் தெரிந்துகொள்ளமுடியாம
லிருக்கிறது. மஹாஜ்ஞான நிதியாயிருந்த ஸ்ரீராமாநுஜர் இவரைத் தெய்வமாகக் கொண்
டிருந்தாரென்று சொல்லப்படுகிறது. அதைச் சிலர் நம்பட்டும் நம்பாமற் போகட்டும்.
அந்த திருக்கச்சிநம்பிகளின் விக்ரஹாராதனையில்லாத விஷ்ணுவாலயம் இருக்கிறதாவென்று
பாருங்கள். இதனாலேயே அவருடைய மேன்மை ஒப்பற்றதென்று நாம் தெரிந்துகொள்
ளும்படியிருக்கின்றது. 'எந்த புற்றில் எந்த பாம்பிருக்குமோ!' என்கிற பழமொழியையும்
கவனிக்கவேண்டும். எந்த ஆசாரியர்களின் ஞானம் முதலிய நன்மைகள் உலகப்பிரசித்த
மாய் உலகெல்லாம் கொண்டாட நிற்கின்றனவோ அப்படிப்பட்ட ஆசாரியர்களைப்பற்றி
இழிவாக எழுதிவிடுவதென்பது கொஞ்சமும் நினைக்கக்கூடாத விஷயம். அவர்களுக்கும்
நமக்கும்—மலைக்கும் கடுகுக்குமுள்ள வாசியன்றோவுள்ளது. அவர்களெங்கே நாமெங்கே!

59. அவரவர்கள் தம்தம் மதஸ்தாபக ஆசாரியர்களை எவ்வளவு மேம்படுத்திக்
கூறினாலும் இதில் யாராவது தப்பு நினைக்கமுடியுமா? 'என் தாயார் மஹாபதிவிரதை'
என்று எவ்வளவு சொல்லிப் புகழ்ந்தாலும் இதில் யாருக்காவது வருத்தமுண்டாகுமோ?
இதற்காக அக்கம்பக்கத்து வீட்டு மாதர்களின் பெயரை வலியப்பிடித்திழுத்து அவர்களை
நிந்தித்தெழுதவோ பேசவோ புறப்பட்டால் என்னாகும்! இது யார் செய்யும் காரியம்?
இதர ஸ்த்ரீகளை ஸ்வைரிணிகளென்று பழிப்பதனால் தம் தாயாருக்கு ஏதேனும் அதிக
பாதிவ்ரத்யம் தேறிவிடுமோ? ஒருகாலும் தேறாது.

[இனி ஆசார்யஹ்ருதய வ்யாக்கியான விமர்சம்]

60. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் விளங்குகின்ற ஸகல க்ரந்தங்களுக்குள்ளும்
ஆசார்யஹ்ருதயமென்கிற க்ரந்தமொன்றே மிகச்சிறந்ததென்பது ப்ரஸித்தம். இதற்கு

மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் அவதரியாதிருந்தால் இந்த க்ரந்தம் தோன்றியும் நிஷ்ப்பலம் என்று மஹான்கள் கூறுவர். அப்படிப்பட்ட இந்த மஹாக்ரந்தம் முதன்முதலாகத் தெலுங்கு லிபியில் 1876-ஆம் ஹூத்தில் அச்சிடப்பட்டது. [இற்றைக்கு எண்பது வருஷங்களுக்கு முன்பு அச்சிடப்பட்டதென்கை.] அந்தப்பதிப்பில் மூலத்திலும் வியாக்கியானத்திலும் காணப்படுகிற பிழைகள் அபரிமிதம். மூலத்திலுள்ள பிழைகளையெல்லாம் விபுலமான விவரணத்துடன் நாம் பலகால் எடுத்துக் காட்டி வெளியிட்டிருக்கிறோமாதலால் இப்போது மூலத்தை விட்டு வியாக்கியானத்தைப்பற்றி மாத்திரமே சில விஷயங்கள் விஜ்ஞாபிக்கப்படுகின்றன. மேலே ப்ரஸ்தாவித்த தெலுங்குபதிப்பில், அக்ஷரங்கள் மாறுடினவை பதங்கள் மாறுடினவை வாக்யங்கள் விட்டுப்போனவை........ இப்படிப்பட்ட அவத்யங்கள் அனேகம் புகுந்தன. ஸ்தாலீபுலாக ந்யாயேந ஸ்வல்பம் காட்டுவோம்; எட்டாவது சூர்ணையின் வியாக்கியான முடிவில் "இருவல்லருள் நல்வினைகளென்றது இருள் நல்வினையும் அருள் நல்வினையும் என்றபடி" என்றுள்ளது. இது அஸங்கிதம். "இருநல்வினையும் அருள் நல்வினையுமென்றபடி" என்றிருக்கவேணும். பதினோராவது சூர்ணையின் வியாக்கியானத்தில் "ஒண்பொருள் பொருளல்லாதவை யென்னாதே" என்கிற மூலத்திற்குச் சேர "ஆத்மாவின் சீர்மை பாராதே" என்றும் "அசித்தின் சிறுமை பாராதே" என்றும் மணவாளமாமுனிகள் ஸாதித்திருக்க, இரண்டிடத்திலும் (சீர்மை பாராதே) என்றே பதிப்புள்ளது. ஆத்மாவுக்குச் சீர்மையுண்டு; அசித்துக்குச் சிறுமையேயொழிய சீர்மை கிடையாது. அச்சிட்டவர்கள் [பரிசோதித்தவர்கள்] மஹாபண்டிதர்களேயொழிய ஸாமாந்யர்களல்லர். அவர்களுடைய மனதிலும் அநுபபத்தி தோன்றாமலே இப்படி அஸம்பத்தமாக அச்சிட்டுவிட்டார்கள். அந்த தெலுங்கு பதிப்பையே ஆதாரமாகக்கொண்டு 1906 ஆம் வருஷத்தில் (அதாவது இற்றைக்கு 50 வருஷங்களுக்கு முன்) ஒரு பண்டிதர் அந்த ஸ்ரீ கோசத்தைத் தமிழ் லிபியில் அச்சிட்டார். மேலே காட்டின வகையில் ஏற்பட்ட பிழைகளையெல்லாம் அந்த பண்டிதரும் தமது பதிப்பில் பரிபாலனம் செய்திருக்கிறாரேயொழிய ஒன்றையும் திருத்தினவரல்லர். அதிகப்படியான பிழைகளையும் புகுத்தினார் என்றும் சொல்லலாம். இப்படிப்பட்ட ஸ்ரீ கோசங்களை வைத்துக்கொண்டு ப்ரவசனம் செய்து போருகிற காலக்ஷேபகார்கள், ஸ்பஷ்டமாக அநுபபத்தி தோன்றக்கூடிய இடங்களிலும் அது தோன்றப்பெறாமல் பதிப்பிலிருக்கிறபடியே ப்ரவசனம் செய்து போகக் காண்கிறோம். 'இது அஸங்கதமல்லவா? அநுபபந்நமல்லவா?" என்று விவேகிகள் கேட்டுவிட்டால் சிறிச்சிவந்த கண்ணினராய் "பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளை அஸங்கதமென்றும் அநுபபந்நமென்றும் தூஷிக்கிறாயே பாவி!" என்று நிந்திக்கத் தலைப்படுகிறார்கள். அச்சுப்பிழையென்று கூறினால் பூர்வாசார்யர்களின்மேல் குறை கூறுவதாக அர்த்தம் செய்துகொண்டு சீறுமவர்களைப்பற்றி என் சொல்லுவது.

இந்த ஆசார்யஹ்ருதயவியாக்கியானம் தமிழ்லிபியில் 1906 ஆம் வருஷத்தில் அச்சிடப்பட்டதென்று கீழே தெரிவித்திருக்கிறோம். ஸ்ரீமான் உ. வே. திருநீர்மலைமாடபூஷி ஸ்ரீநிவாஸராகவாசாரியர் ஸ்வாமியென்பவர் அந்த தமிழ்ப்பதிப்பு வெளியிட்டவர். அஸ்மதாசார்யரான ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகியமணவாள ராமாநுஜஜீயர்ஸ்வாமி 1905 ஆம் வருஷத்தில் ஸ்ரீ பார்த்தஸாரதி உத்ஸவம் ஸேவிக்கத் திருவல்லிக்கேணியி லெழுந்தருளியிருந்தபோது மேலேசொன்ன திருநீர்மலை ஸ்வாமியானவர் ஸ்ரீ ஜீயர்ஸ்வாமியிடம் வந்து, தாம் ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானத்தைத் தமிழ் லிபியில் அச்சிட்டுக்கொண்டிருப்பதாகத் தெரிவித்து அந்த ஸமயத்தில் அச்சாகியிருந்த சில பாரங்களைக் காண்பித்தாராம். ஜீயர்ஸ்வாமி அவற்றைக்

மணவாளமாமுனிகளின் வியாக்யானம் அவதரியாதிருந்தால் இந்த க்ரந்தம் தோன்றியும் நிஷ்ப்பலம் என்று மஹான்கள் கூறுவர். அப்படிப்பட்ட இந்த மஹாக்ரந்தம் முதன்முதலாகத் தெலுங்கு லிபியில் 1876-ஆம் வருஷத்தில் அச்சிடப்பட்டது. [இற்றைக்கு எண்பது வருஷங்களுக்கு முன்பு அச்சிடப்பட்டதென்கை.] அந்தப்பதிப்பில் மூலத்திலும் வியாக்கியானத்திலும் காணப்படுகிற பிழைகள் அபரிமிதம். மூலத்திலுள்ள பிழைகளையெல்லாம் விபுலமான விவரணத்துடன் நாம் பலகால் எடுத்துக் காட்டி வெளியிட்டிருக்கிறோமாதலால் இப்போது மூலத்தை விட்டு வியாக்யானத்தைப்பற்றி மாத்திரமே சில விஷயங்கள் விஜ்ஞாபிக்கப்படுகின்றன. மேலே ப்ரஸ்தாவித்த தெலுங்குபதிப்பில், அக்ஷரங்கள் மாறாடினவை பதங்கள் மாறாடினவை வாக்யங்கள் விட்டுப்போனவை........ இப்படிப்பட்ட அவத்யங்கள் அனேகம் புகுந்தன. ஸ்தாலீபுலாக ந்யாயேந ஸ்வல்பம் காட்டுவோம்; எட்டாவது சூர்ணையின் வியாக்யான முடிவில் "இருவல்லருள் நல்வினைகளென்றது இருள் நல்வினையும் அருள் நல்வினையும் என்றபடி" என்றுள்ளது. இது அஸங்கதம். "இருநல்வினையும் அருள் நல்வினையுமென்றபடி" என்றிருக்கவேணும். பதினோராவது சூர்ணையின் வியாக்கியானத்தில் "ஒண்பொருள் பொருளல்லாதவை யென்னாதே" என்கிற மூலத்திற்குச் சேர "ஆத்மாவின் சீர்மை பாராதே" என்றும் "அசித்தின் சிறுமை பாராதே" என்றும் மணவாளமாமுனிகள் ஸாதித்திருக்க, இரண்டிடத்திலும் (சீர்மை பாராதே) என்றே பதிப்புள்ளது. ஆத்மாவுக்குச் சீர்மையுண்டு; அசித்துக்குச் சிறுமையேயொழிய சீர்மை கிடையாது. அச்சிட்டவர்கள் [பரிசோதித்தவர்கள்] மஹாபண்டிதர்களேயொழிய ஸாமாந்யர்களல்லர். அவர்களுடைய மனதிலும் அநுபபத்தி தோன்றாமலே இப்படி அஸம்பத்தமாக அச்சிட்டுவிட்டார்கள். அந்த தெலுங்கு பதிப்பையே ஆதாரமாகக்கொண்டு 1906 ஆம் வருஷத்தில் (அதாவது இற்றைக்கு 50 வருஷங்களுக்கு முன்) ஒரு பண்டிதர் அந்த ஸ்ரீ கோசத்தைத் தமிழ் லிபியில் அச்சிட்டார். மேலே காட்டின வகையில் ஏற்பட்ட பிழைகளையெல்லாம் அந்த பண்டிதரும் தமது பதிப்பில் பரிபாலனம் செய்திருக்கிறாரேயொழிய ஒன்றையும் திருத்தினவரல்லர். அதிகப்படியான பிழைகளையும் புகுத்தினார் என்றும் சொல்லலாம். இப்படிப்பட்ட ஸ்ரீ கோசங்களை வைத்துக்கொண்டு ப்ரவசனம் செய்து போருகிற காலக்ஷேபபரர்கள், ஸ்பஷ்டமாக அநுபபத்தி தோன்றக்கூடிய இடங்களிலும் அது தோன்றப்பெறாமல் பதிப்பிலிருக்கிறபடியே ப்ரவசனம் செய்து போரக் காண்கிறோம். 'இது அஸங்கதமல்லவா? அநுபபந்நமல்லவா?" என்று விவேகிகள் கேட்டுவிட்டால் சீறிச்சிவந்த கண்ணினராய் "பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளை அஸங்கதமென்றும் அநுபபந்நமென்றும் தூஷிக்கிறாயே பாவீ!" என்று திக்திக்கத் தலைப்படுகிறார்கள். அச்சுப்பிழையென்று கூறினால் பூர்வாசார்யர்களின்மேல் குறை கூறுவதாக அர்த்தம் செய்துகொண்டு சீறுபவர்களைப்பற்றி என் சொல்லுவது.

இந்த ஆசார்யஹ்ருதயவியாக்யானம் தமிழ்லிபியில் 1906 ஆம் வருஷத்தில் அச்சிடப்பட்டதென்று கீழே தெரிவித்திருக்கிறோம். ஸ்ரீமாந் உ. வே. திருநீர்மலைமாடபூசி ஸ்ரீநிவாஸராகவாசார்ய ஸ்வாமியென்பவர் அந்த தமிழ்ப்பதிப்பு வெளியிட்டவர். அஸ்மதாசார்யரான ஸ்ரீமத் பரமஹம்ஸ அழகியமணவாள ராமாநுஜஜீயர்ஸ்வாமி 1905 ஆம் வருஷத்தில் ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமியை ஸேவிக்கத் திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருந்தபோது மேலேசொன்ன திருநீர்மலை ஸ்வாமியானவர் ஸ்ரீ ஜீயர்ஸ்வாமியிடம் வந்து, தாம் ஆசார்யஹ்ருதய வியாக்யானத்தைத் தமிழ் லிபியில் அச்சிட்டுக்கொண்டிருப்பதாகத் தெரிவித்து அந்த சமயத்தில் அச்சிலிருந்த சில பாரங்களைக் காண்பித்தாராம். ஜீயர்ஸ்வாமி அவற்றைப்

கடாக்ஷித்தருளி "தேவரீர் லோகோபகார புத்தியினால் அபரிமிதமான பொருளைச் செலவு செய்து நடத்துகிற இந்தப் பதிப்பில் பலவிதமான பிழைகள் காண்கிறதே; ஸம்ப்ரதாயத்திலும் தமிழிலக்கண நூல்களிலும் பரிசயமுள்ள மஹான்களைக் கொண்டு இது செய்தால் நன்றாயிருக்கும்; (இவைத்துக்கு, அவைத்துக்கு) என்று இப்படியெல்லாம் அஸம்பத்தமாக அச்சிட்டிருக்கிறீரே; தமிழில் (இவைத்துக்கு, அவைத்துக்கு) என்கிற சொற்கள் கிடையாதே." என்று சில விஷயங்கள் ஹிதமாக ஸாதித்தாராம். அதுகேட்ட அந்த திருநீர்மலை ஸ்வாமிக்கு அபரிமிதமான சீற்றம் உண்டாயிற்றாம்; எனக்கு ஸம்ப்ரதாயம் தெரியாதென்றும் தமிழ் தெரியாதென்றும் இந்த ஜீயர் ப்ரசாரம் செய்யப்பார்க்கிறார் என்று கடுஞ்சொற்களைப் பொழிந்துகொண்டே எழுந்து சென்றாராம். பிழைகளை ஸ்பஷ்டமாக எடுத்துக் காட்டினாலுங்கூட இங்ஙனே சீறிச்சினந்து சிந்திப்பவர்களே உலகில் மலிந்திருக்கிறார்கள்.

61. அந்த ஸமயத்தில் அந்த திருநீர்மலை ஸ்வாமி தாம் பதிப்பித்துக்கொண்டிருந்த ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்தில் இரண்டாம் ப்ரகரணம் முழுவதும் நடந்து கொண்டிருந்ததாம். * பந்து கழல் பாவை * இத்யாதியான சூர்ணிகையின் வியாக்கியானம் முடியுமிடத்தில் தூதையாவது சிறு சோறடுகைக்கு உபகரணமாகையாலே" என்கிற ஸ்ரீஸூக்திக்குமேல் (முந்தின தெலுங்குபதிப்பில்) ஸூக்ஷ்ம பங்க்திகள் அடியோடு விட்டுப் போயின. திருநீர்மலைஸ்வாமியின் தமிழ்ப் பதிப்பிலும் அப்படியே விட்டிருந்தனவாம். அவற்றை ஸ்ரீ ஜீயர்ஸ்வாமி எழுதிக்கொடுத்தருளி "இந்த பங்க்திகள் அவச்யம் இருக்கவேண்டியவை; இதையாவது சேர்த்தால் நன்றாயிருக்கும்" என்று சொல்லியனுப்ப, "நான்வைத்துக் கொண்டிருக்கிற ஓலையேட்டிலும் இந்த பங்க்திகள் இல்லை; எந்த ஆதாரத்தைக் கொண்டு இதை நான் சேர்ப்பது?" என்று ப்ரபலமாக ஆக்ஷேபிக்க, பிறகு மஹதாப்ரயாஸேந சேர்க்கும்படி செய்தருளினதாக ஜீயர்ஸ்வாமி ஸாதிக்கக் கேட்டிருக்கை. இங்கே, முந்தின தெலுங்குபதிப்பில் விட்டுப்போய் பிந்தின தமிழ்ப்பதிப்பில் சேர்க்கப்பட்ட பங்க்திகளாவன; — (தூதையாவது சிறு சோறடுகைக்கு உபகரணமாகையாலே) என்பதற்குமேல்—

"இந்த்ரிய வ்யதிரிக்தங்களான போகோபகரணங்களுக்கு உபலக்ஷணம்; போகஸ்தானமான தேஹத்தையும் போகோபகரணமான இந்த்ரியங்களையும் பந்துகழலித்யாதியாலே லீலோபகரணமாகச் சொல்லுகிறது. லீலையாவது தாதாத்விகரமான வ்யாபாரமாகையாலே"

என்றிவ்வளவுபங்க்திகள். இந்த பங்க்திகள் இல்லாவிட்டால் அவ்விடத்து ஸ்ரீஸூக்தியை நிர்வஹிக்கவேமுடியாதென்பது ப்ராஜ்ஞர்களுக்குத் தெரியும். பழைய தெலுங்கு பதிப்பை வைத்துக்கொண்டு ப்ரவசனம் செய்தருளும் மஹான்கள் இங்கு விட்டுப்போனபங்க்திகளால் ஒருகுறையையுமுணராமல், அந்வயிக்கவில்லையேயென்கிற க்லேசமும் படாமல் அநாயாஸமாகக் காலக்ஷேபம் நிர்வஹித்து வருகிறார்கள்.

ஜாகதீசீயம் பஞ்சலக்ஷணீ, சதுர்தசலக்ஷணீ முதலான க்ரந்தங்களின் அச்சுப் பதிப்புகளில் பல விபர்யாஸங்களுண்டு; க்ரந்த மெழுதினவர் (........அவச்சிந்ந) என்று சில விடங்களிலும் (........அநவச்சிந்ந) என்று சிலவிடங்களிலும் எழுதியிருப்பதுண்டு. அச்சில் அவை மாறிவிழுந்திருக்குமிடங்கள் சிலவுண்டு. (அவச்சிந்ந) என்றிருக்க வேண்டுமிடத்தில் (அநவச்சிந்ந) என்றும், (அநவச்சிந்ந) என்றிருக்க வேண்டுமிடத்தில் (அவச்சிந்ந) என்றும் விழுந்திருக்கிறது. சாஸ்திரவ்யுத்பத்தியும் ஆழ்ந்த அறிவும் பெற்று ப்ரவசனம் செய்பவர்கள்

ருஜுவாக அந்வயிக்கவில்லையே யென்று க்லேசப்பட்டு, ஆலோசித்து, இங்கு அச்சுப்பிழையுள்ளதென்று தெளிந்து திருத்தி ப்ரவசனம் செய்து போருவர்கள். "சதுச்சாஸ்த்ரங்களில் எந்த க்ரந்தத்தையும் நாம் அவலீலையாக ப்ரவசநம் செய்யவல்லோம்" என்றிருக்கும் சில மஹாமதிகள் மேலே காட்டின அவச்சிந்ந—அநவச்சிந்ந—விபர்யாஸங்களில் சிறிதும் க்லேசப்படாமலும் மயங்காமலும் அங்குலீந்ருத்தஸாரர்களாய் வெகு அட்டஹாஸத்தோடு, ப்ரவசனம் செய்தே போவர்கள்; இங்குப் பிழையுள்ளதென்று கண்டறியவேமாட்டார்கள். ப்ராஜ்ஞர்கள் எடுத்துரைத்தாலும் இது விச்வாமித்ரஸ்ருஷ்டியென்று ஏசி நிற்பர்கள். இவ்விதமாகவே ஸம்ப்ரதாயக்ரந்தங்களிலும் நேர்ந்திருக்கிற விபர்யாஸங்களை ப்ராமாணிகர்கள் எடுத்துக்காட்டினால் "மூர்க்கச்ச மகரச்சைவ க்ருஹீதக்ராஹிணாவுபௌ" என்றிருக்கும் சில அதிகாரிகள் வீணான ஆக்ஷேபங்களைச்செய்து போது போக்குவது தவிர, சுவைகண்டு மகிழ பாக்யமற்றவர்களாகிறார்கள்.

62. ஆசார்யஹ்ருதயத்தில் நான்காம் ப்ரகரணத்தில் "மூன்று தத்துக்குப் பிழைத்த அருவினை நோய்" என்றவிடத்து வியாக்கியானத்தில் பழைய தெலுங்கு தமிழ்ப்பதிப்புகளிரண்டிலும் விட்டுப்போன பங்க்திகள் ஏட்டுப்ப்ரதிகளிலிருந்து ப்ரகாசிதமாயிருப்பதற்கு க்ருதஜ்ஞதாநுஸந்தானம் பண்ண ப்ராப்தமாயிருக்க, அது செய்யாததோடு ஆக்ஷேபிக்கவும் முன்வந்திருக்கும் மஹாநுபாவர்கள் "நதே திரஸ்கரணீயா: [illegible] பரா அநீயா:" என்று ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் பட்டர் அருளிச்செய்த கணக்கிலே சோசநீயர்களத்தனை. *வளவேழுலகு திருவாய்மொழியில் ஆழ்வார் நைச்யாநுஸந்தானம் பண்ணி அகன்று முடியப் பார்த்தார் என்பது விஷயம். அதற்கு 'தத்து' என்று பெயர் வைக்கப்பட்டது. இந்த தத்தானது *வளவேழுலகு திருவாய்மொழியில் இரண்டு நடை நேர்ந்ததென்று கொள்ளவேண்டியதானது ஸமஞ்ஜஸமானதாகாது; முதலிரண்டு பாட்டிலே அது தோன்றிக் கழிந்து மறுபடியும் தலைகாட்டியிருந்தாலுங்கூட அந்தப் பதிகத்திற்கு அதுதான் ப்ரமேயமென்று கொள்ளப்பட்டிருக்கையாலே அதில் இரண்டு தத்து என்று கொள்ளுவது ஒருநாளும் ஸங்கதமாகாது. திருவாய்மொழி நூற்றந்தாதியில் *தளர்வுற்று நீங்க நினைமாறனைமால் நீடிலகு சீலத்தால், பாங்குடனே சேர்த்தான் பரிந்து* என்று ஸாராம்சத்தை யருளிச்செய்திருக்கையாலே எம்பெருமான் தனது சீலகுணத்தைக்காட்டி ஆழ்வாரைப் பொருந்த விட்டுக்கொண்டதுதான் அந்தப்பதிகத்திற்கு ப்ரமேயம் என்று விளங்காநிற்கச் செய்தேயும், (அதாவது, எம்பெருமானுடைய சீலகுணவிசேஷத்தை யநுபவிப்பதுதான் இத்திருவாய்மொழிக்கு ப்ரதாந ப்ரமேயமென்று விளங்காநிற்கச் செய்தேயும்) வியாக்கியானங்களில் *வளவேழுலகுதலையெடுத்து* என்று அடிக்கடி யருளிச்செய்யப்படுவதை நோக்குமளவில், ஆழ்வார் நைச்யாநுஸந்தானம் பண்ணிப் பின்வாங்கப் பார்ப்பதுதான் இத்திருவாய்மொழிக்கு ப்ரமேயமென்கிற கொள்கை சிறப்புற்றதாகத் தெரியவருகின்றது. அது இத்திருவாய்மொழியில் ஒருவிசையன்று, இரண்டு விசை என்று சொல்லுவதானது மிகவும் அஸமஞ்ஜஸம். *வைகுந்தன் வந்து கலந்ததற்பின் வாழ்மாறன் செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து* என்கிற திருவாய்மொழி நூற்றந்தாதியின்படியும், இதற்கு மூலமான ஈட்டு ஸ்ரீஸூக்தியின்படியும் இரண்டாவது தத்து வேறென்று தேறியிருக்க, அதை விட்டொழிப்பது ஸாஹஸம் அநுசிதம். எல்லாவற்றுக்கும் மேலாக, சுத்தமான ஏட்டுப் ப்ரதிகளில் கண்ட பாடத்திற்குக் கண்ணழிவு சொல்லவொண்ணாதென்பது முக்கியமான ஹேது. பங்க்திகள் விட்டுப்போன

அச்சுப்புத்தகத்தைப் பரமப்ராமாணிகமென்று கொண்டு அஸ்தானே ப்ரத்யவஸ்தானம் பண்ணுவது தகாது. தங்களுக்குப்பாடம் கிடைக்கவில்லையென்கிற காரணத்தினால், பிறர்க்குக்கிடைத்திருக்கின்ற பாடத்தை ஆக்ஷேபிக்கப்புகுவது மிகவும் ஸாஹஸம். ஸ்வயம் அம்ருதபானம் பண்ண பாக்கியமில்லாதவர்கள் அம்ருதத்தையே தூஷிக்கப்புகுவதுமுண்டோ?

63. ஜகத்காரணத்வஹேதுநிரூபணம்; ஈச்வரனே ஜகத்துக்குக்காரணம் என்பது வேதாந்திகளின் கொள்கை. ஜகத்தை ஈச்வரன் ஸ்ருஷ்டிக்குமளவில் ஸ்வேச்சையாலே ஸ்ருஷ்டிக்கிறானேயொழிய வேறு ஹேதுக்களாலே ஸ்ருஷ்டிக்கிறானல்லன். ஸ்ருஷ்டியைக்குறித்து வேறு ஹேதுக்கள் எவை இருக்கக்கூடும் என்று பார்க்குமளவில், நம் ஆசார்யர்கள் சில ஹேதுக்களைக் காட்டுகிறார்கள் — அவித்யை, கர்மம், பரநியோகம் என்றுமிவை. இவை எம்பெருமான் செய்யும் ஸ்ருஷ்டியைக்குறித்துக் காரணமாகச் சொல்லப்படுகின்றனவல்ல; ஸாமாந்யமாக இதரர்கள் செய்யும் ஸ்ருஷ்டியைக் குறித்து இவை காரணமாகக் கூடியவையென்றும் எம்பெருமான் செய்யும் ஸ்ருஷ்டிக்கு இவை காரணமல்லவென்றும் தத்வத்ரயம் முதலான க்ரந்தங்களில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இதரர்கள் செய்யும் ஸ்ருஷ்டியில் அவித்யையும் கர்மமும் பரநியோகமும் காரணமாகிறபடி எங்ஙனே யென்னில், உலகத்திலே ஒன்றையொன்று உண்டாக்குவதாகக் காண்கிறோம். அப்படியுண்டாக்குவதற்கு எது காரணமாகிறதென்னில், அவித்யையும் கர்மமும் காரணமாகிறது. விஷயாந்தர ப்ராவண்ய ஹேதுவான அஜ்ஞானத்தாலும் கர்மத்தாலும் ஒன்றையொன்று உண்டாக்கக் காண்கிறோம். அதிகாரி புருஷர்களான பிரமன் முதலானோர் பகவானுடைய கட்டளையினால் ஸ்ருஷ்டி செய்கையாலே அவர்களின் காரணத்வத்துக்கு பரநியோகம் காரணமாகிறது. எம்பெருமான் செய்யும் ஸ்ருஷ்டிக்கு இவை காரணமல்ல; ஸ்வேச்சையே காரணமென்றது.

இதரர்கள் செய்யும் ஸ்ருஷ்டிக்குக் காரணமாகக் கூடியவை அவித்யா கர்ம பரநியோகங்களாகிற இவைமாத்திரமேயோ? இன்னும் எதேனுமுண்டோ? என்று விமர்சித்த ஆசார்யர்கள் இன்னுமொன்றுண்டு என்று கூறியிருக்கிறார்கள். அது எதுவென்னில்; தத்வத்ரய வியாக்யானத்தில் (ஈச்வரப்ரகரணத்தில்-20). "அவர்ஜநீயமான ரோகமோ" என்றுள்ளவிடத்தில் விசாரம். ரோகம் என்று சில ஸ்ரீகோசங்களிலும், ராகம் என்று சில ஸ்ரீகோசங்களிலும் காண்கிறது. இவற்றில் எது உபயுக்தமென்று பார்ப்போம். ரோகம் என்பதே உபயுக்தமென்று சிலர் சொல்லுவதால் அந்த பாடத்தின்படியே வைத்து உபபத்தியை விமர்சிப்போம். அவித்யாகர்ம நிபந்தமான காரணத்வம் எப்படி ஸகல ஜந்துக்களிடத்திலும் ஸித்திக்கிறதோ அப்படியே ரோக நிபந்தமான காரணத்வமும் ஸித்திக்கக் குறையில்லை. ரோகமுள்ளவன் வயிற்றிலே க்ரிமிகீடங்களுண்டாவதை எங்கும் காணுகின்றோம். ஆகவே காரணத்வத்தைக் குறித்து ரோகத்தையும் ஒரு காரணமாகச் சொல்லலாம்; ஏவஞ்ச ரோகமென்கிற பாடம் கொள்ளத்தக்கதே யென்னலாம்.

64. இங்கே மஹாமதிகள் கூறுவதென்னவென்றால், (அவர்ஜநீயமான) என்கிற விசேஷண ஸமபிவ்யாஹாரத்தினால் இங்கு உண்மையை நிஷ்கர்ஷிக்கலாம். கீதையில் மூன்றாமத்யாயத்தில் (34) * இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ * என்ற ச்லோகத்தில் ஸ்ரீராமாநுஜபாஷ்யத்தில் "[illegible] அவர்ஜநீய:" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. அதையடியொற்றியே (அவர்ஜநீயமான ராகம்)

என்கிற ஸ்ரீ ஸூக்தி தோன்றியது. ஸ்ரீமத் கோவர்த்தநம் ரங்காசார்யர் ஸ்வாமி ஸம்ஸ்க்ருத பாஷையில் அநுவாதம்செய்து தேவநாகரலிபியில் அச்சிட்டிருக்கிற தத்வத்ரய வியாக்கியானத்தில் “ஸவர்ஜநீயோஹோ ஹ:” என்கிற பாடம் காண்கிறது. ஸவர்ஜநீயோ ரோக: என்பது கீழே பாடாந்தரமாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. “ஜந்மாந்தரக்ருதம் கர்ம வ்யாதிரூபேண பாததே” என்கிறபடியே கர்மமும் வ்யாதியும் ஒருவாறு அநதிரிக்தமாகையாலே ரோகமென்கிற பாடத்தில் ஔசித்யமில்லை. ராக மென்கிறபாடத்திலும் அநதிரிக்தத்வவாதம் சிலர் செய்வதுண்டு. அவர்களுக்கு நாம் ஒன்று தெரிவிக்க விரும்புகிறோம். ஆசார்யஹ்ருதயத்தில்-(69) *உதாத்தாதி பதக்ரமேத்யாதி சூர்ணையில் “எழுத்தசை சீர்ப்பந்தம் அடிதொடை நிரை நிரை யோசை தளையினம் யாப்புப் பாத்துறை” இத்யாதியை விவரித்தருளாநின்ற மணவாளமாமுனிகள் “பந்தமும் தளையுமொன்றாகையால் புநருக்தமாகையாலே இரண்டத்தொன்று வர்ஜிக்கவேணும்” என்றும், “துறையென்கிறவிதுவும் இனத்தின் வகையிலொன்றாகையாலே புநருக்தமாம்” என்றும் அருளிச்செய்திருக்கக்காண்கிறோம். “இரண்டத்தொன்று வர்ஜிக்கவேணு” மென்று ஸ்வாமி ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருந்தும் ஒன்றையும் வர்ஜிக்கக் காண்கிறிலோம். ஸூக்ஷ்மேக்ஷிகையினால் அநதிரிக்தமாயிருந்தாலும் ஸ்தூலத்ருஷ்டியில் அதிரிக்தமேயென்று கொள்ளத் தட்டில்லை. ரோகமென்கிறபாடத்தை யாதரிக்க விரும்புமவர்களை யாரும் தடைசெய்திலர். இதைப்பற்றி அந்யத்ர விரிவாக எழுதியுள்ளோமாதலால் இங்கு ஸம்க்ஷிப்தமானபடி. மேலே காட்டின கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியின்படி (அவர்ஜநீயமானராகம்) என்கிற பாடத்திற்கே ஔசித்யாதிசயமுள்ளது. (*)





Released by Maaran's Dog , Toronto , Canada

ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியருடைய
அறுபத்துநான்கு நல்வார்த்தைகள்
முற்றுப்பெற்றன.